**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதி வடிவமைப்பும்**

**(13-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டு வரை)**

முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக
சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

***கூ. லதா,*** பி.லிட்., எம்.ஏ., எம்.ஃபில்.,

மேற்பார்வையாளர்

***முனைவர் வ.ச. அபிராமவல்லி,*** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் – தமிழ்த்துறை
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 008






## தமிழ்த்துறை

எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 008



டிசம்பர் - 2018

***முனைவர் வ.ச. அபிராமவல்லி,*** எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் – தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 008.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (13-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டு வரை)** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காக, திருமதி **கூ. லதா** 2012–2017ஆம் கல்வியாண்டில் நிகழ்த்திய ஆய்வேடாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு ஆய்வு பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப் பெறவில்லை எனவும் இந்த ஆய்வு அவர் தம் சொந்த முயற்சியால் உருவானது எனவும் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை | **(வ.ச. அபிராமவல்லி)**
நாள் : | மேற்பார்வையாளர்

**கூ. லதா,** பி.லிட்., எம்.ஏ., எம்.ஃபில்.,
முழு நேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
எத்திராஜ் மகளிர் கல்லூரி (தன்னாட்சி),
சென்னை – 600 008.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (13-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டு வரை)** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்படிப்பிற்காக ஆய்வு பேராசிரியர் முனைவர் **வ.ச. அபிராமவல்லி** அவர்கள் மேற்பார்வையில் எத்திராஜ் மகளிர் கல்லூரி, தமிழ்த்துறையில் 2012–2017 வரை ஆய்வு நிகழ்த்தப்பட்டது. இந்த ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இதற்கு முன் இந்த ஆய்வேடு வேறு எந்த பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : சென்னை **(கூ. லதா)**
நாள் : ஆய்வாளர்

# நன்றியுரை

**சித்தர் பாடல்கள் - ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (13-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டு வரை)** என்னும் தலைப்பில் ஆய்வு செய்வதற்கு இசைவு அளித்ததோடு, ஐயங்களுக்கு நன்முறையில் விளக்கம் அளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எத்திராஜ் மகளிர் கல்லூரியில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர் (பிஎச்.டி.) படிப்பினை மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்த கல்லூரி மேனாள் முதல்வர்கள் முனைவர் **ஜோதி குமரவேல்** அவர்களுக்கும், முனைவர் **அ.நிர்மலா**, முனைவர் **ரேவதி** அவர்களுக்கும் இந்நாள் கல்லூரி முதல்வர் முனைவர் **சு. புவனேசுவரி** அவர்களுக்கும் மற்றும் கல்லூரி நிர்வாகக் குழுவினர்க்கும் என் பணிவு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எத்திராஜ் மகளிர் கல்லூரி தமிழ்த்துறையில் எனது ஆய்வினை நிகழ்த்த வாய்ப்பளித்த மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **எம். நித்யகல்யாணி** அவர்களுக்கும் முனைவர் **ந. அங்கயற்கண்ணி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என் ஆய்வின் போது ஆய்வினை விரைந்து முடிப்பதற்கு என்னை ஊக்கப்படுத்தியும் தூண்டுகோலாகவும் இருந்த இந்நாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் **சு. புவனேசுவரி** அவர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனக்கு ஆய்வுத்தலைப்பின் கீழ் ஆய்வு நிகழ்த்தத் தேவையான ஆலோசனைகளை வழங்கி என்னை நெறிப்படுத்தி ஆய்வினைச் செம்மையுற முடிப்பதற்கு நல்வழிகாட்டியாகவும் செயல்பட்டு எந்நேரம் ஆயினும் எனக்கு உறுதுணையாக நிற்கும் அன்னையாகவும் சிறந்த முறையில் வழிநடத்திச் சென்ற நெறியாளர் முனைவர் **வ.ச. அபிராமவல்லி** அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு செம்மையாக நிகழ ஆய்வு சார்ந்த நூல்களையும், கருத்துகளையும் வழங்கியதோடு ஆய்வேட்டினைச் செம்மைப்படுத்திய மாநிலக் கல்லூரி இணைப்பேராசிரியர் முனைவர் **ஜே.ஆர். இலட்சுமி**

அவர்களுக்கும் என்றும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இவ்வாய்விற்கு உதவிய இணைப்பேராசிரியர்கள் முனைவர் **த.வசந்தாள்** அவர்களுக்கும் முனைவர் **வே. சீதாலட்சுமி** அவர்களுக்கும், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையின் தகைசால் பேராசிரியர் முனைவர் **வ.ஜெயதேவன்** ஐயா (அகராதித்துறை) அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர் பெருமக்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணிக்குப் பெரிதும் துணை நின்ற முனைவர் **அ. வனிதா** அவர்களுக்கும், ஆய்வுக்குத் தேவையான உதவிகளைச் செய்த முனைவர் **ப. வனிதா** அவர்களுக்கும் மற்றும் கணவர் **த. தினகரன்** அவர்களுக்கும் எனது மகன் **தி. திராவிட இலக்கியனுக்கும்** என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மேலும் ஆய்வுப் பணிக்குத் துணை நின்ற எனது பெற்றோர் **ம.கூத்தப்பன், கூ. பட்டம்மாள்** அவர்களுக்கும், **ம. ஜோதி**, **மணி**, **கலா**, **யுவராஜ்**, **ராம்நாத்**, **நிஷா**, **ஜெய்குமார், தி. ரவி** மற்றும் எனது உறவினர்களுக்கும், இவ்வாய்விற்காக உதவி புரிந்த என் தோழிகள் **ஜெ. மகாதேவி**, **த. ஜெயந்தி**, **ரா. சுபா** மற்றும் முனைவர்பட்ட ஆய்வு மாணவிகள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்கள் வழங்கிய **எத்திராஜ் மகளிர் கல்லூரி நூலகம், கன்னிமாரா நூலகம், சென்னைப் பல்கலைக்கழக நூலகம், தேவநேயப் பாவாணர் நூலகம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்** ஆகிய அனைத்து **நூலகங்களுக்கும்** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டைச் சிறந்த முறையில் வடிவமைத்துத் தந்த **டுடே கிராஃபிக்ஸ் உரிமையாளர் திரு. ரெ.** பாபு மற்றும் திருமதி **வி. ஷீலா** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வு சிறந்த ஆய்வேடாக உருவாக ஆய்வு நன்முறையில் நிகழ உதவிய அனைத்து உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றி.

**கூ. லதா**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகப்.சி. | – | அகப்பேய்ச் சித்தர் |
| அழு.சி. | – | அழுகணிச் சித்தர் |
| இடை.கா.சி.பா. | – | இடைக்காட்டுச் சித்தர் பாடல்கள் |
| கடு.சி. | – | கடுவெளிச்சித்தர் |
| குதம்பை.சி. | – | குதம்பைச்சித்தர் |
| காளை.சி. | – | காளைச்சித்தர் |
| பாம்பு.சி. | – | பாம்பாட்டிச்சித்தர் |
| இராம.சி. | – | இராமதேவர் சித்தர் |
| உரோம.சி. | – | உரோமரிஷிசித்தர் |
| கணபதி.சி. | – | கணபதிச்சித்தர் |
| காக.பு.சி. | – | காகபுசுண்டர்சித்தர் |
| சட்டை.சி. | – | சட்டைமுனிசித்தர் |
| சுப்பிர.சி. | – | சுப்பிரமணியர் சித்தர் |
| காரை.சி. | – | காரைச்சித்தர் |
| தடங்கண். | – | தடங்கண்சித்தர் |
| மதுரை.சி. | – | மதுரைவாலைச்சாமி |
| பீருமுகமது. | – | பீருமுகமது |
| சூரியா.சி. | – | சூரியானந்தர் |
| ஆ.க. | – | ஆனந்த களிப்பு |
| இ.மு. | – | இருமுறை |
| இ.சொ. | – | இடைச்சொல் |

| | | |
|---|---|---|
| ஊர்.ப.ர. | – | ஊர்வசி பஞ்ச ரத்தினம் |
| கா. | – | காப்பு |
| சு.பெ. | – | சுட்டுப்பெயர் |
| தா.கோ.கூ. | – | தாண்டவராயக் கோனார் கூற்று |
| தொல். வினை. | – | தொல்காப்பியம் வினை இயல் |
| தொல். சொல். | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல். பெயர். | – | தொல்காப்பியம் பெயரியல் |
| நன். சொல். | – | நன்னூல் சொல்லதிகாரம் |
| நா. மு. | – | நான்கு முறை |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பா. | – | பாடல் |
| ப. ஆ. | – | பதிப்பாசிரியர் |
| தொ. ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| பெ. | – | பெயர்ச்சொல் |
| பெ. அ. | – | பெயரடை |
| மூ. மு. | – | மூன்று முறை |
| மேலது. | – | மேற்குறிப்பிட்ட நூல் |
| அக.அ.க. | – | அகத்தியர் அமுத கலைஞானம் |
| போ.ஜ.சா. | – | போகர் ஜனன சாகரம் |
| யோக.ஞான.சாஸ் | – | யோக.ஞான.சாஸ்திர திரட்டு பா.8 |
| போ. ஏழா. | – | போகர் ஏழாயிரம் |

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ்ச்சமூகம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகத்தில் சிறந்து விளங்கியுள்ளது. மக்கள் நாகரிகமாக வாழ்வதற்குப் பல்வேறு நெறிகளைப் பின்பற்றினர். சித்தர் என்னும் சிறப்பிற்குரியவர் காலந்தோறும் வெவ்வேறு நாடுகளில் தோன்றியுள்ளனர். வாழ்வியல் நெறிகளைப் பின்பற்றுவதற்கு அறிவுத்துறையில் மேலோங்கியிருந்த சித்தர்கள் மக்களுக்கு வழிகாட்டியாக இருந்தனர். அவர்கள் இலக்கியம், சோதிடம், மருத்துவம், வானவியல், கணிதம், மாந்தரிகம், யோகம், ஞானம், தந்திரம் முதலியவற்றைக் கற்றறிந்திருந்தனர். மேலும் சமயம், சடங்குகள் சிலவற்றைத் தழுவியும் பலவற்றை மறுத்தும் தமது உள்ளுணர்வால் தெளிந்த உண்மைகளை வாய்மொழியாகவும், பாடல்களாகவும், வழங்கியுள்ளனர்.

சித்தம் போக்கு சிவன் போக்கு என்னும் பழமொழி அவர்கள் உலகியல் வாழ்வியல் கண்டு எழுந்ததே ஆகும். சித்தர்கள் காலந்தோறும் வாழ்ந்துள்ளனர். அச்சித்தர்களின் வரலாற்றையும், வாழ்வியலையும் அறிவது இன்றியமையாததாகும். மேலும் அவர்களின் பாடல்களில் பல சொற்களின் பொருள் மறைமுகமாகவே இருக்கின்றன. எனவே அவர்கள் பாடிய பாடல்களில் உள்ள சொல்லுக்குப் பொருளை ஆய்ந்து அதற்கான விளக்கத்தையும், அகராதி அமைப்பில் சித்தர் பாடல்கள் – ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (13–ஆம் நூற்றாண்டு முதல் 19 ஆம் நூற்றாண்டு வரை) என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்வதாக அமைகிறது.

**ஆய்வு தலைப்பு**

சித்தர் பாடல்கள் – ஆய்வும் அகராதி வடிவமைப்பும் (13–ஆம் நூற்றாண்டு முதல் 19–ஆம் நூற்றாண்டு வரை) என்பது ஆய்வின் தலைப்பாக அமைகிறது.

**ஆய்வு எல்லை, ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட சித்தர்கள்**

சித்தர்கள் எண்ணிக்கையில் பலராக இருந்த போதிலும் அவர்களில் அகப்பேய்ச்சித்தர், அழுகணிச்சித்தர், இடைக்காட்டுச்சித்தர், கடுவெளிச்சித்தர், குதம்பைச் சித்தர், காளைச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், சுந்தரானந்தர், இராமதேவர், உரோமரிஷி, கணபதிதாசர், காகபுசுண்டர், சட்டைமுனி சித்தர், சுப்பிரமணியர், காரைச்சித்தர், தடங்கண்சித்தர், மதுரைவாலைச்சாமி, பீருமுகமது, சூரியானந்தச்சித்தர் ஆகிய சித்தர்களின் பாடல்கள் நூற்றாண்டை அடிப்படையாகக் கொண்டு ஆய்வு எல்லையாக வரையறுக்கப்பட்டுள்ளது.

**ஆய்வு ஆதாரங்கள்**

1. முதன்மை ஆதாரங்கள்
2. துணைமை ஆதாரங்கள்

**முதன்மை ஆதாரங்கள்**

பூம்புகார் பிரசுரம் வெளியிட்ட சித்தர் பாடல்கள் மற்றும் வர்த்தமானன் பதிப்பகம் வெளியிட்ட சித்தர் பாடல்கள் முதன்மை ஆதாரமாக எடுத்துக் கொள்ளப்பட்டன.

**துணைமை ஆதாரங்கள்**

மீ.ப. சோமு, இரா. திருமுருகன் அவர்கள் எழுதி வெளியிட்ட சித்தர் பாடல்கள், ஆய்வுக் கட்டுரைகள், ஆய்வு நூல்கள், ஆய்வேடுகள் ஆகியவை துணைமை ஆதாரங்கள் ஆகும்.

**ஆய்வு நோக்கம்**

இவ்வாய்வு 13–ஆம் நுற்றாண்டு முதல் 19–ஆம் நூற்றாண்டு வரை உள்ள சித்தர்களின் வாழ்க்கை வரலாறு, அவர்கள் அருளிய நூல்கள், அவர்கள் பாடல்களில் சொற்கள் மற்றும் சொற்களில் அமைந்த பெயர், வினை அமைப்புகள் மற்றும் மொழி நடைக்கூறுகள், சமயக்கூறுகள், இலக்கியக் கூறுகள் ஆகியவற்றை ஆராய்ந்து, சித்தர் பாடல்களில் அமைந்துள்ள சொற்களைப் பிரித்து அவை வரும் இடங்களை எண்களுடன் அகரவரிசைப்படுத்தி, அகராதி வடிவமைப்பை உருவாக்குவதை நோக்கமாகக் கொண்டுள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வு தொகுப்பு முறை, பகுப்பு முறை, விளக்க முறை, வரலாற்று முறை, திறனாய்வு முறை ஆகிய ஐந்து வகையான அணுகுமுறையில் நிகழ்த்தப்பட்டுள்ளது. முதல் இயலான சித்தர்களின் வாழ்வும் வரலாறும் வரலாற்று முறையிலும், மொழிநோக்கு, இலக்கிய நோக்கு, சமய நோக்கு முதலிய இயல்கள் திறனாய்வு முறை, பகுப்பு முறை, விளக்க முறை ஆகிய ஆய்வு அணுகுமுறைகளில் ஆய்வு அமைந்துள்ளன.

**ஆய்வின் முன்னோடிகள்**

சித்தர் பாடல்கள் பல்வேறு ஆய்வாளர்களால் ஆராயப்பட்டுள்ளன. அவற்றுள் அகராதி வடிவமைப்பில் சில ஆய்வுகளே நிகழ்த்தப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு,

**டாக்டர் வ. ஜெயதேவன்** – தமிழ் அகராதியில் வளர்ச்சி வரலாறு 1979 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளித்துள்ளார்.

**முனைவர் அ. செந்தில் நாராயணன்** – அகராதி நோக்கில் தொல்காப்பிய உரைகள் 2010ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளித்துள்ளார்.

**அ. வனிதா** – கயாதர நிகண்டு – ஆய்வும் அகராதி வடிவமைப்பும் என்னும் ஆய்வேட்டை 2005ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்காக அளித்துள்ளார்.

**ஆய்வுப் பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, நிறைவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை வருமாறு,

முன்னுரை

இயல் ஒன்று – சித்தர்களின் வாழ்வும் வரலாறும்

இயல் இரண்டு – மொழி நோக்கு

இயல் மூன்று – இலக்கிய நோக்கு

இயல் நான்கு – சமய நோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடுகள்

நிறைவுரை

**முன்னுரை**

ஆய்வின் அறிமுகமாக அமையும் முன்னுரையில் அகராதி விளக்கம், அகராதி குறித்த ஆய்வுகள், அகராதி மேற்கொண்ட விதம் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

**இயல் ஒன்று**

முதல் இயலில் சித்தர்கள் பற்றிய அறிமுகம், நூற்றாண்டு அடிப்படையில் பிரிக்கப்பட்ட சித்தர்களின் பெயர் பட்டியல் மற்றும் பாடல் எண்ணிக்கைகள், சித்தர்கள் மரபு நாடு தழுவிய நிலை, சித்தர் பாடல் அமைப்பு, ஜீவசமாதி, அவர்கள் பெயர் இருக்கும் நூல்கள், மேலும் சித்தர்களின் வாழ்வும் வரலாறு பற்றி ஆராயப்பட்டுள்ளன.

**இயல் இரண்டு**

மொழி நோக்கு என்னும் இரண்டாவது இயலில் மொழிக்கு முதலில் வரும் சொற்கள், மொழிக்கு முதலில் வராத சொற்கள், பெயர்ச்சொல் வகைகள், வினைச்சொல் வகைகள், இடைச்சொல், உரிச்சொல், இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் ஆகியவை சித்தர் பாடல்களில் அமைந்த சொற்கள் வகைதொகை செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

இலக்கிய நோக்கு என்னும் மூன்றாவது இயலில் சித்தர் பாடல்களில் அமைந்துள்ள சந்த நயம், அணி, உவமை, உருவகம், வருணனை, பிறமொழிச் சொற்கள், ஒலிக்குறிப்புச்சொற்கள், பேச்சு மொழிச்சொற்கள், சொல்லாட்சிகள் ஆகியவை பற்றி விளக்கப்பட்டுள்ளன.

**இயல் நான்கு**

சமய நோக்கு என்னும் நான்காவது இயலில் கடவுள் கோட்பாடுகள், சமய நோக்கில் உயிர், ஆன்மா, உருவவழிபாடு, மூடநம்பிக்கை, நாடி பற்றிய குறிப்புகள் மற்றும் இதன் அடிப்படையில் எழும் கடவுள் கோட்பாடுகள் பற்றிய கருத்துக்களை மறுத்தும் ஆராயப்பட்டுள்ளன.

மேற்கூறிய சித்தர்களின் வாழ்வும் வரலாறும் மற்றும் இவர்களின் பாடல்கள் மூலம் மொழி நோக்கிலும், இலக்கிய நோக்கிலும், சமய நோக்கிலும் இதன் அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மேலே கூறப்பட்ட இயல்களில் இருந்து பெறப்பட்ட முடிவுகள் நிறைவுரையில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

பக்கவரையறை கருதி ஆய்வு மேற்கொள்ளப்பட்ட சித்தர் பாடல்கள் அகர வரிசையில் சொல்லடைவு மேற்கொண்டு பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் களஆய்வில் பதினெண் சித்தர் கோயில், சதுரகிரி, இடைக்காடர் சமாதி, புகைப்படங்கள் இறுதியாக இணைக்கப்பட்டுள்ளன.

சொல்லடைவு செய்யப்பட்டு அறியப்பட்ட சொற்களைக் கொண்டு அதற்கான இலக்கணத்தை அறிந்து பொருள் கொண்ட பொருளகராதி தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

**அகராதி**

அகராதிப் பணி நீண்ட வளர்ச்சியையும் வரலாற்றையும் கொண்டது. இப்பணி கடின உழைப்பையும் நீண்ட கால தேவையையும் உள்ளடக்கியது. இது ஒரு கூட்டுப்பணியாக உள்ளது. எனினும் தொடக்கக்கால அகராதிகள் தனிமனிதர்களால் உருவாக்கப்பட்டவையாகும். பல அகராதிகள் ஆசிரியரின் மறைவுக்குப் பின்னரே வெளியிடப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. அகராதிகள் மொழி, அளவு, காலம் என்பனவற்றின் அடிப்படையில் வகைப்படுத்தப்படுகின்றன. சொல்லுக்குரிய பொருளை விளக்குவதற்கு அகராதிகளில் காலந்தோறும் பல்வேறு உத்திகளும் நெறிமுறைகளும் கையாளப்பட்டு வருகின்றன.

**அகராதி மேற்கொண்ட விதம்**

13 ஆம் நூற்றாண்டு முதல் 19 ஆம் நூற்றாண்டு வரையில் வாழ்ந்த குறிப்பிட்ட சித்தர் பாடல்கள் மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

சொல்லடைவு செய்து அவற்றில் வரும் சொற்களில் பெயர்ச்சொல், வினைச்சொற்களைக் கொண்டு அகராதி உருவாக்கப்பட்டுள்ளது.

சொற்களை அடைவு செய்யும் பொழுது பல சொற்களுக்குப் பொருள் மயக்கம் ஏற்பட்டதாலும், சித்தர்களின் சொற்களில் இரு வேறுபட்ட பொருள் அமைந்திருப்பதாலும் சொல்லடைவு செய்வதில் கடினம் ஏற்பட்டது. ஆகையால் சித்தர் பாடல்களில் மயக்கம் ஏற்படும் சொற்களை விடுத்து, பொருள் விளங்கும் சொற்களுக்கு மட்டும் விளக்கம் தந்து அகராதி உருவாக்கப்பட்டு ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

**சொல்லடைவு**

ஓர் இலக்கியத்தில் ஒரு சொல் அந்நூல் முழுவதும் எந்த எந்த இடங்களில் பயின்று வருகின்றது. மொத்தம் எத்தனை வகையான சொற்கள் எத்தனை முறைகளில் எத்தகுப் பொருள்களில் ஆட்சி பெற்றுள்ளன என்பதை வடித்தெடுத்தும், பகுத்தும் கூறப்படுவது சொல்லடைவு ஆகும்.

சொல்லடைவு மேற்கொள்ளும் போது மூல நூலை நன்கு புரிந்து கொண்டு, அந்நூலில் பயின்று வந்துள்ள சொற்களை அறிந்து கொண்டு அச்சொற்களின் பொருளைச் சரியாக விளங்கிக் கொள்ள வேண்டும். பொருளுடைய சொற்களாகப் பகுத்த பின் சொற்களுடன் கூடிய முன்னொட்டு பின்னொட்டுகளையும் ஆராய்ந்து பகுத்தமைக்க வேண்டும்.

முன்னொட்டு பின்னொட்டுகளை இணைத்தும், பிரித்தும் அமைக்கப்பட்ட சொற்கள் அகர வரிசைப்படுத்தப்பட்டு சொற்களுக்குரிய இலக்கணத்தை அறிந்து சொற்களின் பொருளை அறிதல் என்பன போன்ற பணிகள் சொல்லடைவு மற்றும் அகராதி வடிவமைப்பு முறைகள் ஆய்வுக்கு இன்றியமையாததாகும்.

ஆய்வு மேற்கொண்ட விதத்தைப் பாம்பாட்டிச் சித்தர் பாடல் ஒன்றின் மூலம் அறியலாம்.

**சொல்லடைவு மேற்கொண்ட விதம்**

பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் தனிதனிச் சொற்களாக முதலில் பிரிக்கப்பட்டு பாடல் எண்ணிக்கையுடன் வகை தொகை செய்யப்பட்டன.

**சான்று**

தெளிந்து தெளிந்து தெளிந்து ஆடுபாம்பே - சிவன்
சீர்பாதங் கண்டு தெளிந்து ஆடும்பாம்பே!
ஆடு பாம்பே, தெளிந்து ஆடுபாம்பே - சிவன்
அடியினைக் கண்டோமென்று ஆடும்பாம்பே! (பா.சி.பா.1)

| | | | |
|---|---|---|---|
| தெளிந்து | **(1:1)** | ஆடு | **(1:3)** |
| தெளிந்து | **(1:1)** | பாம்பே | **(1:3)** |
| தெளிந்து | **(1:1)** | தெளிந்து | **(1:3)** |
| ஆடு | **(1:1)** | ஆடு | **(1:3)** |
| பாம்பே | **(1:1)** | பாம்பே | **(1:3)** |
| சிவன் | **(1:1)** | சிவன் | **(1:3)** |
| சீர் | **(1:2)** | அடியினை | **(1:4)** |
| பாதம் | **(1:2)** | கண்டோம் | **(1:4)** |

| | | | |
|---|---|---|---|
| கண்டு | (1:2) | என்று | (1:4) |
| தெளிந்து | (1:2) | ஆடு | (1:4) |
| ஆடு | (1:2) | பாம்பே | (1:4) |
| பாம்பே | (1:2) | | |

இவ்வாறு பிரிக்கப்பட்ட சொற்கள் பாடல்களின் எண்ணிக்கையுடன் அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

பாடல்களைப் பிரித்து அகரவரிசைப்படுத்திய சொற்களில் பல சொற்கள் கூட்டுச் சொற்களாக இருந்தன. அச்சொற்களின் பொருளை அறிந்து தனிச் சொற்களாகப் பிரிக்க வேண்டியவற்றைப் பிரித்தும், பிரிக்க முடியாத சொற்கள் இணைத்தும் வழங்கப்பட்டுள்ளன. சான்றாக, சில சொற்களைக் காணலாம்.

நீடுபதம் (1:2)

எண் திசையும் (5:3)

**இணைப்பு**

கடும் பகையை (80:1)

பெருமருந்து (110:2)

இவ்வாறு சொற்களைப் பிரித்தும், இணைத்தும் அமைத்ததால் சொற்களின் எண்ணிக்கைக் கூடியது.

பாம்பாட்டிச் சித்தர் பாடல்களைப் பிரித்து அகரவரிசைப்படுத்திய அனைத்துச் சொற்களும் இலக்கண விதிமுறைப்படி அகராதி வடிவமைப்பு செய்யப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக,

| | | | |
|---|---|---|---|
| ஆரியனை | (90:3) | வாசனையும் | (47:1) |
| போரில் | (93:1) | தண்ணீரால் | (65:1) |
| சேயலால் | (93:3) | பொருளை | (76:3) |
| மூடருக்கு | (92:4) | | |

இவ்வாறாக அனைத்துச் சொற்களும் பிரிக்கப்பட்டுள்ளன.

இலக்கண விதிமுறைப்படி பிரிக்கப்பட்ட சொற்களுக்குப் பொருள் கொள்ளும் போது பெயர்ச் சொற்களோடு சேர்ந்து வந்த சுட்டுப்பெயர், இடைச்சொல், உவமஉருபுச் சொற்கள், வேற்றுமை உருபுச் சொற்கள் ஆகியவைத் தனித்தனியாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

**சான்று**

**சுட்டுப்பெயர்**

இப்பெரிய – இ + பெரிய (31:3)

இவ்வுலக – இ + உலக (108:2)

**பெயரோடு இடைச்சொல்**

ஆணும் – ஆண் + உம் (27:3)

கீழே – கீழ் + ஏ (32:2)

**பெயர் - வேற்றுமை உருபு**

அடியை – அடி + ஐ (79:1)

அடி – திருவடி

ஐ – இரண்டாம் வேற்றுமை உருபு

பொதுச் சொல்லடைவு செய்த பிறகு ஆய்வினைச் செம்மைப்படுத்தப் பெயர்ச்சொற்கள், வினைச்சொற்கள் சொல்லடைவு செய்யப்பட்டன.

**பெயர்ச்சொற்கள்**

அண்டம் – (103:2)

அமுதம் – (55:1)

அமுது – (56:2)

அரண் – (106:2)

அரண்மனை – (43:2)

**வினைச்சொற்கள்**

வினைச் சொல்லடைவில் வினைச் சொற்களின் வடிவங்கள் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன.

அறிந்து – (8:2, 43:3, 54:4, 95:1, 101:4, 110:4, 111:4)

ஆகும் – (120:3)

ஏத்தி – (5:3)

சாற்றும் – (98:2)

செய் – (11:1)

சித்தர் பாடல்களில் சொல்லடைவுகள் தயாரித்த பின்பு அதன் அடிப்படையில் பெயர்ச் சொற்கள், வினைச்சொற்கள், மொழிக்கு முதலில் வரும் சொற்கள், மொழிக்கு முதலில் வராத சொற்கள் சுட்டுப்பெயர், சொல்லுருபு, இடப்பெயர், சினைப்பெயர், பொருட்பெயர், உணவுப்பெயர், காலப்பெயர், சிறப்புப்பெயர், மக்கள் பெயர், விலங்குப் பெயர் திசைப்பெயர், ஒலிக்குறிப்புச் சொற்கள், வடமொழிச் சொற்கள், சாரியை வேற்றுமை உருபுகள் ஆகிய சொற்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

### இயல் - ஒன்று

# சித்தர்களின் வாழ்வும், வரலாறும்

**முன்னுரை**

சித்தர்கள் மக்களிடையே வாழ்ந்து, ஆசைகளில் உழன்று, அனுபவத்தால் மனித வாழ்க்கையின் உண்மையினை உணர்ந்து உருவானவர்கள்; தங்களின் உடலுக்குள்ளேயே இறைசக்தியைக் கலந்து கூடுகிற தவயோகத்தைப் பெற்றவர்கள்; பரம்பொருளோடு கலந்து பேரின்பம் காணுகின்ற உத்தியைப் பயின்று தெளிந்தவர்கள்; மக்களுக்கு நல்லுரை புகட்டவும், வாழ்க்கை நெறிமுறைகளை உணர்த்தவும், மனித வாழ்வு மிக உயர்ந்தது என்றும், உடம்பைப் பேணிப்பாதுகாக்கவும், மனிதன் சிற்றின்பத்தில் மூழ்கி அழிந்துவிடக்கூடாது என்றும், அவர்கள் நல்வழிப்படுத்த பெரிதும் முயன்றவர்கள். அத்தகைய சித்தர்களின் வாழ்வும், வரலாறும் பற்றி இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**சித்தர் என்னும் சொல்**

‘‘சித்து’’ என்னும் சொல் சித்தம் என்னும் சொல்லில் இருந்து தோன்றியது, சித்தர் என்பதற்குச் ‘‘சித்தி கைக்கூடியர்’’ என்பது பொருள். சிவயோகம் சார்தலே அல்லது கைவரப் பெறுதலே ‘‘சித்தி’’ எனவும் வழங்கி வருவதை அறியமுடிகிறது.

சித்தர் என்னும் சொல்லுக்குச் சித்தத்தைத் தம் வசப்படுத்தியவர் எனப்பொருள் கூறுவது உண்டு. புறக்கருவிகளாகிய ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்களைப் போகிற போக்கில் போகவிடாமல் உள்ளிழுத்து அகக்கருவியாகிய சித்தத்தினைச் சமாதியில் இருத்தி வெற்றி

பெற்றமையால் சித்தர் என்னும் சொல் குறிக்கப்படுகிறது. யோக சாதனையால் பல ஆற்றல்களையும், வலிமையினையும் பெற்றவர்கள் சித்தர்கள்.

**முதல் சித்தர்**

சித்தர்களில் "சிவபெருமான்" முதல் சித்தர் என்னும் செய்தி அகத்தியர் பாடலான

பொதிகையிலே எனைப்பாக்கச் சிவனும் வந்தார்
பூரணனே தெய்வமென்ற போற்றிச் செய்து
இதமாமகம் கற்பமுறை யாவும் கேட்டேன் [1]

என்னும் பாடலின் மூலம் சித்தர்களின் குருவாக சிவபெருமான் இருந்து ஞானத்தைப் போதித்துள்ளார் என்பதை அறிய முடிகின்றது.

சித்தர்களின் ஜீவசமாதி பலவற்றிற்கும் சிவலிங்கப் பிரதிட்டை செய்வதன் காரணம், முதல் சித்தருக்கும், குருவுக்கும் முதல் வணக்கம் செலுத்தும் முறையும், முதல் சித்தரும், சிவ வழிபாட்டில் மூலக்கடவுளாக இருக்கும் சிவபெருமானும் ஒருவரே என்னும் நிலையை அறியமுடிகின்றது.

**சித்தர்கள் நிலை**

பேய்போல் திரிந்து பிணம் போல்
கிடந்து இட்ட பிச்சை எல்லாம்
நாய்போல் அருத்தி நரிபோல்
உழன்று நன் மங்கையரைத்
தாய்போல் கருதி தம்போல்
அனைவருக்கும் தாழ்மை சொல்லி
சேய்போல் இருப்பார் கண்டீர்
உண்மை ஞானம் தெரிந்தவரே [2]

**சித்தர் மரபு நாடுதழுவிய நிலை**

சித்தர் பரம்பரை மிகப் பழமையானதாக பகவத்கீதையிலேயே சித்தர்கள் பற்றிய குறிப்புகள் பயின்று வருகின்றதை,

**சித்தர்களில் யான் கபில முனியாக உள்ளேன்** [3]

எனக் கண்ணன் கூறுவதாக உள்ளது. பகவத்கீதை, 10.26 இது கி.மு.200 என்பதிலிருந்து சித்தர் பாரம்பரியம் என்பது இந்தியா முழுவதிலும் பரவிக்கிடந்தது எனத் தெரிய வருகிறது.

சித்தர் மரபு தமிழகத்தில் மட்டுமின்றி இந்திய திருநாட்டின் பல பகுதிகளிலும் காணப்படுகிறது. சித்தர் நெறியைச் சித்தயானம் எனக் கூறுதல் பொருந்தும்.

**இலக்கணத்தில் சித்தர் குறிப்பு**

பழமைமிக்க இலக்கண நூலான தொல்காப்பியத்தில் "அறிவர்" என்னும் சொல் இடம்பெற்றுள்ளது.

**தொல்காப்பியர்**

**மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்** [4]

என்னும் தொல்காப்பியத்தில் அறிவர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். (மறு–குற்றம்), காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களை நீக்கியவர் அறிவர். அவர்கள் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூவகைக் காலத்தினையும் நெறியினால் அறியும் முழுதுணர்வு உடையவர் என்கிறார்.

தொல்காப்பியர் காலத்தினைச் சார்ந்து தோன்றிய சங்க இலக்கியத்திலும் அறிவராகிய சித்தர்களுக்குப் பொருந்திவரக்கூடிய சில கருத்துக்கள் காணப்படுகின்றன.

**சங்க இலக்கியத்தில் சித்தர்**

சங்க இலக்கியமாகிய புறநானூற்றில்,

நிலமிசை வாழ்நர் அலமரல் துரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
கால்உண வாகச் சுடரொடு கொட்டும்
அவிர்சடை முனிவரும் [5]

எனவரும் பகுதியில் சித்தர்களுக்கும் பொருந்திவரும் குறிப்புகள் உள்ளன. இப்பாடலின் பழைய உரையாசிரியர், ''அவிர்சடை முனிவரும் – விளங்கிய கடையையுடைய அடுத்தவரும்'' என்று பொருள் வரைந்தனர்.

சித்தநெறி நின்றவர் மரணமிலாப் பெருவாழ்வினர்; இவர்கள் தம் உடலை ஒளிமயமாக்கி வானுலகு செல்லும் இயல்பினர் என்பது சித்தர் பாடல்களினால் அறிய முடிகிறது. இத்தகைய சித்தர்கள் சங்க காலத்திலும் இருந்தனர் என்பதற்கு,

உடம்பொடும் சென்மார் உயர்ந்தோர் நாட்டே [6]

எனவரும் புறநானூற்றின் பாடற்பகுதி சான்றாகிறது.

**சிலப்பதிகாரத்தில் - சித்தர்**

கி.பி.3–ஆம் நூற்றாண்டில் எழுந்த சிலப்பதிகாரத்தில்,

அறிவன் அறவோன் அறிவுவரம்பு இருந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
சித்தன் பெரியவன் செம்மல் திகழொளி [7]

என்னும் வரிகளில் அருகபரமேட்டியைச் சமணச்சாரணன் போற்றுவதாக இளங்கோவடிகள் அமைத்துள்ளார். தொல்காப்பியர் கூறிய அறிவனும் ஈண்டு இணைத்து எண்ணத்தக்கவர்கள்.

**திருமந்திரத்தில் சித்தர்**

திருமந்திரம் முதல் தந்திரத்தில் சித்தர்கள் பற்றிய கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமும் சத்த முடிவும்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப் பத்தாறே [8]

திருமூலராகிய சித்தர் சித்தர்களின் சிறப்பியல்புகளைத் தெளிவுறுத்திக் கூறியுள்ளார்.

**சித்தர் பாடல்களில் - சித்தர்**

அனைத்து சித்தர் பாடல்களிலும் சித்தர் என்னும் சொல் இடம்பெற்றுள்ளன. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட சித்தர்களின் பாடல்களில் சில இங்கு குறிப்பிடப்பட்டுள்ளன:

துய்யநெறி காட்டி நின்றார் சித்தர் சித்தர்
தூல்நெறி காட்டுகிறார் ரெத்தர் ரெத்தர்

நாட்டுக்கொரு கோயில்கட்டி நாளும் பூசித்தே
நாதன்பாதம் காணார்கள் என்று ஆடுபாம்பே

எழும்பாமல் வாசனைக் கொன்றோன் ஞானி
ஏகாமல் வாசனையை யடித்தோன் சித்தன் [9]

**சித்தர்கள் எண்ணிக்கை**

சித்தர்கள் பற்றியும் அவர்களின் எண்ணிக்கை பற்றியும் யுகம் கடந்து வாழ்ந்த சித்தர்களின் எண்ணிக்கையை விளக்கும் பாடல்,

பாரப்பா கிரேதாயுகம் சித்தாரப்பா
    பலமான பெருக்கினுடை கணக்கைக் கேளு

நேரப்பா கோடியடா இரண்டு இலட்சம்
நிலையான திரேதாயுகம் இலட்சம் கோடி
தூரப்பா துவாபரத்தில் கோடி கேளு
தூக்கானது ஐம்பதென்ற ஆயிரந்தான்
காரப்பா கலியுகத்தில் கோடி கேளு
கணக்கு இருபத்தையாயிரந்தான் பாரே [10]

என்பதாகும். கிரேதாயுகத்தில் இரண்டு இலட்சம், திரேதாயுகத்தில் ஓர் இலட்சம், துவாபரயுகத்தில் ஐம்பது ஆயிரம், கலியுகத்தில் இருபத்து ஐயாயிரம் ஆக மொத்தம் **3,75,000** சித்தர்கள் தோன்றினர் என்று தேரையர் பாடல் மூலம் அறிய முடிகின்றது. மேலும் சித்தர்கள் நவகோடி என்றும், அனேகங்கோடி, கோடானுகோடி, பலகோடி என்னும் குறிப்புகள் சித்தர் பாடல்களில் அமைந்துள்ளன.

ஆதி காலத்திலே தில்லை திருமூலர்
அழகுமலை இராமதேவர்
அனந்த சயன கும்பமுனி திருப்தி கொங்கணவர்
கமலமுனி ஆரூர்
சோதி அரங்க சட்டமுனி கருவை கருவூரார்
சுந்தரானந்தர் கூடல்
சொல்லும் எட்டுக்குடியில் வான்மீகரோடு நற்
றாள் காசி நந்திதேவர்
பாதி அரிச்சங்கரன் கோவில் பாம்பாட்டி
பழனி மலை போகநாதர்
திருப்பரங்குன்றமதில் மச்சமுனி
பதஞ்சலி இராமேஸ்வரம்
சோதி வைதீஸ்வரன் கோவில் தன்வந்திரி பேரையூர்
கோரக்கர் மாயூரங் குதம்பர்
திருவருணையோர் இடைக்காட சமாதியிற்
சேர்ந்தனர் எமை காக்கவே [11]

என்னும் பழமையான ஓலைச்சுவடி பாடலில் இது நெற்கட்டும் செவல் மன்னர் பூலித்தேவர் காலத்தில் உள்ள சான்று எனும் குறிப்புள்ளது.

நான்கு யுகங்களில் தோன்றிய மூன்றே முக்கால் இலட்சம் சித்தர்களுள் ஆய்வில் அறியப்பட்ட சித்தர்கள் பற்றிய பெயர் பட்டியல்

| | |
|---|---|
| திருமூலர் | காகபுசுண்டர் |
| போகர் | இடைக்காட்டுச் சித்தர் |
| கருவூர்சித்தர் | குதம்பைச் சித்தர் |
| புலிப்பாணி | பதஞ்சலி சித்தர் |
| கொங்கணர் | புலத்தியர் |
| மச்சமுனி | திருமூலம்நோக்கச் சித்தர் |
| சுந்தரானந்தர் | அழுகணிச்சித்தர் |
| சட்டைமுனி சித்தர் | நாரதர் |
| அகத்தியர் | இராமதேவசித்தர் |
| தேரையர் | மார்க்கண்டேயர் |
| கோரக்கர் | புண்ணாக்கீசர் |
| பாம்பாட்டிசித்தர் | காசிபர் |
| சிவவாக்கியர் | வரதர் |
| உரோமரிஷி | கன்னிச்சித்தர் |
| தன்வந்தரி | ராமானுஜர் |
| நந்தி சித்தர் | பரமயம்ச யோகானந்தர் |
| கடுவெளி சித்தர் | யுக்தேஸ்வரர் |
| விசுவாமித்தர் | ஜட்ஜ் சுவாமிகள் |
| கௌதமர் | ஆதி பராசக்தி |

| | |
|---|---|
| கமலமுனி | கண்ணப்ப நாயனார் |
| சந்திரானந்தர் | சிவப்பிரகாச அடிகள் |
| சுந்தரர் | குரு பாபா ராம்தேவ் |
| காளங்கிநாதர் | ராணி சென்னம்மாள் |
| வான்மீகி | பூஜ்ய ஸ்ரீ சித்த நரஹரி குருஜி |
| அகப்பேய் சித்தர் | குழந்தையானந்த சுவாமிகள் |
| பட்டினத்தார் | முத்து வடுகநாதர் |
| வள்ளலார் | இராமதேவர் |
| சென்னிமலைசித்தர் | அருணகிரிநாதர் |
| சதாசிவப்பிரம்மேந்திரர் | தவத்திரு மௌன சாமி சித்தர் |
| ராமகிருஷ்ணர் | சாரதா தேவியார் |
| ராகவேந்திரர் | சிறு தொண்டை நாயனார் |
| ரமண மகரிஷி | ஒடுக்கத்தூர் சுவாமிகள் |
| குமரகுருபரர் | வல்லநாட்டு மகாசித்தர் |
| நடன கோபால நாயகி சுவாமிகள் | சுப்பிரமணிய சித்தர் |
| ஞானானந்த சுவாமிகள் | சிவஞான பாலசித்தர் |
| ஷீரடி சாயிபாபா | கம்பர் |
| சேக்கிழார் பெருமான் | நாகலிங்கம் சுவாமிகள் |
| அழகர் சுவாமிகள் | பாரதி சுவாமிகள் |
| சிவஞான பாலைய சுவாமிகள் | விசிறி சுவாமிகள் |
| சித்தானந்த சுவாமிகள் | கோட்டூர் சுவாமிகள் |
| சக்திவேல் பரமானந்த குரு | தகப்பன் மகன் |
| ஸ்ரீராம் பரதேசி சுவாமிகள் | நாராயண சாமி அய்யா |

| | |
|---|---|
| அக்கா சுவாமிகள் | போதேந்திர சுவாமிகள் |
| மகான் படே சுவாமிகள் | அவதூர ரோக நிவர்தீஸ்வரர் |
| கம்பளி ஞானதேசிக சுவாமிகள் | வன்மீக நாதர் |
| பகவந்த சுவாமிகள் | நம்பிக்கலையான் சித்தர் |
| கதிர்வேல் சுவாமிகள் | தம்பிரான் சுவாமிகள் |
| சாந்த நந்த சுவாமிகள் | குகை நாச்சியார் மகான் |
| தயானந்த சுவாமிகள் | வாலைகுருசாமி |
| தஷிணாமூர்த்தி சுவாமிகள் | பாம்பன் சுவாமிகள் |
| ஞானகுரு குள்ளச்சாமிகள் | குமாரசாமி சித்தர் |
| வேதாந்த சுவாமிகள் | பெரியாழ்வார் சுவாமிகள் |
| லஷ்மண சுவாமிகள் | மாயம்மா |
| மண்ணுருட்டி சுவாமிகள் | பரமாச்சாரியா |

இவர்கள் அனைவரும் சித்தர்களின் வரிசையில் இருக்கின்றனர். ஆனால் அபிதான சிந்தாமணியிலும், சித்தர்களின் நம் நாட்டுச் சித்தர்கள் என்னும் நூலிலும் சித்தர்களின் பெயர் பட்டியல் மாறுபடுகின்றன. கிடைத்த சித்தர்களின் வாழ்க்கை, அவர் வாழ்ந்த விதம், செய்த செயல்கள் இவற்றைக் கொண்டே சித்தர்களின் பெயர் பட்டியல் அமைந்துள்ளன.

**சித்தர்கள் - நூற்றாண்டு**

13–ஆம் நூற்றாண்டு முதல் 19–ஆம் நூற்றாண்டு வரை சித்தர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்களுள் சித்தர்களின் பாடல்களும், நூற்றாண்டும் அறிவதற்குத் தெளிவான விவரம் இல்லை. கிடைத்த அச்சித்தர்களின் பாடல்கள் மூலமே அறியப்பட்ட நூற்றாண்டு அடிப்படையில் சித்தர்களின் பெயர்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

| எண் | சித்தர்கள் | நூற்றாண்டு | பாடல்கள் |
|---|---|---|---|
| 1. | அகப்பேய்ச்சித்தர் | 14–15 | 90 |
| 2. | அழுகணிச்சித்தர் | 14–15 | 40 |
| 3. | இடைக்காடர் | 14 | 130 |
| 4. | கடுவெளிச்சித்தர் | 14–15 | 35 |
| 5. | குதம்பைச்சித்தர் | 14–15 | 32 |
| 6. | காளைச் சித்தர் | 14–15 | 3 |
| 7. | பாம்பாட்டி சித்தர் | 14–15 | 129 |
| 8. | சுந்தரானந்தர் | 16 | பாடல் இல்லை |
| 9. | இராமதேவர் | 17–18 | 10 |
| 10. | உரோமரிஷி | 17–18 | 13 |
| 11. | கணபதிச்சித்தர் | 17–18 | 100 |
| 12. | காகபுசுண்டர் | 17–18 | 160 |
| 13. | சட்டைமுனி சித்தர் | 17–18 | 203 |
| 14. | சுப்பிரமணியர் | 17–18 | 32 |
| 15. | காரைச்சித்தர் | 19 | 28 |
| 16. | தடங்கண் சித்தர் | 19 | 11 |
| 17. | மதுரைவாலைச்சாமி | 19 | 185 |
| 18. | பீரு முகமது | 19 | 63 |
| 19. | சூரியானந்தர் | 19 | 13 |

எனச் சித்தர்கள் நூற்றாண்டு அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளனர். பாடல்கள் அறியப்பட்டு அவர்களின் நூற்றாண்டு அறியப்படாத சித்தர்கள்:

சட்டை நாதர் – 207

சட்டை முனி – 95

ஏனாதிச் சித்தர் – 3

அவ்வையார் – 310

சுப்பிரமணியர் – 32

இவர்களின் நூற்றாண்டு அறிய முடியவில்லை. இன்னும் பல சித்தர்களின் பாடல்களும், நூற்றாண்டும் அறியமுடியாத சித்தர்கள்.

கூனர்   கும்பமுனி

கண்ணார்   தன்வந்திரி

| | |
|---|---|
| கோரக்கர் | கைலாசநாதர் |
| கமலமுனி | வாசமுனி |
| சண்டிகேசர் | கூர்மமுனி |
| மச்சமுனி | புலத்தியர் |
| பிண்ணாக்கீசர் | தேரையர் |
| காலாங்கி | கபிலர் |

மேலே அறியப்பட்ட சித்தர்கள் நூற்றாண்டு அறியப்பட்டும், சில சித்தர்களின் பாடல்கள் அறியப்படாமலும் உள்ளன. நூற்றாண்டு அடிப்படையில் கிடைத்த சித்தர்கள் பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**சித்தர்கள் பற்றிய அறிஞர்களின் கருத்து**

கடவுளைக் காணமுயல்பவன் பக்தன்
கண்டு தெளிந்தவர் சித்தன் [12]

என்று தொ.பொ.மீனாட்சி சுந்தரம் பிள்ளை சித்தரைப் பற்றி கூறுகிறார்.

சித்தர் விளங்கிய அறிவுடையவர்கள் [13]

என்பார் க.கைலாசபதி.

**சித்தர்கள் பண்டையக் காலத்து அறிவருள் ஒருசாரார், யோகம் பயின்று விரிந்த காட்சியுற்றுப் பொருள்களின் உண்மையியல்புகளையும் அவற்றைப் பயன்படுத்தும் முறைகளையும் அறிந்து, அவர்கள் தமிழில் மருத்துவ நூல், மந்திரநூல், இரசவாத நூல், யோக நூல், ஞானநூல் என்னும் பல்வகை இலக்கியங்களை உலகுக்கு ஈந்தனர்[14]**

என்பார் கா. சுப்பிரமணியம் பிள்ளை.

**சித்தி எய்தியவர்கள், பேரின்பம் சித்திக்கப்பட்டவர்கள், கடவுளைக் காணமுடியுமென்று கண்டு அல்லது அறிந்து தெளிந்தவர்கள்**[15]

என்று குறிப்பிடுகின்றார் மு. அருணாசலம்.

**சித்தர்கள் சமுதாயத்திற்குச் செய்த மிகப் பெரிய தொண்டு ஒன்று என்றால் அது கடவுள் பற்றிய கொள்கையை விளக்கியதாகும்**[16]

என்று டாக்டர் இரா.மாணிக்கவாசகர் குறிப்பிட்டுள்ளார்.

சித்தர்கள் பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள் இவ்வாறாக உள்ளன. சித்தர்கள் எண்ணிக்கையில் பலர் இருந்தாலும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சித்தர்களின் நூற்றாண்டு, பிறப்பு, சமாதி நிலை, அவர்கள் செய்த சித்துக்கள் ஆகியவற்றை ஆய்வதாக இவ்வியல் அமைந்துள்ளது.

சித்தர்களின் காலத்தைக் கணிப்பது பற்றிய அறிஞர்களின் கருத்துரைகள், மறுப்புரைகள் இருந்தாலும், சித்தர் இயக்கம் என்பது திருமூலரோடு தொடங்கி கி.பி.15 அல்லது 16ஆம் நூற்றாண்டளவில் ஒரு தீவிர இயக்கமாக மலர்ந்தது. அதுவே பின்னர் 18ஆம் நூற்றாண்டளவில் ஆற்றலிலும், ஆழத்திலும் குறைந்து, அளவில் மிகுந்து நின்றது என்னும் கருத்துள்ளது.

ஒவ்வொரு நூற்றாண்டு அடிப்படையில் தமிழிலக்கிய வரலாறு எழுதிய மு.அருணாசலம் மற்றும் ஆர்.வெங்கட்ராமன் முதலிய ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டிய நூற்றாண்டை அடிப்படையாகக் கொண்டு நூற்றாண்டுகள் குறிக்கப்பட்டுள்ளன. சித்தர்களின் நடையில் அமைந்த

கருத்துக்கள், மொழிநடை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆய்வுகள் உள்ளன. அதனடிப்படையில் வரலாறு, நூற்றாண்டுகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**அகப்பேய்ச் சித்தர் வரலாறு**

அகப்பேய்ச் சித்தர் பேயாக அலையும் தம் மனத்தைப் பெண்ணாக உருவகப்படுத்தி முன்னிலையாக்கி அதற்கு அறிவுரை கூறுவதாகப் பாடல் பாடியதால் இவர் அகப்பேய்ச் சித்தர் என்று அழைக்கப்படுகிறார். அகப்பேய்ச் சித்தரின் இயற்பெயர் தெரியவில்லை. இவர் தம் பாடல்களின் ஒவ்வொரு அடியிலும் அகப்பேய் என்பது தனிச்சொல்லாக அமைந்துள்ளது. ‘‘அகப்பேய்ச் சித்தர்’’ என்னும் பெயரைச் சில பதிப்புகளில் ‘‘அகப்பைச் சித்தர்’’ என்று குறிப்பிட்டுள்ளனர். இவர் வேளாளர் என்றும் வணிகம் செய்தார் என்றும் கூறுவர். இச்சித்தர் சரியை, கிரியை, யோகம் முதலியவற்றிற்கு உடன்படாததால் இவரைச் சைவ சித்தாந்தி என்று குறிப்பிடுவதற்கில்லை.

**காலம்**

அகப்பேய்ச் சித்தர் ‘‘15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்னும் கருத்தை ஆய்வாளர் மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.’’[17]

சித்தான சித்துமுனி சொல்வேன் கேளீர்
சிறப்பான அகப்பேய் சித்தே யாகும்
முத்தான ஜாதியது ஏதென் றாக்கால்
முனையான நாயனார் ஜாதியாகும்
சுத்தமுள்ள தலைமுறைகள் ஈரெட்டாகும்
சார்வாக அவர் நூலில் காணலாகும்
நித்தமுமே வாணிபங்கள் விர்த்தி செய்து
நிலையாக பூமிதனில் இருந்த சித்தே [18]

போகர் ஏழாயிரத்தில் அமைந்த இப்பாடலின் மூலமாக அகப்பேய்ச் சித்தர் பதினாறு தலைமுறைகள் வாழ்ந்தவர் என்றும், நாயனார் சாதியைச் சார்ந்தவர் என்றும் துணி வணிகம் செய்து பிழைப்பு நடத்தி வந்தார் என்றும் திருவள்ளுவர் பரம்பரையில் தோன்றியவர் என்றும் கூறுகிறார். திருவள்ளுவரைப் போலவே நெசவுத் தொழிலில் ஈடுபட்ட இச்சித்தர் துணி வியாபாரமும் செய்தவர். இவரது நேர்மை இவருக்கு வருமானத்தை மேலும் வளர்த்தது. இருப்பினும் நாயனார் மனம் பொருளில் பதியாமல் அருளையே தேடி நின்றது. அவரின் பார்வையில் பட்டதெல்லாம் போலித்தனமும் இயந்திர மயமான வாழ்க்கையும் தான்.

மக்களுக்கு ஏராளமான தொல்லைகள்; அது தெரிந்திருந்தும் ஒருவரையொருவர் ஏமாற்றிக் கொண்டும் ஏமாந்து கொண்டும் இருக்கிறார்கள். ஆன்மாவுக்கு உயர்வைத் தருவது எது என்பதை யாரும் உணரவில்லை.

மக்கள் இவரின் போதனைகளை அலட்சியம் செய்தனர். ஞான நூல்கள் நடைமுறை வாழ்க்கைக்கு ஒத்துவராது என்று கேலிபேசினர். மனம் வெறுத்த நாயனார் இவர்களைத் திருத்துவது என்பது யாராலும் முடியாத காரியம். செய்கையில் எலிகளாக இருக்கும் இந்த மக்கள் பேச்சில் மட்டும் புலிகளாக இருக்கிறார்கள். இவர்களைத் திருத்த முயன்றால் நம் அமைதி போய்விடும். சங்கடத்தை உண்டாக்கும் இவர்கள் உறவே வேண்டாம் என்று வெறுத்த மனத்தோடு அவர்களை விட்டு அங்கிருந்து விலகி நடந்தார்; நாயனார் சாதுக்கள் பலரைச் சந்தித்தார்.

அவர் மனம் திருப்திப்படவில்லை. தம் மனதை அடக்கி யோக சாதனை புரிந்தால் ஒரு விடை காண முடியும் என்று நினைத்து அருள் உள்ளம் கொண்டவர்களைத் தேடி அலைந்த நாயனாரின் கண்களில்

பெருத்த ஜோதி மரம் ஒன்று தென்பட்டது. அந்த மரத்தின் அடியில் பெரும் பொந்து ஒன்று இருந்தது.

மனதில் வியாசரைக் குருவாக எண்ணி அங்கேயே தவம் செய்ய ஆரம்பித்தார். நாயனாரின் தவப்பயனால் ஈர்க்கப்பட்ட வியாசர் ஒருநாள் நாயனார் எதிரில் நின்றார். அவருக்கு ஞான உபதேசம் செய்து உனக்கு அனுபூதி நிலை கைகூடும். மக்களின் மனம் லயம் ஆவதற்காக உன் அனுபவங்களை எழுதிவை என்று சொல்லி நாயனாருக்கு உபதேசம் செய்து விட்டு உடனே மறைந்தார்.

**வியாசரின் உபதேசம் பெற்று தவம் மேற்கொள்ளல்**

வியாசர் கருணையோடு தனக்கு உபதேசம் செய்து வழிகாட்டியதை எண்ணி பெருமிதமுற்றார். அவர் மறைந்த திசை நோக்கிக் கைகளைக் குவித்து வணங்கி, ஜோதி மரத்தின் பொந்திற்குள் நுழைந்து தவம் செய்யத் தொடங்கினார். தவம் கைக்கூடிய நிலையில் வியாசர் கட்டளையின்படி மக்கள் அறிவு மாயையில் மயங்கா வண்ணம் நாயனார் மனதைப் பேயாக உருவகப்படுத்தி மக்கள் ஆனந்த வாழ்வு வாழ்வதற்காகப் பலப்பல உபதேசங்களைப் பாடல்களாகப் பாடினார். அதனால் தான் அவரை அகப்பேய்ச்சித்தர் என்று உலகம் அழைத்தது.

**மனத்தினை அடக்குதல்**

நெஞ்சத்தை அலையாமல் நிறுத்தி விடு அது போதும். இறைவனடி சேர்வதற்கு துயரங்களுக்கெல்லாம் காரணம் மனிதர்கள் தங்கள் மனதைக் கண்டபடி அலைய விடுவது தான். அதனை அடக்கக் கற்றுக் கொண்டால் சகல துயரங்களுக்கும் விடை காணமுடியும் என்பதைக் கண்டு கொண்டார். மனமானது ஆசையாலும், ஆணவத்தாலும், பாசத்தாலும், வேசத்தாலும் எப்பொழுதும் ஆடிக்கொண்டே இருக்கிறது. பேயாட்டம் போடும் மனதை

அடக்கிக் கட்டிப்போட ஓயாது சிந்தித்துப் பாடினார். மனதை அடக்கி விட்டால் அதுவே முக்திக்கு வழிவகுக்கும் என்னும் கருத்தைக் கூறி மக்களுக்குத் தம் பாடல்கள் மூலம் அறிவுரை கூறியுள்ளார்.

நஞ்சுண்ண வேண்டாவே அகப்பேய்
நாயகன் தாள் பெறவே
நெஞ்சு மலையாதே அகப்பேய்
நீ ஒன்றுஞ் சொல்லாதே (அகப்பேய் பா.1)

மேற்கூறிய பாடலின் மூலம் நஞ்சுண்ணவும் வேண்டாம். நாதியற்று திரியவும் வேண்டாம் மனதை மட்டும் அலை பாயாமல் நிறுத்தி விடு அதுவே இறைவனடி சேர்வதற்கு வழி என்பதை வலியுறுத்தியுள்ளார்.

**பாடல் அமைப்பு**

இவரது ஞானப்பாடல்கள் பதினெண் சித்தர்கள் ஞானக் கோவையில் ‘அகப்பேய்ச்சித்தர் பாடல்கள்’ என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. மொத்தம் தொண்ணூறு பாடல்கள் அமைந்துள்ளன. இத்தத்துவப் பாடல்கள் ஒவ்வொரு அடியின் இறுதியிலும் அகப்பேய் என முடிவுறுமாறு அமைந்துள்ளன. பாடல் எளிய சொற்களால், எளிய நடையில் அமைந்துள்ளன. பாடலின் கருத்துக்கள் நுண்மையான கருத்தாழம் மிக்க கருத்துக்கள் அடங்கியனவாக உள்ளன. மேலும் யாப்பமைதி, நடைகொள்கைகள் போன்றனவும் சிறப்பாக அமைந்துள்ளன. அகப்பேய் பூரண ஞானம் 15 என்னும் நூல்களையும் இவர் எழுதியதாக சான்றோர் குறிப்பிடுகின்றனர்.

**ஜீவ சமாதி**

தேனென்ற காசியிலே விசுவாமித்திரர்
திருவையாறு தனில் அகப்பேய்ச் சித்தர் [19]

எனும் பாடலின் கூற்று வரியிலிருந்து அகப்பேய்ச் சித்தர் திருவையாற்றில் சித்தியடைந்தார் (ஜீவ சமாதி) என்பது அறியமுடிகிறது.

# அழுகணிச்சித்தர்

**அழுகணிச்சித்தர் வரலாறு**

அழுகண்ணர் என்றும் அழுகுணி என்றும் இவர் அழைக்கப்பட்டார். இவர் இயற்பெயர் தெரியவில்லை. பாடல்களின் அழகையும், அணியையும், தமிழ்ச் சொற்களின் இனிமையும் சுட்டி இவருக்கு இப்பெயர் ஏற்பட்டு இருக்கலாம் என்றும் ''அழகணி'' என்பதே ''அழுகணி'' எனத் திரிந்தது என்னும் கருத்தைக் குறிப்பிடுகின்றனர். சிலர் குரல்கோளாறு காரணமாக இவருக்கு இப்பெயர் ஏற்பட்டு இருக்கலாம் என்றும், இவரின் பாடல்கள் ஒப்பாரி போலவே அழுகின்ற ஓசையுடையதாக இருந்தமையால் ''அழுகுணிச்சித்தர்''[20] என்னும் பெயர் ஏற்பட்டு இருக்கலாம் என்றும் பெயர்க்காரணம் குறிப்பிடுகின்றனர். இதனை,

பையூரி லேயிருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்,
மெய்யூரிற் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா
பாழாய் முடியாவோ (அழு.சி.பா.10)

என்னும் பாடலில் இருந்து ஒப்பாரி போலவே அழுகின்ற ஓசையுடையதாக அமைவதைக் காணமுடிகின்றது.

கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலின் ஒரு பாடல் இவரின் பிறப்பையும் இவர் **அழுகின்ற கண்ணினராய் இருந்தார் என்று குறிப்பிடுவதைக் காட்டி அவரது பெயர்ப் பொருத்தம் பற்றி குறிப்பிடுகின்றார்[21],** கருவூரார்.

**அகச்சான்று**

அழுகண்ணி (நீர் விட்டான் செடி) என்னும் பொருள் உள்ளது. இந்த அரிய கல்பமூலிகையைப் பயன்படுத்திக் காயசித்தி கைவரப் பெற்றமையால் அப்பெயர் வந்தது என்று சிலர் கருத்து. அழுகண்ணி மற்றும் தொழுகண்ணி மூலிகைகளைக் குறித்த குழூஉக்குறிச் சொற்களை மிகுதியாகக் குறிப்பிட்டுள்ளார். இம்மருந்து செடியைக் கொண்டு நோய்களைத் தீர்த்ததாலும் இப்பெயர் பெற்று இருக்கலாம். மருந்து குறித்த பாடல்களாக,

சாயச் சரக்கெடுத்தே சாதிலிங்கம் தான்சேர்ந்து
மாயப் பொடிகலந்து வாலுமுவை நெய்யூற்றிப்
பொட்டென்று பொட்டுமிட்டாள் புருவத்திடை நடுவே
இட்ட மருந்தாலே என் கண்ணம்மா
இவ்வேடம் ஆனேண்டி (அழு.சி.பா.21)

பாதாள மூலியடி பாடாணம் தான்சேர்த்து
வேதாளங் கூட்டியல்லோ வெண்டாரை நெய்யூற்றிச்
செந்தூரமையயே செகமெலாம் தான்மிரட்டித்
தந்த மருந்தாலே என் கண்ணம்மா
தணலாக வேகுறண்டி (அழு.சி.பா.22)

என்னும் பாடல்களின் மூலம் மருந்துகள் செய்யும் முறையைக் கூறுவது இக்கருத்திற்கு அரண் செய்கிறது. இவர் மருத்துவராகத் திகழ்ந்தார் என்பதற்கும் அகச்சான்றுகளாய் காணப்படுகின்றன.

“அழகண்ணி நூலைப் பார்” என்று அகத்தியர் பாடியது இவரைப் பற்றியதா வேறு மருத்துவர் ஒருவரைப் பற்றியதா என்பதை அறிய இயலவில்லை.

**காலம்**

"கருவூரார் இவரைப் பற்றி பாடியிருத்தலின் அழுகண்ணார் காலம் "1400 க்கும் 1450 க்கும் இடைப்பட்ட காலமே"[22] இவரது காலமாக மு. அருணாசலம் தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்.

**யோக முறை**

அழுகணிச்சித்தர் பாடல்கள் வாசியோகம், காயசித்தி முறை முதலியவை பற்றி விரித்துரைக்கின்றன. தவத்தின் ஆற்றலால் கூற்றுவனை வென்று நெடிது காலம் வாழலாம் என்றும் குறிப்பிடுகின்றார். யோக முறைகளைப் பயன்படுத்த வேண்டும் என்பதை,

கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி யென்வயிறு
நில்லென்று சொன்னால் நிலைநிறுத்தக் கூறுவதில்லை
நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்கு
கொல்லென்று வந்த நமன்என் கண்ணம்மா
குடியோடிப் போகானோ...... *(அழு.சி.பா.7)*

என்னும் பாடல் மூலம் அறிய முடிகின்றது.

தூயசித்தி முறைகளைக் கூறிய அழுகண்ணி சித்தர் தமிழ்நாட்டில் பல இடங்களில் சுற்றித் திரிந்ததாகக் கூறுகின்றனர்.

**பாடல் அமைப்பு**

சித்தர் பாடல்களில் அழுகண்ணி பாடல்கள் 32 பாடல்கள் அமைந்துள்ளன. அழுகணி சித்தர் பாடல்கள் கலித்தாழிசையில் அமைந்துள்ளன. நான்கு சீர்களைக் கொண்டு மூன்றடியும் மூன்று சீர்களைக் கொண்டு ஈற்றயலடியும், இறுதியடி இரு சீரினைக் கொண்டும் காணப்படுகிறது. வேறு என்னும் தலைப்பில் 8 பாடல்கள் இரண்டடிகளைக்

கொண்டு உள்ளது. மேலும் என் கண்ணம்மா என்னும் அடிக்கு பதிலாக ஆத்தாடி என்றும் அமைந்துள்ளன.

**அழுகணியின் பிற நூல்கள்**

அழுகணி சித்தர் பாடல் – **200**

ஞான சூத்திரம் – **23**

அழுகண் வைத்தியம், அழுகண் யோகம், அழுகண் ஞானம் ஆகிய நூல்கள் பாடியிருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஜீவசமாதி**

பேரான அழுகண்ணிச் சித்தர் தானும்
பெரிதான நாகப்பட்டணமே யாச்சு [23] (போ.ஜன.307)

அழுகணி சித்தரின் சமாதி நாகப்பட்டினத்தில் உள்ள சிவபெருமான் கோயில் வளாகத்திலேயே அமைந்திருக்கின்றது.

வீரச்சுண்ணம் வெள்ளியதாம் - ஆத்தாளே
வெள்ளி பதினெட்டாகும்
பூரச் சுண்ணம் சேர்க்கவடி - ஆத்தாளே
பொன் வயதோ எண் நான்காம் [24]

(யோக. ஞான. சாஸ் திரட்டு பாகம் 3)

என்னும் பாடலில் அழகும், ஆழமான கருத்துக்களும் அமைந்துள்ளது. இவர் வைத்தியம், யோகம், ஞானம் ஆகியவற்றைப் பற்றி பாடியுள்ளார்.

**இடைக்காட்டுச் சித்தர் வரலாறு**

இடைக்காட்டுச் சித்தர் கோனார் வகுப்பைச் சேர்ந்தவர். இவருடைய பிறப்பைப் பற்றி போக முனிவர்,

மட்டமான இடைக்காடர் ஜாதிபேதம்
மகத்தான கோனாரே என்னலாகும்
திட்டமுள்ள கோத்திரங்கள் பதினெட்டாகும்
திகழான நூலதினில் கண்டமட்டும் [25] (போ.7000/5701)

மேலும்,

தாலமுடன் இடைக்காடர் பிறந்த நேர்மை
சட்டமுடன் சொல்லுகிறேன் தன்மை பாரே
தண்மையாம் புரட்டாசி மாதமப்பா
தாழ்வாக இரணியனைக் கொன்ற மாதம்
வண்மையாம் திருவாதிரை இரண்டாம் காலாம்
வளப்பமுடன் அவதரித்த சிசுபாலன் தானே (போ.7000/5876)

என்னும் பாடலின் மூலம் இவர் எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்றும், புரட்டாசி மாதம் திருவாதிரை இரண்டாம் காலம் என்றும் சித்தரின் பிறப்பு பற்றி குறிப்பிடுகின்றார். மேலும்,

வளமுடன் தேவதா சாபத்தாலே
வையகத்தில் பிறந்த தொரு சித்து மாச்சே [26] (போ.7000/5752)

மேற்கூறிய பாடலில் இவர் நவக்கிரகங்களையே ஆட்டி வைக்கப் போகும், இந்த கோனார் தேவதா சாபத்தால்தான் இடையர் குலத்தில் பிறந்து எழுத்தறிவில்லாமல் ஆடுமேய்த்துக் கொண்டிருந்தார் என்று போகர் குறிப்பிடுகிறார்.

இவர் மதுரைக்குக் கிழக்கே உள்ள இடைக்காடு என்னும் ஊரில் பிறந்தார். இவரின் பெற்றோர், தந்தை நத்தக்கோனார், தாயார் யசோதை. இவர் தொண்டை மண்டலத்தில் இடையன்திட்டு என்னும் சிற்றூரில் வாழ்ந்தார் எனவும் கூறுவர். இவர் பொதிய மலையில் ஆடுகள் மேய்த்துக் கொண்டிருந்த போது நவநாத சித்தர்களில் ஒருவரைக் கண்டார். இடைக்காடர் தியானத்தின் பயனாய் அச்சித்தரின் வருகை அவருக்கு

வியப்பாக இருந்தது. தன் முன் நிற்கும் சித்தரை வரவேற்று அவரை அமர வைத்து அவருக்கு ஆட்டுப்பாலைக் கொடுத்து உபசரித்தார்.

இதனால் திருஉள்ளம் மகிழ்ந்த சித்தர் இடைக்காடருக்கு வைத்தியம், சோதிடம், ஞானம், யோகம் ஆகியவற்றை அறிவுறுத்திச் சென்றார். அனைத்தையும் கற்ற பின் சித்தர் மறைந்து விட்டார். இதனால் இடைக்காடர் வருந்தினார்.

சித்தரின் உபதேசத்தில் மனம் தெளிந்தார். இடைக்காடருக்கு உபதேசம் செய்தவர் போகர் என்றும் இவர் சமாதிக்குச் செல்லும் முன் புலிப்பாணியைப் பழனியிலும், இடைக்காடரைத் திருவண்ணாமலையிலும் இருந்து இறைப்பணி செய்து வருமாறு கட்டளையிட்டதாகக் கூறப்படுகிறது. இதற்குச் சான்றாக இடைக்காடர் சமாதி திருவண்ணாமலையில் உள்ளது. இவர் போகரின் மாணவர் என்பதும், கொங்கணரின் சீடர் என்பதுமான இரு கருத்துக்கள் நிலவுகின்றன.

**இடைக்காடர் செய்த அற்புதங்கள்**

இடைக்காடர் சோதிடக் கலையில் சிறந்து விளங்கினார். சோதிட ஆராய்ச்சி அறிவால் பன்னிரெண்டு ஆண்டுகளில் பெரும் பஞ்சம் வரப்போகும் நிலையை அறிந்து தம் நுண்ணறிவினால் பஞ்சத்தைத் தீர்த்தார் என்பதை அறியமுடிகிறது.

நாடு மழையில்லாமல் பஞ்சத்தால் வாடி விடும் என்பதை முன் கூட்டியே அறிந்த இவர் தம் ஆடுகளுக்கு எருக்க இலையை உணவாகத் தந்தார். இவர் குருவரகு தானியத்தைச் சேற்றோடு கலக்கிச் சுவர் வைத்து வீடு போல் கட்டிக் கொண்டு அதில் ஆடுகளுடன் வாழ்ந்தார். இடைக்காடர் சொன்னதைப் போன்று நாட்டில் பஞ்சம் தோன்ற, பஞ்சத்தினால் மக்கள் மடிந்தனர். அனைத்தும் மடிந்த பின் இவருடைய ஆடுகளும் இவரும்

மட்டுமே உயிர் பிழைத்தனர். ஆடுகள் எருக்க இலையை உண்ட பின்பு அவை ஒன்றுடன் ஒன்று முட்டி சுவரில் தேய்க்க, அத்தேய்ப்பினால் உதிரும் குருவரகு தானியத்தை உண்டு உயிர் வாழ்ந்தார் இடைக்காடர்.

சித்தரின் செய்கையை அறிந்த நவக்கிரகங்கள் இவரைக் காண வந்தனர். இடைக்காடரும் அவர்களை வரவேற்று ஆட்டின் பாலில் குருவரகைக் கலந்து நவக்கிரகங்களுக்குப் பகிர்ந்தளித்தார். அதை உண்ட நவக்கிரகங்கள் மயக்கத்தால் தன் நினைவை இழந்து விழுந்தன. இந்நிலையில் இடைக்காடர் மாறுபட்டு இருந்த நவக்கிரகங்களை மழை பெய்வதற்கு ஏற்ற கிரக அமைப்பில் வைத்தார். மறுகணமே நல்ல மழை பெய்து உலகம் செழிப்பு பெற்றன. நவக்கிரகங்கள் விழித்துப் பார்த்து இடைக்காடரின் நுண்ணறிவினைப் போற்றி அவருக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து விடைப் பெற்றுக் கொண்டனர். இவ்வாறு, தனது நுண்ணறிவினால் பஞ்சத்தைத் தீர்த்தார், என்பதைக் காண முடிகிறது.

**இடைக்காடரின் காலம்**

இவர் “காலம் ஏறத்தாழ 1450 என்பது அறிஞர் முடிபு. 15–ஆம் நூற்றாண்டு”[27] என்று மு. அருணாசலம் தமது இலக்கிய வரலாற்றில் குறிப்பிடுகின்றார்.

**இடைக்காட்டுச் சித்தர் பாடல்களின் தன்மைகள்**

இடைக்காடர் தமது பாடல்களில் தாண்டவராயக் கோனார் கூற்று, நாராயணக் கோனார் கூற்று என இரு கோனார் உரையாடல் போல பொருளமைப்புகளை அமைத்துள்ளார்.

புல்லாங்குழலூதல், பால் கறத்தல், கிடைக்கட்டுதல் போன்ற இடையர்களுக்குரிய செயல்களைப் படிம நிலையில் பயன்படுத்திப் பாடல்களை அமைத்து விளக்கியுள்ளார்.

இடைக்காடரின் பாடல்களில் எளிய சொற்கள், ஆழமான கருத்துக்கள், இனிய சந்தங்கள் அமைத்து இருப்பதே இடைக்காடர் பாடல்களின் தனிச் சிறப்புகள் என அறிய முடிகிறது. இடைக்காட்டுச் சித்தர் பாடல்கள் காப்புப் பாடல் சேர்த்து மொத்தம் நூற்று முப்பது பாக்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளன.

ஒரு முறை இவரிடம் சித்தர்கள் சிலர் வந்து திருமால் அவதாரங்களில் வணங்கத்தக்கவை எவை எனக் கேட்டபோது இவர் 'ஏழை, இடையன், இளிச்சவாயன்' என்று கூறிச் சிரித்தார் என்பர். ஏழை என்பது இராமனையும், இடையன் என்பது கிருஷ்ணன், இளிச்சவாயன் என்பது நரசிம்மர் என்பதை உணர்ந்து சித்தரின் நுண்ணறிவைப் பாராட்டினர் என்று கூறுவர். இவரது பாடல்களில்

தாம் திமி திமி தந்தக் கோனாரே
தீம் திமி திமி திந்தக் கோனாரே (இடை.சி. பா.20)

என்னும் பாடல் நாட்டுப்புறங்களில் திருவிழாக் காலங்களில் இன்றும் பாடப்பட்டும், ஒயிலாட்டம் முதலான கூத்துகளில் இடம் பெற்றும் வருவது அறியத்தக்கது.

**இடைக்காடர் இயற்றிய நூல்கள்**

இடைக்காடர் தமிழ் ஆண்டுகள் அறுபதுக்கும் பலனுரைக்கும் பாடல்களைக் கொண்ட "வருடாதி நூலையும்" சரீரம் என்னும் வைத்திய நூலையும், கால கணிதம் என்ற நூலையும் இயற்றியுள்ளார். இவர் சங்கப் புலவர்களாக ஏக சந்தக் கிராகி, துவி கந்தக் கிராகி என்பவர்கள் பலர் கொண்டு வந்த நூல்களையெல்லாம் பழைய கருத்துடையது என்று கூறி புறக்கணித்து வந்த போது இடைக்காடர் 'ஊசிமுறி' சங்கப்பாட்டு என்னும் நூலை இயற்றி அப்புலவர்களின் செருக்கையடக்கியதாகக் கூறப்படுகிறது.

இவர் ஞானசூத்திரம் 70 எனும் நூலின் காப்புச் செய்யுளில் கோரக்கர், கமலமுனி, போகரிஷி என்பவர்களைத் தமது குருவாக நினைத்து வணக்கம் செலுத்தும் முறையை அறிய முடிகிறது.

**இடைக்காடரின் சமாதி**

இடைக்காடர் திருஅண்ணாமலைக்கு உரியவர் ஆவார். இவரின் ஜீவ சமாதி மலையின் பின்புறத்தில் உள்ளது. அவரது ஜீவ சமாதிக்கு அடையாளமாக மலை உச்சியில் பாதச் சுவடுகள் செதுக்கி வைக்கப்பட்டுள்ளன. வேறு சமாதிக் கோயில் ஏதும் இவ்விடத்தில் இல்லை. பொதுவாக சித்தர்களின் ஜீவ சமாதியின் மீதே பெரும் ஆலயங்கள் அமைகின்றன. அந்த வகையில் பார்த்தால் திருஅண்ணாமலையில் அண்ணாமலையார் திருக்கோயில் என்று மூன்று கோயில்கள் காணப்படுகின்றன.

மலை வடிவமாக எழுந்தருளியுள்ள சிவபெருமானை இலிங்க வடிவில் தரிசனம் செய்ய விரும்பிய பிரமனுக்கு இலிங்க வடிவில் இறைவன் காட்சி தந்த இடம் அண்ணாமலையின் மேற்கு திசையிலுள்ள அடி அண்ணாமலைத் திருக்கோயிலாகும். ஆதலால் இத்திருக்கோயில் ஆதி அருணாசலம் என்று அழைக்கப்படுகின்றது.

கிழக்குத் திசையில் இருக்கும் பெருங்கோயிலே இடைக்காடர் ஜீவ சமாதி அடைந்த திருக்கோயில் என்று ஒரு சாரார் இனம் காட்டுகின்றனர். அருணாசலேஸ்வரர் ஆலயத்தில் நடராசர் சந்நிதியின் நுழைவாயிலின் இருபுறமும் இரண்டு பெரிய அறைகள் உள்ளன. வலப்புறம் அறையில் ஒரு சுரங்கப் பாதை உள்ளது. அது மலையை ஊடுருவி செல்கிறது. அந்த சுரங்கப் பாதையில் தான் இடைக்காடரின் 'ஜீவ சமாதி' அமைந்துள்ளது என்றும் சுரங்கப்பாதையின் ஆரம்பத்தைக் குறிக்க கல்லினால் ஆன சங்கிலியைக்

கொண்டு ஒரு கல்தூண் அமைக்கப்பட்டுள்ளது. நுழைவாயிலின் இருபுறமும் பெரிய மணிகள் அமைந்துள்ளன. அம்மணிகளின் ஓசை மலை மேல் பரவி அண்ணாமலையாரின் பூசைக்குக் கட்டியம் கூறுவது போல் ஒலிக்கிறது என்றும் கூறுகின்றனர்.

போகரின் கட்டளைப்படியே இறைவனைத் தரிசித்து திருவண்ணாமலையில் ஜீவ சமாதி அடைந்ததாகவும் சித்தர் வரலாறு தெரிவிக்கின்றது.

இடைக்காடர் திருவிடைமருதூரில் சமாதியில் வீற்றிருப்பதாகப் போகர் ஜனன சாகரத்தில் கூறியுள்ளார். இவ்வாறு இரண்டு இடங்களில் இடைக்காடரின் ஜீவ சமாதி அமைந்திருப்பதாகக் கருத்துக்கள் உள்ளன.

**கடுவெளிச் சித்தர் வரலாறு**

கடுவெளி என்பது பரவெளி. அதாவது பரம்பொருள் நிலைபரவெளியாகிய ‘‘கடுவெளிச் சித்தர் எனப் பெயர் பெற்றார் என்று குறிப்பிடுகின்றனர். இவர் பிறந்த ஊர் சோழநாட்டிலுள்ள கடுவெளியாதலின் ஊர் காரணமாகச் சித்தரை கடுவெளிச்சித்தர் என்பர். சிலர் கடுவெளிச் சித்தரைக் கழுவெளிச்சித்தர் என்பாரும் உளர். கடுவெளி சித்தரின் பாடல்கள் தமிழ்நாடு முழுவதும் பிரபலமானவை.

உலகத்தையே சுத்த வெளியாகக் கருதியது போல் இவர் பாடல்கள் அனைத்தும் இருப்பதால் கடுவெளிச் சித்தர் என்று இவரை அழைப்பர். இவரின் 34 பாடல்களும் நீதியை உணர்த்துவன. கடுவெளி என்பது தூய்மையானது. புனிதமான வெளி, நிர்குணப் பிரம்மம் போன்றவற்றைக் குறிப்பாக உணர்த்துவது. கடுவெளியை அடைந்து விட்ட காரணத்தால் இந்தச் சித்தருக்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம் என்பர்.

கடுவெளிசித்தரின் ஆன்மானுபவத்தைப் பிறரும் அறிந்து அவ்வழி நடந்து சீர்பெறப் பிரபஞ்சத்தை, 'சுத்த வெளி' என்று கண்டதால் இப்பெயர் அடைந்தார் என்பதை இவர்தம் வரலாறாக அபிதான சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

கடுவெளி என்பது பரவெளி. ''அல்லும் பகலும் அருளுடன் தூங்கினால் கல்லும் பிளந்து கடுவெளியாமே''[28] என்னும் திருமந்திரம் 2303 பாடல் கடுவெளி பற்றி விளக்குகிறது. மேலும்

உண்டடா சித்தரது கூட மெத்த
    வுறுதியாய்க் கருங்காட்டிங் சென்றாற்காணும்
பண்டடா பாலமலை யதற்கருகே யுண்டு
    பலபேர்கள் கூட்டமடா வதிலேயுண்டு
வண்டடா சேலத்து மலையு முண்டு
    விதமாகச் சாத்தாவின் கோயிலுண்டு
கண்டடா லதற்கருகே கைதா னொன்று
    கடுவெளி சித்தரங்கே யிருப்பார்தானே [29] (போ.கண்ட.யோ.பா.246)

கடுவெளிச் சித்தர் இருக்கும் இடத்தைக் குறிப்பிடுகின்றது.

கடுவெளி என்பதற்கு ''ஓயாமல் கடுகி இயங்கிக் கொண்டிருக்கும் மூச்சு என்னும் பொருள் கூறுகின்றார் மு. அருணாசலம்''.[30]

**வரலாற்றுக் கதை**

கடுவெளிச்சித்தர் சோழ நாட்டில் கடுவெளி என்னும் ஊரில் பிறந்தவர். அவ்வூர்ச் சிவன் கோயிலில் உலகப் பற்றின்றி நிலைத்த சமாதியில் ஆழ்ந்திருந்தார். வழிபடச் சென்ற மன்னன், இவரை உலக நாட்டம் கொள்ளச் செய்ய, ஒரு விலைமகளை இவரிடம் அனுப்பினான். சருகை உண்டு வாழ்ந்து வந்த அவருக்குச் சருகு போல் சமைத்துக் கொடுத்துத் தன்னிடம் மயங்கச் செய்து, உலக வாழ்வில் ஈடுபடச் செய்தாள். அரசன்

முன்னிலையில் அவள் நடனமாடிய போது, அவள் நெகிழவிட்ட காற் சதங்கையை அவர் எடுத்து அவள் காலில் கட்டி விட்டார். பிறர் அதைப் பார்த்துச் சிரித்தனர். இதனைக் கண்ட சித்தர்,

சொல்லும் பொழுது செலுத்து வேன் சிந்தையை
வெல்லும் பொழுது விடுவேன் வெகுளியை
அல்லும் பகலும் அறிவுடன் தூங்கினால்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே [31]

என்னும் பாடலைப் பாடவே, சிவலிங்கம் இரண்டாகப் பிளந்தது. இதைக் கண்டு அரசன் அஞ்சிப் பணிந்தான். அவன் பணிவைக் கண்ட சித்தர்,

எட்டும் இரண்டும் அறியாத என்னை
எட்டும் இரண்டும் அறிவித்தாய் என்நந்தி
எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின்
எட்டும் இரண்டும் இலிங்கம் தாமே [32]

என்னும் பாடலைப் பாடினார். அதன் பிறகு பிளந்த சிவலிங்கம் ஒன்றாகியதும் இவரும் அதற்குள் அடங்கி விட்டார். இவரைப் பழித்த ஊராரும் அரசனும் அழிந்தனர். கோயிலும் பழுதடைந்தது என்னும் கதை உள்ளது.

வரலாற்றுச் சான்றாக, புதுச்சேரிக்கு அருகில் உள்ள இடும்பை என்னும் ஊரில் பழைய சிவன் கோயில் ஒன்று உள்ளது. அதில் உள்ள சிவலிங்கம் மூன்று பிளவுகளுடன் இருக்கிறது. அதனால் அது ஒரு வெள்ளிப்பட்டையால் சுற்றிக் கட்டப்பட்டிருக்கிறது. மேலும் ‘‘கடுவெளி என்பதற்குப் பதில் அப்பாட்டிற்குக் ‘‘கழுவெளி என்று ஒரு பாடம் இருப்பது கொண்டு, புதுச்சேரிக்கு அருகில் உள்ள இடும்பையைச் சுற்றியுள்ள பகுதிகள் கழுவெளியாயிருக்கின்றது என்று கூறி இந்தப் பகுதியில் வாழ்ந்தவரே இச்சித்தர் என்றும் ‘‘கழுவெளிச்சித்தர்’’[33] என்பது இவர் பெயர் என்றும் இளமதி சானகிராமன் கூறுகின்றார்.

**காலம்**

கடுவெளிச்சித்தர் “1400 க்கும் 1450 க்கும் இடைப்பட்ட காலமாகிய 15 ஆம் நூற்றாண்டினர்”[34] என்றே அறிஞர் கருதுகின்றனர்.

**பாடலின் சிறப்பு**

கடுவெளிச் சித்தர் பாடல்கள் இலக்கியக் கலை நிகழ்ச்சிகள் எங்கெங்கிலும் பரந்து சிறந்து விளங்கியது என்கின்றனர். இவர் பாடல்களைப் படிப்பில்லாத பாமர மக்களனைவரும் அறிந்திருக்கின்றனர். இப்பாடல் ஏற்பட்ட பின் இந்த மெட்டுக்கே ஆனந்தக் களிப்பு என்னும் பெயர் நிலைபெற்று விட்டது. அப்பாடல்,

நந்த வனத்திலோ ராண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி
கொண்டு வந்தானொரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி (கடு.பா.4)

என்னும் பாடல் வரிகளின் மூலமாக ஆன்மா பெறுவதற்கரிய மனித யாக்கைப் பெற்று அதனை வீணாக்குவது பற்றி இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

**ஜீவ சமாதி**

மானிடரின் ஜீவ ரகசியத்தையெல்லாம் உலகறிய உரைத்த கடுவெளிச் சித்தர் காஞ்சிபுரத்தில் ஜீவசமாதி அடைந்ததாக போகரின் ஜனன சாகரம் 309 வது பாடல் உரைக்கின்றது. அப்பாடல்,

வானென்ற கடுவெளிச் சித்தர் தானும்
வளமான திருக்காஞ்சிப் பதியி லாச்சு [35] (போக.ஜன.சாக.309)

என்னும் பாடல் மூலமாக இதை அறியமுடிகின்றது.

**காளைச் சித்தர்**

காளைச் சித்தர் பற்றிய வரலாற்று குறிப்புகள் எதுவும் இல்லை, பாடல்கள் 3 மட்டும் உள்ளன. என் தோழா என்னும் விளியாக 6 முறை பயின்று வந்துள்ளன. இரண்டடி பாடல்களைக் கொண்டு எதுகை, மோனை, முரண் ஆகியன இடம் பெற்றுள்ளன.

**குதம்பைச் சித்தர் வரலாறு**

குதம்பை என்பது மகளிர் காதில் அணியும் ஒருவகை அணிகலன். குதம்பை அணிந்த பெண்ணைக் குதம்பாய் என்று அழைத்துப் பேசுவது மகடூஉ முன்னிலை எனப்படும். இவர் பாடல்களில் குதம்பை அணிந்த பெண்ணைக் குதம்பாய் என்று முன்னிலைப்படுத்திப் பாடியிருப்பதனால் இச்சித்தருடைய பெயரையே ‘‘குதம்பைச் சித்தர்’’ எனக் குறிப்பிட்டுள்ளனர்.

சித்தென்றால் சித்து இது என்ன சொல்வேன்
.......................................................
பூவுலகில் இருந்த தொரு குதம்பைச் சித்து
பக்தியுடன் பெண்ரூபம் கொண்ட சித்து
பாருலகில் வெகுநாளாய் இருந்தார் தாமும்... (போ.காண்டம் 6:728)

தானான அவர்மரபு ஏதென்றக்கால்
தக்கான கோனாரின் சாதியாகும்
கோனான இடையரென்றே சொல்லலாகும்
கொற்றவனே அவர் நூலில் சொன்ன நீதி (போ.காண்டம் 6:729)

குதம்பைச் சித்தர் பெண் ரூபம் கொண்டவர் என்றும், கோனார் வகுப்பைச் சார்ந்தவர் என்றும் போகர் காண்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சித்தர் பிறப்பு பற்றிய பாடல்

கேளேதான் ஆடியாம் திங்களப்பா
கெவனமுடன் விசாகமென்ற மூன்றாம் காலில்

நாளப்பாதான் பிறந்த குதம்பைச் சித்து

நலமுடனே திரிகால பூசை செய்து.... [36] (போ.காண்டம் 6:931)

என்று போகர் காண்டத்தில் குதம்பைச் சித்தர் ஆடிமாதம் திங்களன்று விசாகம் என்ற மூன்றாம் பாதத்தில் பிறந்தார் என்று பிறப்பினைப் பற்றி குறிப்பிடுகின்றது.

அபிதான சிந்தாமணி இவரைக் ‘‘குதம்பேய்ச்சித்தர்’’ என்கிறது. கா.சு.பிள்ளை பெண்களைப் பேய்களென எண்ணி, உண்மையுணர்ந்து நன்மையடைந்தவர் இவர் என்னும் கருத்தைத் தெரிவிக்கின்றார். அடிகளாசிரியர், முதல் காதணியாகிய குதம்பை அணிந்து கொண்டிருக்கும் இளம் பெண்ணைக் குதம்பாய் என்று அழைத்துத் தாம் கூற வேண்டியவற்றைக் கூறுவதாக இந்நூலை அமைத்துள்ளார் என்றும் இச்சித்தரை சிலர் பெண் என்றும் குறிப்பிடுகின்றனர் என்பர்.

**காலம்**

குதம்பைச் சித்தர் காலம் **1400 – 1450**க்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவர் என்று மு. அருணாசலம் [37] குறிப்பிடுகின்றார்.

**பாடல் அமைப்பு**

குதம்பைச் சித்தர் பாடல்கள் **32** மட்டுமே ஆய்வுக்குக் கொள்ளப்பட்டது. மற்ற பதிப்புகளில் அதிகமான பாடல்கள் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. பாடல்கள் கண்ணிகளாக அமைந்துள்ளன. இவரின் பாடல்கள் பாமரர்களாலும் எளிதாகப் பாடிக் களிக்கும் நிலையிலுள்ளன. சில காட்டுகள்:

வெண்காய முண்டு மிளகுண்டு சுக்குண்டு

................................................................ (பா.27)

மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போர்க்கு....
தேங்காய்ப்பால் ஏதுக்கடி.... (பா.28)

போன்ற பாடல்கள் தத்துவப் பாடலாக அனைவரையும் ஈர்க்கும் வண்ணம் அமைந்துள்ளன.

**பிறப்புச் சான்று**

குதம்பைச் சித்தரின் இயற்பெயரை நியாயப்படுத்துவது போன்று ஒரு கதையும் வழங்கப்படுகின்றது. யாதவ குலத்தில் கோபாலர் தம்பதிகளுக்கு ஆடிமாத விசாக நட்சத்திரத்தன்று ஆண் குழந்தை பிறந்தது. பார்ப்பதற்கு அழகு மிக்க குழந்தையாக அனைவரையும் கவரும் வகையில் இருந்தது. ஆண் குழந்தையாக இருந்தாலும் அதன் அழகு பெண் குழந்தை போலிருக்கவே பெண் குழந்தைக்கு அலங்காரம் செய்வது போலவே அக்குழந்தைக்கு அழகூட்டினாள் அந்தத் தாய்.

பெண் குழந்தைகள் அணியும் குதம்பை அணிகலன்களைத் தன் குழந்தைக்கு அணிவித்து அது அசைந்தாடும் பொழுது குழந்தை சிரிக்கும் அழகில் உள்ளம் குளிர்ந்து போவாள்; அன்று முதல் குழந்தையைக் ‘‘குதம்பை’’ என்று கூப்பிட்டுக் கொஞ்சுவாள். அனைவரும் அக்குழந்தையை அவ்வாறே அழைக்கத் தொடங்கினர் என்பர்.

**உபதேசம் பெறுதல்**

குதம்பைச் சித்தர் தினசரி காலையும் மாலையும் கோயிலுக்குப் போவார். அங்கு ஆகம விதிப்படி நடக்கும் பூஜைகளை ஊன்றிக் கவனித்து உள்ளத்தில் உணர்ந்து கொள்வார்.

குதம்பைக்குப் பதினாறு வயது ஆயிற்று. ஒரு நாள் சூரிய உதய நேரம் குதம்பையின் உள்ளத்திற்கு உண்மையைக் கூறுவதற்காக மாதவர்

ஒருவர் குதம்பையிடம் வந்தார். வந்தவரை வணங்கி வாய்ப்பொத்தி நின்றார் குதம்பை.

மாதவர் குதம்பைக்கு அரும்பெரும் உபதேசம் செய்தார். ஒருமுகப்பட்ட மனத்தோடு உபதேசத்தைப் பதிய வைத்துக் கொண்டார். அதன் பிறகு குருவாக வந்து அருளுபதேசம் செய்த சித்தரை வணங்கி ஒன்றுமறியாத தனக்கு உபதேசம் அருளிய அவருக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேனோ என்றார்.

**முற்பிறப்பின் கதை**

மாதவர் குதம்பையை மெல்லத்தடவி குதம்பை கடந்த பிறவியில் உயர்வை அடைவதற்காகத் தவம் செய்து கொண்டிருந்தாய். தவம் கை கூடுவதற்கு முன்னால் கால தேவதை காலனை அனுப்பி விட்டார். போன பிறவியின் அந்தத் தவம் தான் குதம்பையிடம் தன்னை இழுத்தது. அதனை அனுபவத்தில் சொன்னதைக் கொண்டு வந்தால் வெற்றி பெறுவதற்குத் திருவருள் முழுமையாகக் கிடைக்கும் என்று சொல்லி அங்கிருந்து மறைந்தார்.

**தவநிலை மேற்கொள்ளல்**

ஒருநாள் இரவு நேரம் குதம்பைச் சித்தர் யாருக்கும் தெரியாது ஒரு காட்டிற்குள் புகுந்தார். அங்கிருந்த அத்தி மரம் ஒன்றின் அடியில் இருந்த ஒரு பொந்தில் புகுந்து தவ நிலையில் அமர்ந்தார். தன் அனுபவங்களைப் பாடல்களாகப் பாடினார். அப்பாடல்கள் இன்றும் மக்கள் மனதில் நிழலாடுகின்றன.

**ஜீவ சமாதி**

குதம்பைச் சித்தரின் ஜீவசாதி மயிலாடுதுறையில் அமைந்துள்ளது. இவ்விடத்தில் சித்தி பெற்றதாகக் கூறுவர்.

**பாம்பாட்டிச் சித்தர் வரலாறு**

பாம்பாட்டிச் சித்தர் கார்த்திகை மாதம் மிருகசீரிடம் நட்சத்திரத்தில் பிறந்தவர். ஜோகி என்னும் வகுப்பைச் சேர்ந்தவர் என்று கூறுவர். எதையாவது முன்னிலைப்படுத்தி விளித்துப் பாடுவது சித்தர் மரபு. இவர் பாடல்களில் ‘‘பாம்பே’’ என்று பாம்பை விளித்துப் பாடியதால் பாம்பாட்டிச் சித்தர் என அழைக்கப்பட்டார் என்று கூறுகின்றனர்.

**பாம்பாட்டிச் சித்தரின் காலம்**

‘‘இவர் திருக்கோகர்ணம் என்னும் ஊரில் பிறந்தவர். கொங்கு நாட்டு மருத மலையில் இவர் வாழ்ந்திருந்த அடையாளங்களை இன்றும் காணலாம் என்னும் செய்திகளும் சொல்லப்படுகின்றன என்கிறார் மு. அருணாசலம். இவற்றுள் உண்மை காண்பது கடினம் என்று இச்சித்தரின் காலத்தைப் பற்றி குறிப்பிடுகின்றார்.

**அபிதான சிந்தாமணி**

இவர் பாண்டி நாட்டில் இருந்ததாகவும் இவர் வனாந்தரத்தில் பாம்பைப் பிடித்தாட்டிக் கொண்டிருந்ததாகவும் ஒரு முறை நவரத்தினப் பாம்பைப் பிடிக்கச் சென்ற போது சட்டைமுனி அங்கு வர அவரிடம் தீட்சை பெற்று சமாதியில் இருந்து மீண்டும் எழுந்து பல சித்துகள் செய்தவர் என்றும் கூறப்படுகிறது. இவர் ஓர் அரசன் இறந்த போது அவன் உடலிற் புகுந்து, அவன் மனைவியுடன் இருந்து, செத்த பாம்பு ஒன்றை ஆட்டியதால் இப்பெயர் பெற்றனர் என்பர். இவர் செய்த நூல்கள் பாம்பாட்டிச் சித்தர்

பாடல்கள், சித்தர் ஆருடம், சில வைத்திய நூல்கள் என்பர். இவர் கொங்கு நாட்டு மலையடிவாரத்தில் தவம் செய்திருந்ததாக இவரைப் பற்றி கூறப்படும் வரலாறாகும்.

இச்சித்தர் ''பாடல்களில் இடம் பெற்றுள்ள சொற்களை வைத்து இச்சித்தருடைய காலம் **1450** என்று கொள்ளலாம்''[38] என்று மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.

**பாம்பாட்டி ஞானம் பெற்றது**

போகர் தமது போகர் இரண்டாயிரம் என்ற நூலில் இவர் சட்டைமுனி என்ற சித்தரிடம் ஞானம் பெற்றதைக் காட்டுகிறார்.

தேம்படுமாஞ் சோலைசூழ் திவ்விய மாமலையில்
பாம்பாட்டிச் சித்தர் பயின்றனர்காண் அம்மானை
பாம்பாட்டிச் சித்தர் பயின்றனரே ஆமாயின்
பாம்பெல்லாம் நிர்பயமாய்ப் பார்ப்பாரே அம்மானை
பாம்பிற்கே வேதாந்தம் பகர்ந்திருந்தார் அம்மானை [39]

மருதமலையில் தவமிருந்த பாம்பாட்டிச் சித்தர் பற்றி மக்களின் நம்பிக்கைகளைக் ''கோவை மருதமலை முருகன் மகிமையும் வரலாறும்'' என்னும் நூல் விரிவாகக் குறிப்பிடுகின்றது.

அதனை, மருதமலை சென்று பாம்பாட்டிச் சித்தரை வழிபடும் பக்தர்களுக்கு விஷத்தினால் வரக்கூடிய தோஷங்கள் நிவர்த்தி அடைவதுடன் சர்மரோகங்கள் தீரும். அமைதி இல்லாத மனத்துடன் செல்பவர்களுக்கு மனஅமைதி கிட்டுகிறது என்பர்.

வாதம், வைத்தியம், ஞானம் கைகூட வேண்டும் என்று விரும்புபவர்கள் பாம்பாட்டிச் சித்தரைத் தரிசனம் செய்து விட்டுச் சென்றால்

பாத வைத்திய ஞானம் போன்றவைகளால் பாதிக்கப்பட்டவர்களுக்குப் பல ரூபங்களில் வந்து பாம்பாட்டிச் சித்தர் அருள் புரிவதாகக் கூறுகிறார்கள்.

சித்தர் வல்லபம் என்னும் தலைப்பில் பாம்பாட்டிச் சித்தர் பாம்பைப் பிடித்து ஆட்டியவர் என்னும் செய்தி

எட்டுநாகம் தம்மைக் கையால் எடுத்தே ஆட்டுவோம்
இந்திரனார் உலகத்தை இங்கே காட்டுவோம்
கட்டுக்கு அடங்காத பாம்பைக் கட்டி விடுவோம்
கடுவிடம் தன்னைக் கக்கி ஆடுபாம்பே (பா.சி.பா.25)

தூணைச் சிறுதுரும்பாகத் தோன்றிடச் செய்வோம்
துரும்பைப் பெருந்தூணாகத் தோற்றச் செய்குவோம்
ஆணைப் பெண்ணும் பெண்ணைஆணும்ஆகச் செய்குவோம்
ஆரவாரித்து எதிராய் நின்று ஆடு பாம்பே (பா.சி.பா.27)

என்பதால் புலப்படுகிறது.

**திருநாவுக்கரசர்**

சிவபெருமான் கழுத்திலே பாம்பு கிடக்கிற ஒரே காரணத்தினாலேயே அவரைப் பாம்பாட்டியாகக் கற்பனை செய்துள்ளார். இதனை,

எட்டுமலை களைப்பந்தாய் எடுத்து எறிகுவோம்
ஏழுகடலை யும் குடித்து ஏப்ப மிடுவோம் *(பா.சி.பா.28)*

என்று பாடுகிறார்.

**பாம்பு என்னும் சொல்**

பாம்பு என்னும் சொல்லுக்கு வாசி என்று பொருள். பாம்பு என்பதைச் சர்ப்பம் என்றும் குறிப்பிடுவர். பாம்பு என்ற வாசியைப் பிடித்து உச்சிக்கண் என்னும் வேதாந்த முற்றத்திலாட்டியவர் பாம்பாட்டிச் சித்தர்.

சித்தானந்தர் என்றும் மகாயோகியின் பேரரான கரூர் தமிழன்பர் கே.ஆர். பசுபதி பாம்பிற்குத் தரும் விளக்கம் ஆகும். மேலும்

வாசி என்ற சர்ப்ப மீதில்
சர்ப்பம் என்ற வாசியேறி [40]

என்று காலங்கிச் சித்தர் பாடுவதையும் எடுத்துக் காட்டுகளாகத் தருகிறார். பாம்பாட்டிச் சித்தர் பாடலில்,

விரகக் குடத்திலே பாம்ப டைப்போம் (பா.சி.117/1)

காயக் குடத்திலே நின்ற பாம்பைக்
கருணைகடலிலே தியங்க விட்டு
ஊசித்துளைக் குடத்திலே பாம்பை அடைப்போம் (பா.சி.125/1)

ஆணிக் குடத்திலே பாம்ப டைப்போம் (பா.சி.126/1)

சூத்திரக் குடத்திலே பாம்ப டைப்போம் (பா.சி.128/1)

மவ்வக் குடத்திலே பாம்ப டைப்போம் [41] (பா.சி.129/1)

என்னும் பாடலில் பாம்பையும் குடத்தையும் இணைத்துப் பாடுகிறார் சித்தர்.

**சித்தர் பாடல்கள்**

தமிழ் இலக்கிய வரலாறு எனும் நூலில் மு. அருணாசலம் பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் பற்றி ஒரு பட்டியலைத் தருகிறார்.

கடவுள் வணக்கம் 9, குரு வணக்கம் 10, பாம்பின் சிறப்பு 5, சித்தர் வல்லபம் 10, சித்தர் சம்வாதம் 5, பொன்னாசை விலக்கல் 10, பெண்ணாசை விலக்கல் 10, யாக்கை நிலையாமை 10, யாக்கை இயல்பு 10, பாசநீக்கம் 10, சொரூப தரிசனம் 10, குரு உபதேசம் 10, ஞான தரிசனம் 12 (இறுதி) சித்தர் வல்லபம் இறுதிப் பதினாறு பாடல்கள் எண்சீரடி விருத்தங்களாக, பாட்டுக்கு நாலடி கொண்டுள்ளன என்று கூறுகின்றார். பாம்பாட்டிச்சித்தர் பாடல்களின்

எண்ணிக்கையில் முதல் பாடலிலிருந்து 111–வது பாடல் வரை கண்ணிகள் வரிகளின் கணக்கில் எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது.

இவருடைய பாடல்கள் பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள் என்று வழங்கப்படுகின்றது. இவர் இயற்றிய மருத்துவ நூலை ‘‘சித்தராரூடம்’’ எனச் சிலர் கூறுவர். ஆனால் ‘‘சித்தராரூடம்’’ என்ற நூல் சீவக சிந்தாமணியில் நச்சினார்க்கினியரால் குறிப்பிடப்பட்டுள்ளது. அது விஷம் பற்றி கூறும் நூல். விஷ காகசம் என்ற பாட பேதமும் குறிப்பிடப்பட்டுள்ளது. சித்தராரூடம் 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தாக மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.

### ஜீவ சமாதி அடைந்த இடம்

இவர் தவம் செய்த குகை மருதமலையில் காணப்படுகிறது. மருதமலையில் சித்தியடைந்ததாகச் சிலரும் துவாரகையில் சித்தி அடைந்ததாகச் சிலரும் விருத்தாசலத்தில் சித்தி அடைந்ததாகச் சிலரும் கூறுகின்றனர்.

### சுந்தரானந்தர் (வல்லபச் சித்தர்) வரலாறு

சுந்தரானந்தர் சட்டைமுனியின் சீடர் எனவும், அகத்தியர் பூசித்து வந்த லிங்கத்தை வாங்கி சதுரகிரியில் பிரதிட்டை செய்து வழிபட்டவர் எனவும், இவரும் சட்டைமுனியும் சதுரகிரியில் ஒன்றாகவே வசித்ததாகக் கூறுவர். இவரைப் பற்றி போகமுனிவர்,

சொல்லவே சுந்தரானந்த ரப்பா
　　தொல்லுலகில் கேசரியாம் வித்தை தன்னை
புல்லவே அதீதமென்ற மாண்பருக்கு
　　புகழுடனே புகட்டியதோர் சித்து மாகும்　　(போக.7000/பா.5828)

நாமேதான் சொன்னபடி குளிகை பூண்டு
நலமான கேசரிமேல் சென்ற சித்து
போமேதான் வையகத்தில் இருந்துமல்லோ
பொங்கமுடன் சமாதி முகம் சென்ற சித்து [42] (போ.7000/பா.5829)

என்னும் பாடலின் மூலம் சுந்தரானந்தர் விண்வெளிப் பயணத்தில் சிறந்து விளங்கினார் என்பதும் சமாதி யோகத்தில் வீற்றிருந்து வெளியே வந்தவர் என்பதும் தெரிய வருகிறது.

**சுந்தரானந்தர் பிறப்பு**

சுந்தரானந்தர் ஆவணி மாதம் ரேவதி மூன்றாம் நாளில் பிறந்தவர் என்றும் கிஷ்கிந்தா மலை உச்சியில் வசிக்கும் நவகண்ட ரிஷியின் பேரன் என்றும் அகமுடையார் (தேவர்) குலத்தைச் சேர்ந்தவர் என்றும் போகரின்,

சீரிலகுஞ் சுந்தரன் ஆனந்தர் தாமும்
சிறப்பான மரபு அது ஏதென்றாக்கால்
ஆசிரியனார் தாம் உரைத்த நூலில் தாமும்
அப்பனே அகமுடையார் என்னலாகும் [43] (போ.ஜ.5721)

சுத்தமுள்ள ஆவணியாம் திங்களப்பா
சுடரான சுந்தரனார் பிறந்தார் தானே (போ.ஜ.5920)

தானான ரேவதியாம் மூன்றாம் காலாம்
தன்மையுடன் பிறந்த தொரு நாளுமாச்சு
கோனான சுந்தரனார் உணர்வு கேட்டால்
கொற்றவனே கிக்கிந்தா மலையின் உச்சி
தேனான நவகண்ட ரடியார் தம்மின்
சிறப்பாக அவர் தமக்குப் பேரனாகும் [44]

என்னும் பாடலால் அறியலாகும்.

ஆனால் கருவூரார், இருந்தவர் பேரும் பெற்று இயல்புடன் குகையில் வாழ்ந்தார் என,

அருந்தவம் செய்யும் சுந்தரானந்தர் ரெட்டிச் சாதி [45]

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். அகத்தியரும், அமுத கலை ஞானம் என்ற நூலில்,

ஓகோகோ அவன்பாடல் இலக்கோவில்லை
பகுதியுள்ள சுந்தரனோ ரெட்டியாமே
பக்குவமாய் முன்பின்னாய்ப் பாடிப்போட்டான் [46]

என்று பாடியுள்ளார்.

**சுந்தரானந்தர் நூல்கள்**

சுந்தரானந்தர் சோதிட காவியம் என்ற நூல் தாமரை நூலகத்தால் வெளியிடப்பட்டுள்ளது. இதில் ஜாதக பலன், ருது ஜனன ஜாதகம், இன்ன மாதம் இன்ன தேதியில் பிறந்த குழந்தையின் சிறப்பியல்பு இது என்று கூறும் பொதுப்பலன், தென்னை, மா, பலா, வாழை, அவரை, துவரை, நெல், கரும்பு போன்ற பயிர் வகை ஒவ்வொன்றும் இன்ன நட்சத்திரம் இன்ன நாளில் பயிரிட்டால் நல்ல பலன் தரும் என்னும் விவரம், மனையடி சாஸ்திரம் முதலான பல விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. இவை மட்டுமின்றி, இவர் சுந்தரானந்தர் வைத்தியத் திரட்டு–1500, சுந்தரானந்தர் வைத்தியக் காவியம்–1000, சுந்தரானந்தர் மேற்படி சூத்திரம்–500, சுந்தரானந்தர் வகாரம்–200, சுந்தரானந்தர் அதீத சூத்திரம்–104, சுந்தரானந்தர் வாத சூத்திரம்–100, சுந்தரானந்தர் விஷ நிவாரணி–100, சுந்தரானந்தர் வாக்கிய சூத்திரம்–100, சுந்தரானந்தர் சேகரி–55, சுந்தரானந்தர் சுத்த ஞானம்–51, சுந்தரானந்தர் தீட்சாவிதி–50, சுந்தரானந்தர் தண்டகம்–47, சுந்தரானந்தர் சேகரி பூஜாவிதி–37, சுந்தரானந்தர் அதிசய காரணம்–36, சுந்தரானந்தர் சிவயோக ஞானம்–32, சுந்தரானந்தர் முப்பூ–25, சுந்தரானந்தர் சிவஞான போதம்–16 என்னும் நூல்களை இயற்றியுள்ளதாகக் கூறுகின்றனர். இவற்றுள் பெரும்பாலான நூல்கள் கிடைக்கவில்லை. சில நூல்கள் மட்டுமே

தாமரை நூலகம் யோக ஞான சாஸ்திரத் திரட்டு ஐந்தாம் பாகம், எட்டாம் பாகங்களில் இடம் பெற்றுள்ளன.

**சதுரகிரி தலப்புராணக் கதை**

சுந்தரானந்தர் என்ற சித்தர் பெருமான் திக் விஜயம் செய்து மதுரையம்பதி வந்து தங்கி மக்களுக்கு வியாதி வினைகளைத் தீர்த்து வைத்துக் கொண்டு இருந்தார். அவரின் புகழ் பரவி மன்னர் வரை தெரிய வந்தது. பாண்டிய மன்னர் சித்தரைப் பரிசோதிக்க எண்ணி நேரில் வந்து தரிசித்து உரையாடி, பின் சித்தர் மனம் வைத்தால் கல் யானையையும் கரும்பு தின்ன வைக்கலாமே எனக் கேட்க அருகில் கல்லினால் செய்து வைக்கப்பட்ட யானை இருந்தது. அதற்குக் கரும்பு வரச் செய்து மேற்படி கல் யானைக்குக் கொடுக்க அந்த யானையும் அக்கரும்பைத் தின்றது; அதனைக் கண்டு மன்னர் அதிர்ந்து பெரியோரைப் பரிசோதித்ததற்கு மன்னிப்புக் கேட்டு அவர்களுக்குத் தக்க உபசரிப்பு செய்து வர ஆணையிட்டும் எல்லாம் வல்ல சித்தர் என நாமகரணம் சூட்டப்பட்டதுடன் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவிலினுள் சுவாமி சந்நிதி பிரகாரத்தில் ஸ்ரீ துர்க்கையம்மை அருகில் ஸ்ரீ வல்லப சித்தர் உருவம் அமைத்து கோவில் சந்நிதியும் அமைத்து இருப்பதை இப்பொழுதும் சதுரகிரியில் காண முடிகிறது.

**ஜீவ சமாதி**

சுந்தரானந்தர் மதுரையம்பதியில் ஜீவ சமாதியில் வீற்றிருப்பதாகக் கூறப்படுகின்றது.

**சுந்தரானந்தர் குகை**

சதுரகிரியில் மகாலிங்கர் கோயில் மேல்பாகம் கயிலாச கிரியில் சுந்தரானந்தர் ஆசிரமம் அமைந்துள்ளது. யூகி முனிவர் வனத்திற்கு நேர்

மேற்கே செல்லும் ஆற்றைக் கடந்தால் சுந்தரலிங்கர் சந்நிதி. அந்த சந்நிதிக்குத் தெற்கு வடக்காக வருகிற ஆற்றில் இறங்கி மேடேறினால் அங்கு சுந்தரானந்தர் குகை உள்ளது.

சித்தர் வரலாற்றில் இவரது வரலாறு மட்டும் கிடைக்கின்றது. சித்தர் பாடல்களில் இவரது பாடல்கள் இடம் பெறவில்லை.

**இராமதேவர் வரலாறு**

இராமதேவர் புலத்தியரின் சீடர். இவர் விஷ்ணு குலத்தில் மாசி மாதம் பூர நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தார் என்று போகர் ஏழாயிரம் கூறுகின்றது.

மிகுத்திடவே ராமதேவர் ஜாதிபேதம்
    மிக்கான விஷ்ணுகுலம் என்னலாகும்

என்றும்,

திருவான ராமரென்ற தேவரையா
    தீர்க்கமுடன் வந்துதித்த நேர்மை கேளீர்
கருவான மாசியென்ற திங்களப்பா
    கடியதோர் பூரமது ரெண்டாம் காலாம் [47]

என்றும் போக முனிவர் குறிப்பிட்டுள்ளார்.

இராமதேவர் குருவான புலத்தியரை வணங்கி நூலை ஆரம்பிக்கின்றார். இதனை, பரிபாஷை விளக்கம் 27 என்னும் நூலின் காப்புச் செய்யுளில்,

அண்டபிண்டம் நிறைந்த குண்டலியின் பாதம்
    அருள் பெருகும் கணபதியின் அருளே காப்பு
மண்டலங்கள் மூன்றும் ரவிமதியாய் நின்ற
    மதியிரவி யொளியினுடை கமலம் போற்றிக்

குண்டலிதான் பூண்ட புலத்தியர்தன் பாதம்
குருமொழி தானாயிரத்தின் பீடம் போற்றி
கண்டபொருள் பாஷை பரிபாஷை பீடம்
கருங் குருவாங் கணபதியின் பாதம் காப்பே (பரி.தி.1)

என்னும் பாடலின் மூலமாக அறிய முடிகிறது.

இராமதேவர் இளமை முதலே அம்பிகை பக்தராகத் திகழ்ந்த இவர் அன்னையின் கருணையில் அபூர்வ சித்திகள் வாய்க்கப் பெற்றார் என்பதையும் அறிய முடிகிறது.

**வாசியோகம்**

இராமதேவர் வாசியோகம் பயின்று வெளியுலக சஞ்சாரம் செய்யும் அஷ்டமா சித்திகளையும் பயின்றதையும் இந்தத் தேகத்துடனே வெளியிடங்களுக்கும், வெளி நாடுகளுக்கு வெளி உலகங்களுக்கும் செல்லக் கூடிய சித்தியைப் பயில ஆரம்பித்ததையும் மனிதர்களின் விதவிதமான வாழ்க்கை அனுபவங்களை நேரில் காண ஆரம்பித்ததையும் இவர் சஞ்சார சமாதியில் ஐக்கியப்படுத்திக் கொள்ளும் பொழுது நடந்து கொண்டேயிருப்பார் என்பதையும் எண்ணம் எங்கோ இருக்கும். கண்கள் பாராது, காதுகள் கேளா, மூச்சு ஓட்டம் கூட இருக்காது. இந்த அபூர்வ நிலையில் பல புண்ணிய தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்தார் என்பதையும் குறிப்பிடுகின்றனர். இது ஓர் அபூர்வ நிலை வாசிப் பயிற்சியில் முதிர்ச்சியடைந்த சித்தர்களாலேயே முடியும் என்பர்.

**காசி விசுவநாதரைத் தரிசித்தல்**

“ஒரு சமயம் காசியிலிருந்து விசுவநாதரைக் கொண்டு வந்து தாம் வசிக்கும் நாகப்பட்டினத்தில் நிறுவ வேண்டும் என்னும் எண்ணம் அவருக்கு

உண்டாயிற்று. அதே எண்ணத்துடனேயே எழுந்து நடக்கத் தொடங்கிவிட்டார்.

எத்தனை காலப் பயணமோ அவருக்கே தெரியாது ஒரு நாள் சுய நினைவு வந்தவுடன் அவர் காசியில் இருந்தார். கங்கையில் நீராடி காசி விசுவநாதரைத் தரிசித்தார். தன் ஆவலை இறைவனிடம் வெளிபடுத்தினார். மறுபடியும் கங்கையில் முழுகி எழுந்த போது அவர் கையில் ஒரு லிங்கம் அகப்பட்டது.

இராமதேவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் அந்த இலிங்கத்தில் காசி விசுவநாதரை எழுந்தருளச் செய்து அதை நாகப்பட்டினத்திற்குக் கொண்டு வந்து பிரதிட்டை செய்தார். நாகைக்காரோணர் எனும் ஆலயத்திற்குச் சென்று நாள்தோறும் அந்த இலிங்கத்தைப் பூசித்து வந்து தியானத்தில் ஆழ்ந்தார்.''

**தனக்கு ஒரு சீடன் வேண்டுமென எண்ணுதல்**

''ஒரு நாள் கடற்கரையோரம் நடந்து செல்கையில் நாகப்பட்டினத் துறைமுகத்தில் நின்று கொண்டிருந்த கப்பல் ஒன்றினைக் கண்டார். அரபிய நாடுகளிலிருந்து வரும் கப்பல்களே அதிகம். இராமதேவர் அந்தக் கப்பல்களில் வரும் அரபிய வியாபாரிகளைப் பார்த்து தாமும் அவர்களோடு பேச வேண்டும், பழக வேண்டும் என்னும் எண்ணம் உண்டாகியது.

ஒரு நாள் தியானத்திலிருந்து கண் விழித்துப் பார்த்த போது அவர் அரேபியாவில் இருந்தார். அவர் அங்கு எப்படி வந்து சேர்ந்தார் என்பது அவருக்கே தெரியவில்லை. தியானத்தில் அந்த எண்ணத்துடன் அமர்ந்தவர் சஞ்சார சமாதியில் ஆழ்ந்தபடி அப்படியே மெக்காவுக்கு வந்து சேர்ந்து விட்டார். அவர் கடல் வழியாக வந்தாரா, தரை வழியாக வந்தாரா, ஒன்றுமே புரியவில்லை. அவர் விண் வழியாகத் தான் வந்திருக்க வேண்டும். சித்தர்கள்

விண்வழிப் பயணத்தில் வித்தகர்கள். அவ்வாறு வந்த அவர், சுற்றிலும் வறண்ட மணல், கண்ணுக்கு எட்டிய தூரம் வரை மணல். தூரத்தில் ஒரு ஒட்டகம் வருவது தெரிந்தது.

தங்கள் நாட்டில் யாரோ ஒரு அன்னியன் புகுந்து விட்டதைக் கண்டதும் அரேபியர்கள் வேகமாக வந்து அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவரிடம் யாரென்றும் எங்கு, எப்படி, வந்தீர் என்றும் வினவினர். இராமதேவர் பதில் சொல்ல முயன்றார், செவி கொடுத்துக் கேட்பார் யாருமில்லை. அவர்கள் அவரைக் கொன்றே போட்டிருப்பார். அக்கூட்டத்தில் ஒரு புத்திசாலி இருந்தார் என்று போகர் குறிப்பிடும் பாடல்,

யூகியாம் மதி மந்திரி யோகவானாம்
    உத்தமனார் அங்கொருவர் தான் இருந்தார்
யோகியாம் சின்மயத்தில் சேர்ந்த சித்து
    ஒளிவான ரிஷி ஒருவர் அங்கிருந்தார் [48]

என்பதாகும். இப்பாடலின் மூலம் அங்கிருந்த ஒருவரால் இராமதேவர் உயிர் பிழைத்தார் என்று அறிய முடிகிறது.''

''மேலும் நீ ஏன் தீன் தேசத்துக்கு வந்தாய் உன்னைத் தண்டிக்காமல் விடமாட்டோம் என்று அவர்கள் கூச்சலிட்டனர் என்று போகர் பாடலில்,

போனாரே மலைநாடு குகை கடந்து
    பொங்கமுடன் நபிதனையே காணவென்று
கானாறு பாதைவழி செல்லும்போது
    கடுங்காளை நபிக்கூட்டம் மிகவாய்க் கண்டு
மானான மகதேவர் பதியிலப்பா
    மார்க்கமுடன் வந்ததினால் உந்தமக்கு
தீனான தீன்பதியில் உந்தனைத் தான்
    திட்டமுடன் சபித்திடுவோம் என்றிட்டாரே

என்று குறிப்பிட்டுள்ளார். இராமதேவர் கூறும் வார்த்தையை யாரும் நம்பத் தயாராக இல்லை. அரபு தேசத்தில் இஸ்லாத்தவரைத் தவிர வேறு யாரும் இருக்கக் கூடாது. அவன் வேற்று நாட்டவன், வேற்று மதத்தவன், அவனை உயிரோடு விடமாட்டோம் என்று கொல்வதற்குத் தயாரானார்கள் என்பதும்

இராமதேவர் அங்கிருந்த இஸ்லாம் பெரியவரின் தாள் பணிந்து தன்னை அவர்களுள் ஒருவராக நினைக்கும்படி வேண்டிக் கொண்டார் என்பதும் அப்படியானால் தங்கள் மதத்தில் சேர்ந்து விடு என்று கூறி அவருக்கு ‘‘யாக்கோபு’’ எனப் பெயர் சூட்டி அந்நாட்டு வழக்கப்படி சுன்னத்து செய்து உண்பதற்கு ரொட்டியும் கொடுத்து உபதேசம் செய்தார் என்பதும்,

என்றவுடன் யாக்கோபு தாள் பணிந்து
　　எழிலான வார்த்தையது கூறும் போது
சென்றுமே யாகோபு என்று கூறி
　　சிறப்புடனே சுன்னத்து செய்துமல்லோ
தின்றிடவே ரொட்டியது தானும் ஈந்து
　　சிறப்புடன் அசன் உசேன் என்று கூறி
வென்றிடவே உபதேச பிரணவத்தை
　　விருப்பமுடன் மலுங்குமா ரோதினரே

என்ற பாடலாலும், இராமதேவர் அவர்களின் மனம்போல் நடந்து கொண்டு, பிறகு அவர்கள் மெக்கா நகரக் கோட்டைக்குள் இருந்த அரண்மனைக்கு அழைத்துச் சென்றதும் அவர்கள் புனித நூல் ‘குரானை’ ஓதுவித்ததையும் யாக்கோபு அனைத்தையும் விரைவிலேயே கற்றுக் கொண்டு அவர்களுடைய நம்பிக்கையைப் பெற்றதையும்,

ஓதவே நபினாயர் கூட்டத்தார்கள்
　　உத்தமர்கள் மனம்போல மனதுவந்து
நீதமுடன் மக்கபுரி கோட்டைக் குள்ளே
　　நிஷ்களங்க பக்கிரி யாகோபு தன்னை

கோதமுடன் கொண்டு சென்றார் அரண்மனைக்குள்
　　கோறாமல் கொத்துபா ஓதினார்கள்
வீதமது பயனறிந்த சித்து தாமும்
　　விடுபட்டு வந்த தொரு யாகோபாச்சே

என்று பாடலாலும் அறிய முடிகிறது.

## இராமதேவர் இயற்றிய நூல்கள்

“இராமதேவர் மக்காவிலிருந்து திரும்பி வந்த பின் சதுரகிரியை அடைந்து ஓர் வனத்தில் தங்கினார். அவ்வனத்திற்கு இராமதேவர் வனம் என்ற பெயரே வழங்குகிறது. அவ்வனத்தின் அருகில் இரட்டை லிங்கத்திற்குத் தென்கிழக்கு மூலையில் ஆற்றுக்குப் பக்கத்தில் இராமதேவர் ஆசிரமம் இருக்கின்றது. தியான யோகத்தில் அமர்ந்திருந்த இராமதேவர் அவ்வப்போது சில நூல்களை இயற்றினார். முப்பது ஆண்டுகள் தமிழகத்தில் பல பகுதிகளிலும் இராமதேவராக நடமாடினார் யாக்கோபு.”

இராமதேவர் வைத்திய காவியம்–1000, இராமதேவர் ஜாலம்–800, இராமதேவர் நிகண்டு–500, இராமதேவர் கலை ஞானம்–500, இராமதேவர் பரிபாஷை–300, இராமதேவர் சிவயோகம்–200, இராமதேவர் தண்டகம்–110, இராமதேவர் பட்சணி–100, இராமதேவர் பரஞான கேசரி–100, இராமதேவர் வைத்திய சூத்திரம்–33, இராமதேவர் சுத்திமுறை–50, இராமதேவர் அட்டாங்க யோகம்–50, இராமதேவர் முப்பு சூத்திரம்–31, இராமதேவர் பரிபாஷை விளக்கம்–27 இவை இராமதேவராக இருந்தபோது எழுதியவைகளாக குறிப்பிடப்பட்டுள்ளன. இராமதேவர் சாதி, சமயம், சடங்குகள் எல்லாவற்றையும் கடந்த சித்தர். சிவனைச் சிவனே என்று உணர்ந்தவர் சித்தர்கள்.

**யாக்கோபுவாக நன்னெறிகளைப் பரப்புதல்**

“யாக்கோபு மெக்கா மக்களால் தம்முள் ஒருவராக ஏற்றுக் கொள்ளப்பட்டு அவர்கள் போல் அவரும் உடையணிந்து. அவர்கள் மொழியில் பேசி அம்மக்களின் பிணிகளைப் போக்கி வழக்குகளைத் தீர்த்து வைத்து அதே சமயம் தான் கண்டுணர்ந்த மருத்துவ உண்மைகளை மக்களுக்குப் பயன்படும் படியாகப் பதினேழு வைத்திய சாஸ்திரங்களை அரபு மொழியில் பாடி வைத்ததையும் போகர் கண்ட ஏழாயிரம் நூல் கூறுகிறது,

**சீடன் கிடைத்தல்**

அவர் வெகுகாலமாக ஒரு சீடன் தனக்கு வேண்டும் என எண்ணினார். அதன் படியே ஒரு சீடனை ஏற்றுக்கொண்டு அரபு மக்களுக்கு நன்னெறி புகட்டி வந்த நிலையில், ஒருவர் பின் ஒருவராக சீடர் பலர் சேர்ந்தனர். பாலைவன மணலில் புதைந்து கிடைக்கும் கற்ப மூலிகைகளைப் பற்றியெல்லாம் ஆராய்ந்த யாக்கோபு அம்மூலிகைகளை எல்லாம் தம் நூலில் குறிப்புகளாக எழுதி வைத்ததைப் போகர் ஏழாயிரம் நூல் குறிப்பிடுகிறது.

**போகர், நபிகள் நாயகம் தரிசனம் கிடைத்தல்**

ஒரு நாள் தியானத்தின் போது போகரைச் சந்தித்ததையும் போகரை வணங்கிய பின் நபிகள் நாயகம் தனக்குத் தரிசனம் தந்ததையும் கூறி இதைவிட வேறு பேறு என்ன வேண்டும் என்று ஆனந்தக் கண்ணீரால் போகரின் திருவடிகளை நனைத்ததையும் யாக்கோபு பேச்சுக்களைக் கேட்ட போகர் சிரித்தபடியே அப்பா நீ இங்கு யாக்கோபு தமிழ்நாட்டில் இராமதேவன். கிடைத்ததை எல்லாம் தானே அனுபவிக்க வேண்டும் என்று நினைப்பவன் தரித்திரன். பல இடங்களுக்கும் போய் பலருக்கும் உதவி செய்வது தம் கடமை என்று நினைக்க வேண்டும். இப்படிச் செய்தால் சில பேர்களாவது திருந்தி உயர்வை அடைவார்கள். அதன் பிறகு சமாதி நிலை அடைவது

தான் தர்மம் என்று அறிவுறுத்தினார் போகர் என்பதையும் போகர் ஏழாயிரம் நூலால் அறியக்கிடக்கின்றது.

**யாக்கோபு சமாதி நிலையடைதல்**

போகரது வார்த்தைகள் யாக்கோபுவைச் சிந்திக்கத் தூண்ட, உடனே தன் கைவசமுள்ள பாலைவன கற்ப மூலிகைகளைச் சேகரித்துக் கொண்டு தமது சீடர்களை அழைத்து, கற்ப மூலிகைகளின் திறனைச் சோதிப்பதற்காகத் தாம் சமாதியில் இருக்கப் போவதாகத் தம் சீடர்களிடம் கூற, பத்தாண்டு சமாதி என்பது நம்பக் கூடியதாக இல்லை. ஆனால் குருவின் வாக்கை மீற முடியாமல் சமாதிக்கு இடம் தெரிவு செய்தனர். சமாதி தயாரானது; யாக்கோபு சமாதியில் இறங்குகையில் குருவே தாங்கள் எப்பொழுது திரும்பி வருவீர்கள் என்று கேட்ட சீடரிடம், தான் பத்தாண்டுக் காலம் சமாதியில் இருப்பேன் என்பதைக் கூறுவதாக,

இறங்கியே சமாதிதனில் இருந்து கொண்டு
எழிலாகச் சீடனுக்கு அதிதம் சொல்வார்
சுரங்கமென்ற குழிதனிலே போறேன் அப்பா
சுருதிபொருள் கருவி கரணாதி யெல்லாம்
அரங்கமுடன் உள்ளடக்கு மனதிருத்தி
வையகத்தின் வாழ்க்கை எனும் தளை அகற்றி
உரங்களுடன் பத்தாண்டு இருப்பே னென்று
உத்தமனார் யாகோபு கூறினாரே [49]

என்ற பாடல் மூலமாக அறியமுடிகிறது. சீடர் தாங்கள் மீண்டும் எப்பொழுது வருவீர்கள் எனக் கேட்க, தான் வெளிவரும் காலத்தில் பல அற்புதங்கள் நிகழும். தேன்மாரி பொழியும், நறுமண மலர்கள் பூத்து மணம் கமழும்; விலங்குகள் கூட ஞானம் பேசும் இத்தகைய அடையாளங்களைக் கொண்டு நான் திரும்பி வரும் நாளை அறிந்துகொள்ளலாம் என்று கூறி சமாதியை மூடும்படி பணித்தார்.

**காலங்கி நாதர் தரிசனம்**

சமாதி மூடப்பட்ட பின் யாக்கோபு கற்ப மூலிகைகளின் துணைக் கொண்டு யார் கண்ணிலும் படாமல் அங்கிருந்து மறைந்து, காடு மலை நதி என்றும் நாடு கடந்தும் சுற்றித் திரிந்ததும் அந்தக் காலத்தில் காலங்கி நாதர் சமாதியைத் தரிசித்தும் உடனே கைகளைக் கூப்பி வணங்கி அதன் பக்கத்திலேயே தியானம் செய்ய ஆரம்பித்தும் தியானம் சித்தியான நிலையில் காலங்கி நாதர் சித்தருக்குத் தரிசனம் தந்து அனுபவ ரகசியங்களை உபதேசித்து மறைந்ததும் போகர் கண்ட போகம் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. பின் இராமதேவருக்கு அனுபூதி நிலை கைகூடியபின் யாக்கோபு என்ற பெயரில் மெக்காவில் எழுதிய பதினேழு நூல்களைத் தமிழில் பாடியுள்ளார்.

**யாக்கோபு சமாதி நிலையிலிருந்து மீண்டெழுதல்**

போகர் ஏழாயிரம் நூலால், யாக்கோபு சொன்னது போலவே பத்து ஆண்டுகள் கழித்து மீண்டும் திரும்பி வந்து தன் உண்மைச் சீடன் சமாதியருகிலேயே இருந்தது கண்டு மிகவும் மகிழ்ந்து தன் வார்த்தைக்கு மதிப்புக் கொடுத்த அந்தச் சீடனுக்கு ஞானோபதேசம் செய்து அவரின் சமாதி நிலையைப் பற்றி பலர் பலவாறாகக் கேலி பேசியதைச் சீடன் கூற சீடனின் அன்பு யாகோபுவை மனம் நெகிழச் செய்ய ‘‘இந்த மானிட தேகம் நிலையானது அல்ல காயகற்பம் உண்டு. காயத்தைச் சித்தி செய்து நான்கு யுகங்கள் வாழ்ந்தாலும் பிறகு ஒரு நாள் இந்த உடல் மண்ணாய் தான் போகும் என்று கூறிவிட்டு தான் மறுபடியும் சிறிது காலம் சமாதியிலிருக்க இந்த முறை முப்பது ஆண்டுகள் கழித்த பிறகே வருவேன். தான் சமாதிக்கு சென்ற பிறகு தன்னைத் தரிசிக்க வேண்டுமென்றால் சதுரகிரி மலைக்கு வரவேண்டும் என்று தெரிவித்து விட்டு சமாதியானார் என்பது அறியக் கிடக்கின்றது.

**யாக்கோபு அருளிய நூல்கள்**

யாக்கோபு சவுக்காரம்–1200, யாக்கோபு வைத்திய சிந்தாமணி–750, யாக்கோபு சுன்னக் காண்டம்–600, யாக்கோபு வைத்திய வாத சூத்திரம்–400, யாக்கோபு சுன்னம்–300, யாக்கோபு செந்தூரம்–300, யாக்கோபு வைத்தியம்–300, யாக்கோபு களங்கம்–300, யாக்கோபு பஞ்சமித்திரம்–300, யாக்கோபு சுண்ணசூத்திரம்–150, யாக்கோபு செந்தூர சூத்திரம்–150, யாக்கோபு தண்டகம்–119, யாக்கோபு வாத சூத்திரம்–57, யாக்கோபு செந்தூர சூத்திரச் சருக்கம்–50, யாக்கோபு சுண்ண சூத்திரச் சருக்கம்–50 என்னும் நூல்கள் யாக்கோபுவாக இருந்தபோது எழுதியவையாகக் கூறப்பட்டுள்ளது.

**ஜீவ சமாதி**

இராமதேவர் மறுபடியும் மெக்கா சென்று அனைவருக்கும் தரிசனம் தந்ததாகக் கூறப்படுகிறது. யாக்கோபுவின் அன்புக்குரிய சீடனை அழைத்து அவனுக்குக் காயகற்ப முறைகளைப் போதித்து, நிரந்தர சமாதி யோகம் பூணப் போகிறேன் என்று கூறி மெக்காவில் மௌன சமாதியானார் என்பதை,

கோடியாம் சிலபேர்கள் ஞானவான்கள்
குவலயத்தில் வெகு நாளாய்ப் பேருண்டாக
நாடியே சமாதியிடம் கிட்டிருந்து
நாதாந்தப் பேரொளியின் சமாதி முன்னே
வாடியே காத்திருந்த சீடர் தாமும்
வன்மையுடன் உபதேசம் பெற்றார் தானே [50]

என்று போகரின் பாடல் குறிப்பிடுகின்றது.

இராமதேவர் வனத்தை அடைந்து அங்கே சமாதியடைந்தார் என்றே கூறப்படுகிறது.

**உரோம ரிஷி**

உரோம ரிஷி உடம்பெல்லாம் ரோமத்துடன் விளங்கியதால் இவர் உரோமரிஷி என்று பெயர் பெற்றதாகக் கூறுவர். இவர் புசுண்ட மாமுனிவரின் குமாரர் என்றும் குறிப்பிடுகின்றனர். போகர் இவரின் பிறப்பு பற்றி கூறும் பாடல்,

போதமாம் ரோமரிஷி பிறந்த நேர்மை
புகலுகிறேன் மாணாக்கர் அறிய என்று
நீதமுடன் ஆவணியாம் திங்களப்பா
நிஷ்களங்கமான கார்த்திகை தானாகும்
வீதமுடன் பயனறிய மூன்றாம் காலாம்
விற்பரனார் பிறந்ததொரு நாளுமாச்சே

என்பதாகும். இதனால் உரோமரிஷி ஆவணி மாதம் கார்த்திகை மூன்றாம் காலில் பிறந்தவர் என்றும் போகர் பாடலால் அறியலாம். போகர்,

ஆச்சப்பா செம்படவன் தந்தையப்பா
அப்பனே மாதுருவும் குறத்தியாகும்
பாச்சலுடன் பலநூலும் கண்டாராய்ந்து
பாடிவைத்த மரபதுவும் மெய்யே யாகும்
மாச்சலுடன் இருகுலத்தார் பெற்ற மைந்தன்
மகத்தான ரோமரிஷி என்னலாகும்
மூச்சடங்கி நின்ற தொரு கானீனன் அப்பா
மூதுலகில் சென்றதொரு சித்துமாச்சே [51] *(போ.7000/5872)*

உரோமரிஷியின் தந்தை செம்படவன், தாய் குறத்தி, இரண்டு ஜாதியைச் சேர்ந்தவர்களுக்குப் பிறந்த பிள்ளை என்றும் குறிப்பிட்டுள்ளார்.

**அபிதான சிந்தாமணி**

‘‘உரோம ரிஷி புசுண்ட மாமுனிவர் குமாரர் (சீடனை மகன் என்றே குறிப்பிடுதல் சித்தர் வழக்கு). இவர் செய்த நூலைச் சட்டைமுனி

கிழிக்காதபடி புசுண்டர் சடையில் ஒளித்து வைத்து அகத்தியருக்குக் காட்ட, அவர் நெடுநாள் பொறுத்து மீண்டும் கொடுத்தனர். இவருக்கு உடம்பெல்லாம் மயிர். ஒரு பிரமன் இறந்தால் ஒரு மயிர் உதிரும். அப்படி மூன்றரைக்கோடி பிரம்மாக்கள் இறந்தால் ஆயுள் முடிவு. இவர் இறப்பின் அட்டகோண ரிஷிக்கு ஒரு கோணம் நிமிருமாம்'' என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுகின்றது.

**இறைவனின் தரிசனம் பெறுதல்**

``உரோமரிஷி கும்பகோணத்தையடுத்த கூத்தனூரில் தங்கி தவம் செய்து வரும் போது தன் தாடி வழியே பொன் வரவழைத்து அனைவருக்கும் கொடுத்து வந்ததையும் ஒரு சமயம் தாடி வழியே பொன் வருவது நின்று விடவே அந்தத் தாடியை உடனே நீக்கி விட்டு இறைவனை வழிபட நீராடவும் மறந்து திருக்கோயிலை அடைந்ததையும், இறைவனை நீராடாமல் தரிசிக்க வரும் உரோம முனியை விநாயகரும் முருகப்பெருமானும் தடுத்ததாகவும் இதைக்கண்ட சித்தர் வருந்தி கோபுர வாயிலிலேயே நிற்க புறத்தூய்மையை விட அகத்தூய்மையே இன்றியமையாதது என்பதை மெய்ப்பிக்கும் வண்ணம் இந்தச் சித்தருக்குக் கோயிலுக்கு வெளியேயும் இறைவன் தரிசனத்தை அளித்ததாகவும்'' குறிப்பிடப்பட்டுள்ளது.

மூலவட்டமான குரு பாதங் காப்பு
    முத்திக்கு வித்தான முதலே காப்பு
மேலவட்ட மானபரப் பிரமங் காப்பு
    வேதாந்தங் கடந்துநின்ற மெய்யே காப்பு
காலவட்டந் தங்கிமதி யமுதப் பாலைக்
    கண்டுபசி யாற்றிமனக் கவடு நீக்கி
ஞானவட்டஞ் சித்தாடும் பெரியோர் பாதம்
    நம்பினதாலு ரோமனென்பேர் சித்தர் காணே [52] (உரோ. பா.1)

இவர் எப்பொழுதும் நிட்டையில் இருப்பவர் என்றும் சகஸ்ரார தன அமுதுண்டு, எந்நேரமும் ஆனந்தத்தில் லயித்திருத்ததால் உரோம ரிஷி என்று அழைக்கப்பட்டார் என்றும் உரோமன் என்பது தன்னுடைய பெயர் என மேற்குறித்த பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் பாடலில் உவமை நயத்திற்கும் சிலேடைகளுக்கும் பஞ்சம் இல்லை.

### உரோம ரிஷி நூல்கள்

உரோம ரிஷி வைத்தியம்–1000, உரோம ரிஷி சூத்திரம்–1000, அமுத கலை ஞானம்–50, உரோம ரிஷி பெருநூல்–500, உரோம ரிஷி குருநூல்–50, உரோம ரிஷி முப்பு சூத்திரம்–30, உரோம ரிஷி காவியம்–500, உரோம ரிஷி இரண்டடி–500, உரோம ரிஷி சோதிட விளக்கம்–27, நாகாரூடம்–114, வகார சூத்திரம்–25, சிங்கி வைப்பு–100, உரோம ரிஷி வைத்திய சூத்திரம்–21 ஆகிய நூல்களை எழுதியுள்ளார்.

### உரோம ரிஷி வனம்

சதுரகிரியில் புசுண்ட மகரிஷி ஆசிரமத்திற்குத் தென்மேற்குத் திசையில் அரை நாழிகை வழி தூரம் போனால் எல்லைக் குட்டமும் மண்மலைக் காடும் இருக்கின்றன. அவ்வழியே போகும் பாதையில் கூப்பிடு சிறிது தூரம் போனால் பல மரங்கள் சூழ்ந்த உரோம மகரிஷி ஆசிரமம் உள்ளது. இந்த ஆசிரமத்தை அடுத்த கீழ்த்திசையில் பெரியதொரு கல் விளக்கொன்று இருக்கிறது எனக் குறிப்பிடுகின்றனர்.

### கணபதிதாசர் வரலாறு

நெஞ்சுக்கு அறிவுரை கூறுவது போல் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் நெஞ்சே என்று விளித்துப் பாடியுள்ளார். நாகை நாதர் பெயரை ஒவ்வொரு பாடலின் இறுதி அடியிலும் அமைத்துள்ளார். மாயை என்னும்

சொல் மாய்கை என்றும், உவவந்து என்னும் சொல்லை உகந்து என்றும் ஆச்சு, தோண, பாரு என்னும் பேச்சு வழக்குகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. வேட்டி (31) என்னும் பிற்காலச் சொல் இவர் பாடலில் இருப்பதைக் காண முடிகிறது.

**கணபதிதாசர் காலம்**

இவர் வாழ்ந்த காலம் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது. மற்ற வரலாறு எதுவும் குறிப்பிடப்படவில்லை. இவர் பாடல்கள் நெஞ்சறிவிளக்கம் என்னும் தலைப்பில் 100 பாடல்களும் நூற்பயன் என்பதில் 3 பாடல் என 103 பாடல்கள் அமைந்துள்ளன.

**காகபுசுண்டர் வரலாறு**

காகபுசுண்டர் வன்னிகுலம் என்றும் பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் பிறந்தவர் என்றும் போகர் கூறுகிறார். அதனைப் பின்வரும் பாடலில் காண முடிகிறது.

திண்பான புசண்டரிட மார்க்கம் சொல்வேன்
தீர்க்கமுடன் பங்குனியாம் திங்களப்பா
கண்பான உத்தரமாம் இரண்டாம் பாதம்
காசினியில் வந்துதித்த திருவுமாச்சு
மண்பான வரரிஷியின் சாபத்தாலே
மார்க்கமுடன் அவதரித்த பாலனாமே
பாலனாம் சந்திரகுலம் விளங்க வந்த
பாரினிலே வெள்ளாட்டி பெற்ற மைந்தன் [53]

வரரிஷியின் சாபத்தால் புசுண்டர் அவதரித்த வரலாறு எனப் போகர் ஏழாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார். மேலும் சந்திரகுலத்தில் விதவையின் பிள்ளையாகப் பிறந்தார் என்பதையும்

**போகர் உபதேசம் பெறுதல்**

போகமுனிவர் புசுண்டரின் இருப்பிடத்தையும் அவரிடம் உபதேசம் பெற்றதையும்

அறிந்திட்ட ஐயர் எங்கே இருப்ப தென்றால்
ஆதி மகா மேருவுக்குத் தெற்கே யாகும்
முறிந்திட்ட வாதமுண்டு ஞானமுண்டு
மூர்க்கமாம் யோகமுண்டு சித்தொல்லாமுண்டு [54]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

**துளசி இராமாயணம்**

காகபுசுண்டர் அருள் வரலாற்றை முழுமையாக அறிந்து தெளியத் துணை நிற்கும் அரிய நூல். இந்தி மொழியில் கோசுவாமி துளசிதாசரால் அருளிச் செய்யப் பெற்ற ‘‘ஸ்ரீ ராமசரிதமாநஸம்’’ என்னும் பெயரில் வழங்கும் துளசி இராமாயணமே ஆகும். இதன் ஏழாவது உத்திரகாண்டப் பகுதியில் காகபுஜண்டரின் அற்புதங்கள் நிறைந்த அருள் வரலாறுகளும், உலகவர்களை உய்விக்க வல்ல ஞான உபதேசங்களும் இடம் பெற்றுள்ளன.

மேலும் ஞானவசிட்டம் என வடமொழியில் வழங்கும் நூலில் வசிட்ட முனிவரால் இராமனுக்கு உபதேசிக்கப்பட்ட ஆத்ம போத நூலில் காகபுஜண்டர் வரலாறும் அமைகிறது.

ஞானவசிட்டத்தை ஸ்ரீ ‘‘ஞானானந்த பாரதிய சுவாமிகள் என்பவர், சுருக்கி உரைநடையில் மொழிபெயர்த்துள்ளார். அத்தியாயம் இருபதில் ‘‘புசுண்ட உபாக்கியானம்’’ என்ற இப்பகுதியில் வரலாறு இடம் பெற்றுள்ளன. இராமர் உரையாடல்களும் வசிட்டர், காகபுஜண்டர் உரையாடல்களும் அமைந்துள்ளன.

தமிழில் காகபுஜண்டர் வரலாறு கூறும் மொழி பெயர்ப்பு நூல் உள்ளது. "ஞானவாசிட்ட அமல இராமாயணம்" என்னும் பெயரில் வீரை ஆளவந்தார் என்ற முனிவர், வடமொழி நூலைத் தழுவி தமிழில் செய்யுள் யாப்பில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார். இந்நூலுக்குத் திருநாகை அருணாச்சல சுவாமிகளின் முதன்மைச் சீடராகிய, பிறைசை அருணாசல சுவாமிகள் என்பவர் உரை கண்டுள்ளார்.

இந்நூலில் காகபுஜண்டர் வரலாறு 29 ஆவது கதையாக புசுண்டன் கதை என்னும் பெயரில் இடம் பெற்றுள்ளது. இக்கதை 99 பாடல்களால் விரித்துரைக்கப்பட்டுள்ளது; இது வடமொழி ஞானவாசிட்டத்தின் மொழிபெயர்ப்பென்று கூறப்படுகின்றது.

**பெயர் ஆய்வு**

காகபுசுண்டர் பெயரை மேற்குறித்த நூல்கள் பலவாறாக வழங்குகின்றன. புசுண்டர், புசுண்டி, புசுண்டன் என்பன குறிக்கத்தக்கன. காகம் என்ற சொல்லும், புஜண்டன் என்ற சொல்லும் இணைந்து காகபுஜண்டர் என வந்துள்ளது. தமிழில் வழங்கும் காக்கை என்ற சொல் வடமொழியிலும் வட இந்திய மொழிகளிலும் காகம் என்றே வழங்கப்படுகின்றது. "காகம்" என்ற வடசொல்லுக்கு அவிட்டம். அவிட்ட நாள், கீரி முதலிய வேறு பெயர்களும் அகராதியில் உள்ளன.

"புஜங்கம்" என்ற சொல் பாம்பு என்ற பொருள் தரும். இச்சொல் திரிந்து புசுண்டர், புஜண்டர் என உயர்திணைப் பெயராக அமைந்திருக்கலாம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**வரலாற்றுக்கதை**

“கயிலாயத் திருச்சபையில் தேவர்கள், ரிஷிகள், சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகியோர்கள் வீற்றிருந்தனர். சிவபெருமானுக்கு ஒரு சந்தேகம் வந்துவிட்டது. அவையோரைப் பார்த்து “இந்த உலகம் பிரளய காலத்தில் அழிந்து விட்ட பிறகு எல்லோருக்கும் குருவான “நமசிவாயம்” எவ்விடத்தில் தங்கும், நீங்கள் எல்லாம் எங்கே இருப்பீர்கள் எனக் கேட்க, பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவம் ஆகிய ஐவர்களும் எங்கு இருப்பார்கள். இதை எனக்குக் கூற வேண்டும் எனச் சிவன் கூறினார்.

பதில் யாருக்கும் தெரியவில்லை, சிறுபாலனான மார்க்கண்டேயன் திருமாலைப் பார்த்து, ஈசனின் கேள்விக்கு நீங்கள் தான் பதில் சொல்ல வேண்டும் என்று கூற, இது பற்றி சித்தர்களுக்கும் ரிஷிகளுக்கும் தெரிந்திருக்கலாம். குறிப்பாகச் சொல்வதென்றால் புசுண்ட முனிவரைக் கேட்டால் தெரியும். அவரை இங்கே அழைத்து வர வேண்டுமென்றால் வசிட்டரைத் தான் அனுப்ப வேண்டும். மற்றவர்களை அனுப்பினால் முடியாது என்று திருமால் கூறினார்.

சிவபெருமானுக்கு ஒரே ஆச்சர்யம், மார்க்கண்டனையும், திருமாலையும் பார்த்து எனக்குத் தெரியாத விஷயத்தைக் கூறினார்கள் எனப் பாராட்டி, புசுண்டருக்குத் தெரியும் என்பது உமக்கு எப்படித் தெரியும் எனக் கேட்டார்.

திருமால் கூறுகிறார், பிரளயத்தில் எல்லாம் அழிந்து போயின, ஆலிலை மேல் பள்ளிக் கொண்டிருந்த என்னிடத்தில் சித்துக்கள் யாவும் ஒடுக்கமாயிருந்தன. யானும் செய்வதேதும் இல்லாததால் தூங்காமல் தூங்கி அறிதுயிலில் ஆழ்ந்திருந்தேன். என்னுடைய சக்கரம் வெகு வேகமாகச் சுழன்று கொண்டிருந்தது. அதன் வேகத்தை யாரும் தடுக்க முடியாது.

ஆனால் அப்பொழுது அங்கு வந்த புசுண்டர் எப்படியோ என் சக்கரம் ஓடாமல் நிறுத்தி விட்டு அதைத் தாண்டிச் சென்றார். அதனால் அவர் எல்லாம் வல்லவர் என்பதை அறிந்தேன். வசிட்டரை அனுப்பி அவரை அழைத்து வருவது தான் சரியானது என்றார்.

திருமால் இவ்வாறு கூறவே சிவபெருமான் வசிட்டரை அனுப்பி புசுண்டரை அழைத்து வரச் சென்றார். புசுண்டரிடம் வந்த வசிட்டரைப் பார்த்து உம்மைப் போல் எட்டு வசிட்டர்கள் நான் பார்த்திருக்கிறேன் என்று கூறியதாகக் கூறுகிறார். வசிட்டருக்கே உபதேசம் செய்தவர் புசுண்டர் என்பதால் சிறப்பு கடந்ததாகிறது.

புசுண்டர் தாம் எத்தனையோ யுகப்பிரளயங்கள் தோன்றி அழிந்ததையும், எத்தனையோ பிரம்மாக்கள், எத்தனையோ விஷ்ணுகள் எத்தனையோ சிவன்கள் அழிந்து போனதையும், ஒவ்வொரு பிரளயத்திற்குப் பிறகும் உலகம் புதிதாக உண்டானதையும் பார்த்ததாகக் கூறுகிறார்.'' இதை

பாதமதைச் சிரசில் வைத்து யுகங்கள் தோறும்
பண்பாகத் தானிருந்து கோடி காலம்
சாதகமாய்ப் பிரளயங்கள் முடியும் போது
தனியாகக் கல்லாலின் மேலிருந்து
சேதமொன்று மில்லாமல் மவுனமுற்று
சிறப்பாக எத்தனையோ யுகங்கள் கண்டு
வேதமென்ற பிரம்மத்தி லடங்கிக் கொண்டு
வெகுகோடி யுகங்கள் வரை இருந்திட்டேனே (காக.பெ.காவி.2)

என்னும் பாடலில் பல யுகங்கள் ஆயிரம் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் உயிரோடிருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

இருந்திட்டேன் காகத்தின் சொரூபமாக
இன்பமுடன் வசிஷ்டருந்தான் என்னிடத்தில்

வருந்தியே வந்துயென்றன் முன்னே நின்று
வாய்திறந்து கோடியுகம் கல்லால் தன்னில்
பொருந்தியே இருந்து தான் வந்தீரையா
புகழாக இருந்த விதங்கள் தன்னை
திருந்தியே சொலவேணு மென்று கேட்க
செப்பினேன் உண்மைதனைத் திறந்து தானே [55] (காக.பெ.காவி.3)

வசிட்டரிடம் தாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகக் கல்லால் மரத்தின் மேல் காகத்தின் உருவில் வீற்றிருந்தாக இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

டி.வி. சாம்பசிவம் பிள்ளை அகராதியில், ‘‘வரரிஷியின் சாபத்தால் உலகத்தில் சந்திரகுலம் விளங்க வெள்ளாட்டின் வயிற்றில் பிறந்தவர். அறிவிற் சிறந்தவர் பெருந்தவசி– உரோமரிஷிக்கு ஆசிரியர். இவரைத் தமிழ் மக்கள் இனத்தைச் சேர்ந்தவர் எனச் சொல்வதுண்டு. இவர் பிரளயக் காலங்களில் அவிட்ட நட்சத்திர பதவியில் வாழ்வார். ஆதலின் இவரைக் காகபுசுண்டர் என்பர். இவரது பெருமையும் சிறப்பு மேன்மையும் எவராலும் அளவிட்டுச் சொல்ல முடியாது. இவர் உலகப் பிரளய காலத்தில் காக்கை உருவெடுத்து அப்பிரளயத்தினின்று தப்பிப் பிழைத்து அனேககோடி வருஷகாலம் சீவித்து வந்ததற்கு உதாரணமாக இவர் ஒரு பிரளயத்தில் பிரமனைப் பார்த்து இருபத்தொன்றாவது பிரம்மாவே வாருங்கள் என்றாராம். இதனால் இவர் சீவித்து வந்த நெடுங்காலத்தை அறியலாம்’’ எனக் கூறப்பட்டுள்ளது.

**நந்தீசர் நிகண்டு**

நந்தீசர் நிகண்டில் புசுண்ட மாமுனிவரின் பாதத்தை நந்தீசர் போற்றி வணங்குவதாக,

போற்றியென் றடிவ ணங்கும் புசுண்டமாமுனிவர் பாதம்
ஏற்றியே வணங்கி நந்தி இயல்புடன் நிகண்டு சொல்லக்
கூற்றினை யுதைத்த யீசன் குமரிமா மலைம டந்தை
சாற்றிய படியேயானும் தரணியோர்க்குரைத் திட்டேனே[56]

என்னும் பாடல் உள்ளது.

**காகபுசுண்டர் அருளிய நூல்கள்**

காகபுசுண்டர் பெருநூல் காவியம்–1000, காகபுசுண்டர் சூத்திரம்–500, காகபுசுண்டர் மெய்ஞ்ஞான விளக்கம்–80, காகபுசுண்டர் ஞானகாவியம்–33, காகபுசுண்டர் உபநிடதம்–32, காகபுசுண்டர் ஞான சூத்திரம்–19, காகபுசுண்டர் ஞானக்குறள்–19. இவையே காகபுசுண்டர் இயற்றிய நூல்கள் ஆகும்.

**புசுண்ட மகரிஷி ஆசிரமம்**

போகரின் "ஆசிரமத்திற்குத் தென்திசையில் வருகிற பாதை வழியே அரை நாழிகை தூரம் சென்றால் ஒரு பூஞ்சோலை தெரியும் அதற்குள் நுழைந்தால் புசுண்டர் ஆசிரமம் இருக்கின்றது".[57]

**ஜீவசமாதி**

திருச்சி உறையூரில் வாழ்ந்து அங்கேயே சமாதி அடைந்ததாகத் தெரிவிக்கின்றனர். காகபுசுண்டர் சமாதி பற்றிய ஆய்வாளர்கள் கருத்தும் அதுவாகக் கூறுகின்றனர். பாடல்கள் 1 முதல் 144 வது பாடல் நான்கு அடிகளாக அமைந்துள்ளன. குறள் வெண்பாவாக 16 பாடல்கள் அமைந்துள்ளன – 160 பாடல்கள் கொண்டதாக உள்ளன.

**சட்டைமுனி வரலாறு**

ஆவணி மாதம் மிருகசீரிடம் மூன்றாம் பாதத்தில் பிறந்தவர். போகர் இவரைத் தமது சீடராக அறிமுகம் செய்து வரலாற்றையும் குறிப்பிடுகிறார்.

சிங்கள நாட்டுத் தேவதாசி ஒருத்தியின் வயிற்றில் பிறந்தவர் சட்டைமுனி. அங்குத் தமிழர் ஒருவரைக் கணவராக ஏற்றுக்கொண்ட அந்த தேவதாசி தன் கணவரோடும் பிள்ளையோடும் பிழைப்பை நாடி தமிழ்நாட்டிற்கு வந்தனர் என்பதை,

நாமே தான் சொன்னபடி சட்டைநாதர்
    நன்மையுடன் பிறந்ததொரு நேர்மைதானும்
போமேதான் ஆவணியாம் திங்களப்பா
    பொங்கமுடன் மிருகசீரிடமு மாகும்
வேமேதான் விட்டகுறை மூன்றாங் காலாம்
    விருப்பமுடன் அவதரித்த பாலனாமே
பாலனாம் சிங்களவ தேவதாசி
    பட்சமுடன் பயின்றெடுத்த புத்திரன்தான்
சீலமுடன் சட்டைமுனி என்று சொல்லி
    சிறப்புடன் குவலயத்தில் பேருண்டாச்சு [58]

என்னும் இப்பாடலின் மூலம் குறிப்பிட்டுள்ளார்.

''போகர் ஏழாயிரம் நூலில், பிழைப்பை நாடி வந்த தம்பதியர் விவசாயக் கூலிகளாகத் தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தனர். வேலையில்லா நாட்களில் சட்டைமுனி கோயில்களில் தட்டை ஏந்தி, யாசகம் பெற்றுத் தம் தாய் தந்தையருக்கு உதவி வந்தார்.

**இல்லறம்**

உரிய வயது வந்ததும், சட்டை முனிக்குத் திருமணம் நடைபெற்றது. ஆனால் அவர் மனம் இல்லறத்தில் ஈடுபடவில்லை. ஒரு நாள் கோயில்

வாசலில் பிச்சைக்காக நின்று கொண்டிருந்த போது வடநாட்டில் இருந்து வந்த சங்கு பூண்ட ஒரு சித்தரைக் கண்டார். அவரிடம் ஏதோ அபூர்வ சக்தி இருப்பதாக உணர்ந்த சட்டைமுனி, அவருடன் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பி விட்டார்.

**போகரிடம் சீடராக சேர்தல்**

ஞானத்தின்பால் அவருக்குண்டான வேட்கையைக் கண்டு அந்த சித்தர் அவருக்கு ஞானோபதேசம் செய்து போகரைச் சந்திக்குமாறு கூறிவிட்டுச் சென்றார். ஞானம் முழுமையடையாத நிலையில் காடுகள், மலைகள் அனைத்தையும் சுற்றித் திரிந்து போக முனிவரின் அடிதொழுது சீடராக சித்தர் மார்க்கத்தில் இணைந்தார். இவர் போகரின் சீடராக இருந்த போது கொங்கணர் கருவூரார் முதலான பல சித்தர்களின் தொடர்பு சட்டை முனிக்கு ஏற்பட்டது'' எனக் குறிப்பிட்டுள்ளது.

போகரையடுத்து சில வருடங்கள் அகஸ்தியரிடமும் சீடராக இருந்ததாகவும், அகஸ்தியர் 12000 என்னும் தமது பெருநூல் காவியத்தில் சட்டை முனியைப் பற்றி குறிப்பிடும் சில பாடல்,

இருந்தாரே புலத்தியனே யின்னங் கூர்வேன்
யெழிலான சட்டை முனிவரைத்தான் கேண்மோ
..........................................................................................
அருந்தவத்தி லுதித்த தொரு சட்டை தானும்
அப்பனே சமாதி முகம் கொண்ட சித்தே... [59]

என்னும் பாடல் வரிகளால் அறிய முடிகின்றது.

**சட்டைமுனியின் ஞானம்**

சட்டைமுனியின் ஞானம் நிறைவு பெற்ற நிலையில் அந்த ஞானத்தை மனிதகுலம் முழுமைக்கும் உபதேசிக்க முயன்றார்.

**சித்தர்களின் கோபம்**

போகர் ஏழாயிரம் நூல், “சித்தர்கள் தமது சாதனைகளைத் தீயவர்கள் அறிந்துகொண்டு தவறாகப் பயன்படுத்தி உலக மக்களுக்குக் கெடுதல் செய்து விடக்கூடாது என்பதற்காக பரிபாஷையிலேயே எழுதுவது வழக்கம். சட்டைமுனியோ தம் சாதனைகளை எல்லோரும் புரிந்துகொள்ளும் வண்ணம் நேரிடையாகவே எழுத ஆரம்பித்தார்.

இவரது இச்செயலால் கோபம் கொண்ட திருமூலர் இவர் எழுதிய தீட்சாவிதி என்னும் நூலைக் கிழித்தெறிந்தார். மற்றொரு சித்தரான உரோமரிஷியும் சட்டைமுனியின் சில நூல்களைக் கிழித்து விட்டார். பதிலுக்கு உரோம ரிஷியின் நூல்களைச் சட்டைமுனி கிழித்து விடாமலிருக்க அவர் காகபுசுண்டரிடம் கொடுக்க அவர் அவற்றை மறைத்துக் காப்பாற்றி வைத்திருந்து அகத்தியரிடம் கொடுத்தார் என்றும் கூறப்படுகிறது.”

**சித்தர் சிவபெருமானிடம் நட்புக் கொள்ளுதல்**

“சட்டைமுனி அடிக்கடி கயிலையங்கிரியை அடைந்து சிவபெருமானிடம் நட்பு பூண்டிருந்தார் எனவும் கயிலையில் உள்ள குளிரைத் தாங்க முடியாததால் எப்பொழுதும் கம்பளிச்சட்டை அணிந்திருந்தார் எனக் குறிப்பிடப்படுகின்றது.

சட்டைமுனி வெளிப்படையாக ஞானநூல்களை எழுதுவதைத் தடை செய்ய சித்தர் கூட்டத்தின் தலைவரான சிவபெருமானிடம் சித்தர்கள் முறையிட்டனர். கயிலாயத் திருச்சபையில் சிவபெருமான் முன்னிலையில் இவரைப் பற்றி விசாரணை நடைபெற்றதாகவும் விசாரணையின் முடிவில் சட்டைமுனியின் நூல்களைக் குகையில் வைத்துப் பாதுகாக்கும்படி சிவபெருமான் உத்தரவிட்டதாகவும் கூறப்படுகிறது” என்பதைக் குறித்துள்ளது.

**சட்டைமுனி இயற்றிய நூல்கள்**

சட்டைமுனி நிகண்டு–1200, சட்டைமுனி வாத காவியம்–1000, சட்டைமுனி சரக்கு வைப்பு–500, சட்டைமுனி நவரத்தின வைப்பு–500, சட்டைமுனி வாகடம்–200, சட்டைமுனி உண்மை விளக்கம்–51, சட்டைமுனி தண்டகம்–81, சட்டைமுனி மேற்படி சூத்திரம்–52, சட்டைமுனி குரு சூத்திரம்–25, சட்டை முனி ஞானவிளக்கம்–51, சட்டைமுனி தீட்சை–200, சட்டைமுனி ஞானம்–200, சட்டைமுனி பின் ஞானம்–200, சட்டைமுனி சடாட்சர கோவை–108, சட்டைமுனி நிகண்டு சூத்திரம்–51 முதலியவை இவர் இயற்றியதாகக் கூறப்படுகிறது.

**ஜீவ சமாதி**

சட்டைமுனி திருவரங்கத்தில் சித்தி பெற்றார். எனவே அத்தல மூலவரின் பெயர் சட்டைநாதர் என்றிருப்பதைச் சான்று காட்டுகிறார். மரு.ச.உத்தமராசன் (தோற்றக்கிராம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும்) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால் போகர் சட்டைமுனி சித்தர் சீர்காழியில் சித்தி பெற்றார் என்று போகர் ஜனன சாகரம் கூறுகிறது. சித்தர்கள் ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட தலங்களில் சித்தியடையக் கூடிய ஆற்றல் மிக்கவர்கள் என்றும் இந்த இரு கருத்துக்களுமே உண்மையானவை என்னும் கருத்தை ஆய்வாளர்கள் உறுதிப்படுத்துவர் என்பதை அறிய முடிகின்றது.

போகரின் ஜெனன சாகரம் 263 வது பாடலில்,

நாமென்ற குகையொன்று தெற்கே பார்த்து
நாதாக்களோடு சட்ட முனியுமுன்டு [60]

என்னும் பாடலில் சட்டைமுனியின் குகை பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

**சுப்பிரமணியர் வரலாறு**

தமிழர்கள் கடவுளாக வணங்கும் சுப்பிரமணியர், சித்தர்களில் முதல்வர். சிவபெருமான் மைந்தர். சித்தர் நூல்கள் எல்லாம் சிவபெருமான் உமைக்குச் சொல்ல, உமை நந்திக்குச் சொல்ல என்றே ஆரம்பமாகின்றன.

சிவபெருமானே சுப்பிரமணியர் என்பதால் சுப்பிரமணியர் பற்றி எவ்விடத்தும் குறிப்பிடப்படவில்லை. இவரே அகத்தியருக்குத் தமிழை உபதேசித்தவர் என்று கூறப்படுகிறது. சிவன் சொன்ன ஏழு இலட்சத்தைக் குறுக்கி ஏழாயிரமாகச் சொன்னேன் என்று போகர் குறிப்பிடுவதாகக் கூறப்படுகிறது. சிவன் சொன்ன ஏழு லட்சம் கிடைக்கவில்லை. சுப்பிரமணியர் பெயராலும் பல நூல்கள் குறிப்பிடப்படுகின்றன.

**சுப்பிரமணியர் நூல்கள்**

சுப்பிரமணியர் வைத்திய விஞ்சை 1500, குருபர நிதானம் 1000, சுப்பிரமணியர் ஞானம் 1000, சுப்பிரமணியர் ஞானம் 500, சுப்பிரமணியர் ஞானம் 200, சுப்பிரமணியர் பக்ஷணி 300, சுப்பிரமணியர் ஞான சைதன்யம் 108, சுப்பிரமணியர் ஞான கக்கிஷம் 55, சுப்பிரமணியர் சிவயோகம் 40, சுப்பிரமணியர் சுத்த ஞானம் 100, சுப்பிரமணியர் ஞானம் 33, சுப்பிரமணியர் நாடி 32, சுப்பிரமணியர் ஞானம் 32, சுப்பிரமணியர் ஞான விஞ்சை 30, சுப்பிரமணியர் ஞானம் 36, சுப்பிரமணியர் ஞானம் 20, சுப்பிரமணியர் ஞானம் 16, தீட்சை 16, சுப்பிரமணியம் ஞான 12, தேவிஞான தரிசனம் 10, சுப்பிரமணியர் பூஜா விதி 10. இவற்றுள் வைத்திய விஞ்சை 1500, குருபர நிதானம் 1000, ஞானம் முதலிய நூல்கள் கிடைக்கவில்லை.

ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட சுப்பிரமணியர் ஞானம் என்னும் தலைப்பில் அமைந்துள்ள 32 மற்றும் காப்புப் பாடலாக 1 பாடல், மொத்தம் 33 பாடல்கள் ஆய்விற்காக எடுத்துக்கொள்ளப்பட்டன. 32 பாடல்களிலும் சில

பாடல்களில் அகத்தியரிடம் சுப்பிரமணியர் கூறுவதாகவே பாடல் அமைந்துள்ளது. சுவாச மகிமை சொல்லும் பாடலாகவும் மூச்சுப் பயிற்சியினை முறையாகச் செய்தால் நோயின்றி என்றும் இளமையாக வாழலாம் என்பதைத் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளார். காப்புப் பாடலாக அமைந்த

ஒழியாத சுழுமுனையிலொடுங்கி (சு.ஞா.காப்பு)

என்னும் பாடலாலும்,

செய்யப்பா பிராணாயாமம் நினைவாய்ச் செய்யச்
சிவசிவா கருமானஞ் செப்பக் கேளு [61] (சு.ஞா.26)

என்னும் பாடலாலும் அறியமுடிகிறது.

**மதுரை வாலசாமி வரலாறு**

பால என்னும் வடமொழி தமிழில் வால என்று வழங்கப்படும். எனவே பாலசாமி என்னும் பெயரே வாலசாமி என்று மருவியிருக்கக்கூடும். இவர் இளமையிலேயே துறவு மேற்கொண்டவராக இருக்கலாம். இவரது ஊர் மதுரை என்பதை,

பாரிலுயர் மதுராபுரி யில்வாலை
சாமி சொல் லுங்கும்மிப் பாடலுக்கு... [62]

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

தன் பாடலின் வகை கும்மி என்றும் அதன் அளவு 185 கண்ணிகள் என்றும் 184 ஆம் கண்ணியில் குறிப்பிட்டுள்ளார். ''சித்தர் பட்டியலில் இவர் பெயர் குறிப்பிடப்படவில்லை. சித்தர் பாடல்கள் தொகுக்கப் பெற்ற காலம் 1875–1900 என்று மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.''[63]

"மிகவும் பிற்காலத்துப் பாடல்களும் 20–ஆம் நூற்றாண்டு உரைநடையும் இதனுள் அமைந்திருக்கின்றன என்பதால் இவர் 19 ஆம் நூற்றாண்டாக இருக்கக் கூடும் என்கிறார்.

பூட்டைத் திறப்பதுங் கையாலே மனப்
பூட்டைத் திறப்பது மெய்யாலே
வீட்டைத் திறக்க முடியாமல் விட்ட
விதி இது என்கிறார் ஞானப் பெண்ணே [64] (மது.வா. பா.43)

என்னும் பாடலில் மனப்பூட்டைத் திறப்பதற்கும் பேரின்ப வீட்டைத் திறப்பதற்கும் வழி தெரியாமல் விதியின் மீது பழிப்போடும் விந்தை மனிதர்களுக்குப் புரியும் வகையில் இடித்துரைத்துப் பாடியுள்ளார் இச்சித்தர்.

**பீரு முகமது வரலாறு**

இவர் பெயரைக் கொண்டு இவர் இசுலாமியர் என்று கூறப்படுகிறது. பிற வரலாறுகள் தெரியவில்லை; இசுலாமியரில் குணங்குடி மஸ்தான் என்பவரும் பீரு முகம்மதும் மத வேறுபாடின்றிச் சித்தர்களாக விளங்கிப் பாடியவர்கள். இவர்களைத் தமிழர்கள் மற்ற சித்தர்களுடன் ஒப்ப வைத்துப் போற்றி வருகின்றனர். எனவே சித்தர் பாடல்களில் பீரு முகம்மதின் ஞானரத்தினக் குறவஞ்சியைச் சேர்த்துப் போற்றிய தமிழர்கள் சித்தர் பாடல்களில் இவர் பெயரைச் சேர்க்கவில்லை. தொகுக்கப்பட்டக் காலத்துக்கும் குணங்குடியார் காலம் பிற்பட்டதாக இருக்கலாம் என்றும் பீரு முகம்மதின் காலம் 19 ஆம் நூற்றாண்டு எனவும் கருதப்படுகின்றது.

இவர் பாடலில் வரும் குறத்தி எல்லாம் அறிந்த ஞானி போலவும் குறவன் ஏதும் அறியாதவன் போலவும் காட்சிப்படுத்தப்படுகின்றனர். இவர் எழுதியவை கண்ணிகளாக அமைந்துள்ளன. ஆய்விற்கு எடுத்துக் கொண்ட சித்தர்களுள் காளைச்சித்தர், காரைச்சித்தர், தடங்கண்சித்தர், சூரியானந்தர்

ஆகிய சித்தர்களின் வரலாறுகள் கிடைக்கவில்லை. இவற்றில் சுந்தரானந்தர் வரலாறு உண்டு; பாடல்கள் இல்லை.

**தொகுப்புரை**

சித்தர்களின் வாழ்வும், வரலாறும் என்னும் முதல் இயலிலிருந்து பெறப்பட்டவை :

1. சித்தர் என்னும் சொல்லுக்கு விளக்கம், முதல் சித்தர் சிவபெருமான் மற்றும் சித்தர்களின் நிலை எவ்வாறு இருக்கும் என்பதை விளக்கும் பாடல், சித்தர் மரபு நாடு தழுவிய நிலை, இலக்கணத்தில் சித்தர் பற்றிய குறிப்புகள் அமைந்த பாடல்கள், இலக்கியத்தில் சித்தர் பற்றிய குறிப்புகள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.
2. சித்தர்களே "சித்தர்" என்னும் சொல்லைப் பாடல்களில் அமைத்திருந்த விதம், அறிஞர்கள் சித்தர்களைப் பற்றி கூறியக் கருத்துக்களும் விளக்கப்பட்டுள்ளன.
3. சித்தர் குறிப்புகள் அமைந்த ஓலைச்சுவடிப் பாடல், சித்தர்கள் பெயர் பட்டியல், சித்தர்கள் நூற்றாண்டுகள் மற்றும் வாழ்வு வரலாறு, அவர்கள் இயற்றிய நூல்களில் பாடல்களின் அமைப்பு, ஜீவசமாதி, ஞானம் பெற்றது ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. சி.எஸ். முருகேசன், **பதினெண் சித்தர் வரலாறு**, ப.22.
2. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.115.
3. ஸ்ரீ ஜயந்தயால் கோயந்தகா, **ஸ்ரீமத் பகவத்கீதை**, ப.633.
4. மு. சண்முகப்பிள்ளை, **தொல்காப்பியப் பொருளதிகாரம்**, ப.122.
5. ம.வே. பசுபதி, **செம்மொழித் தமிழ் இலக்கண இலக்கியம்**, ப.835.
6. மேற்படி, ப.939.
7. உ.வே.சாமிநாதையர், **இளங்கோவடிகளருளிச் செய்த சிலப்பதிகார மூலமும், அடியார்க்கு நல்லாருரையும்**, பக்.261–262.
8. தி. பாலசுப்பிரமணியன்(உ.ஆ.), **திருமூலர் திருமந்திரம்** (முதல் தந்திரம்), ப.30.
9. த.கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.453.
10. பா.கமலக்கண்ணன், **சித்தர் நூல்களில் அகத்தியர், திருவள்ளுவர் வரலாறு**, ப.3.
11. என். கிருஷ்ணமூர்த்தி, **பதினெண் சித்தர்கள் வரலாறு**, ப.150.
12. தெ.பொ. மீனாட்சிசுந்தரம், **சித்தர் கலைக்களஞ்சியம்**, தொகுதி–4, ப.643.
13. க.கைலாசபதி, **சித்தர் தத்துவம் ஒப்பியல் இலக்கியம்**, பக்.184–185.
14. கா. சுப்பிரமணியப்பிள்ளை, **இலக்கிய வரலாறு**, ப.231.
15. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, (15 ஆம் நூற்றாண்டு), ப.330.

16. இரா. மாணிக்கவாசகன், **நம் நாட்டுச் சித்தர்கள்**, ப.56.
17. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.271.
18. எஸ்.பி. இராமசந்திரன், **போகர் ஏழாயிரம் ஏழு காண்டங்கள்**, ப.147.
19. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போக முனிவர் அருளிச் செய்த ஜெனன சாகரம்**, ப.90.
20. சாமி. சிதம்பரனார், **சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம்**, ப.56.
21. இளமதி சானகிராமன், **சித்தர்களும் சமூகப் பார்வையும்**, ப.34.
22. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.315.
23. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போக முனிவர் அருளிச் செய்த ஜெனன சாகரம்**, ப.90.
24. எஸ்.பி. இராமசந்திரன், **யோக ஞான சாஸ்திரத் திரட்டு** (3 பாகம்), பக்.117–119.
25. எஸ்.பி. இராமசந்திரன், **சித்தர்கள் வரலாறு**, பக்.108–109.
26. மேற்படி
27. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.135.
28. தி. பாலசுப்பிரமணியன், **திருமந்திரம்** (3 பாகம்), பக்.441–442.
29. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ), **போக முனிவர் அருளிச் செய்த ஜெனன சாகரம்**, ப.69.
30. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.279.
31. என்.கே.கிருட்டிணமூர்த்தி, **சித்தர்களின் சீற்றம் என்னும் கதையில்**, **கலைமகள்** ப.57.
32. மேற்படி
33. இளமதி சானகிராமன், **சித்தரும் சமூகப் பார்வையும்**, ப.47.
34. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.135.

35. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ), **போக முனிவர் அருளிச்செய்த ஜெனன சாகரம்**, ப.90.

36. பா. கமலக்கண்ணன், **சித்தர் தத்துவம்**, பக்.19–20.

37. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.279.

38. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.328.

39. ஏ.எஸ். வழித்துணைவன், **சித்தர் தத்துவச் சிந்தனைகள்**, ப.28.

40. மேற்படி, ப.39.

41. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, பக்.237–239.

42. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போகர் சப்த காண்டம் ஏழாயிரம் போகர் கண்ட யோகம்**, ப.216.

43. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போகர் ஜனன சாகரம்**, ப.189.

44. மேற்படி, 239.

45. எஸ்.பி. இராமச்சந்திரன், **கருவூரார் வாத காவியம்**, ப.40.

46. எஸ்.பி. இராமச்சந்திரன், **அகஸ்தியர் அமுத கலைஞானம்**, ப.185.

47. எஸ்.பி. இராமச்சந்திரன், **சித்தர்கள் வரலாறு**, ப.222.

48. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போகர் சப்த காண்டம் ஏழாயிரம் போகர் கண்ட யோகம்**, ப.209.

49. மேற்படி, ப.227.

50. மேற்படி, ப.235.

51. மேற்படி, பக்.226–227.

52. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.387.

53. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போகர் கண்ட யோகம்**, ப.231.

54. எஸ்.பி. இராமச்சந்திரன், **சித்தர்கள் வரலாறு**, ப.259.

55. மேற்படி, பக்.257–258.

56. மேற்படி, ப.176.

57. சி.எஸ். முருகேசன், **சதுரகிரி சித்தர்கள்**, ப.49.

58. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போகர்** (சப்த காண்டம்) **ஏழாயிரம் போகர் கண்ட யோகம்**, ப.227.

59. எஸ்.பி. இராமச்சந்திரன், **அகஸ்தியர் 1200 என்னும் பெருநூல் காவியம்** (மூன்றாவது காண்டம்), பக்.117–119.

60. சா.அ.அ. யோகி ராமய்யா (தொ.ஆ.), **போக முனிவர் அருளிச்செய்த ஜெனன சாகரம்**, ப.76.

61. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, பக்.392–398.

62. மேற்படி, ப.272.

63. மு. அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, ப.344.

64. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.277.

## இயல் - இரண்டு

# மொழி நோக்கு

**முன்னுரை**

ஒரு மொழியின் அமைப்பியலை இலக்கண முறைப்படி விளக்குவது மொழியியல் ஆகும். சித்தர் பாடல்களில் மொழி நோக்கு என்னும் இவ்வியல் சொல்லடைவை அடிப்படையாகக் கொண்டு அதில் இடம் பெற்ற சொற்களை இலக்கண முறைப்படி ஆராய்கிறது. எனவே இவ்வாய்வு சொல்லின் இலக்கணம், அதன் வகைப்பாடுகள், சொல்லாக்கங்கள், சித்தர் பாடல்களில் அமைந்தவற்றை ஆராய்கின்ற முறையில் ஆய்வு அமைந்துள்ளது.

**சொல்**

ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்றா
இருதிணை ஐம்பால் பொருளையும் தன்னையும்
மூவகை இடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே [1]

என நன்னூலார் சொல்லின் இலக்கணத்தை வரையறை செய்கிறார். பொதுவாக, சொல் எனப்படுவது ஒரு எழுத்தானது தனித்து நின்றே அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகளோடு சேர்ந்து நின்றோ பொருள் உணர்த்துவது ஆகும். இச்சொல்லை,

| | |
|---|---|
| பெயர்ச்சொல் | இயற்சொல் |
| வினைச்சொல் | திரிசொல் |
| இடைச்சொல் | திசைச்சொல் |
| உரிச்சொல் | வடசொல் |

எனத் தமிழ் இலக்கண ஆசிரியர்கள் இலக்கணம் மற்றும் வழக்கு அடிப்படையில் வகைப்படுத்துகின்றனர்.

**பெயர்ச்சொல்**

குறிப்பிட்ட ஒரு மனிதனின் அல்லது பொருளின் பெயரைக் குறிப்பதாகவோ அல்லது பெயர்களின் பொருள்களைப் பொதுமைப்படுத்திக் கூறுவதாகவோ அமையும் சொற்கள் பெயர்ச்சொற்கள் என்று அழைக்கப்படுகின்றன. பெயர்ச்சொல் பற்றித் தொல்காப்பியர்,

பெயர் எனப்படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும், அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோர் அன்ன வுரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே [2]

இந்நூற்பாவில், பெயரென்று சொல்லப்படுவன உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர், விரவுப்பெயர் என்ற மூன்று வகையினை உடையதாகும் என்பதைக் குறிப்பிடுகின்றார். நன்னூலார் பெயர்ச்சொல் குறித்து,

இடுகுறி காரண மரபோ டாக்கத்
தொடர்ந்து தொழிலைக் காலந் தோற்றா
வேற்றுமைக்கு இடனாய்த் திணைபால் இடத்து ஒன்று
ஏற்பவும் பொதுவும் ஆவன பெயரே [3]

எனக் குறிப்பிட்டுள்ளார். காலம் காட்டாமல், வேற்றுமை உருபுகளை ஏற்று, உயர்திணை, அஃறிணை என்னும் இரு திணையிலும், ஐம்பாலிலும், மூவிடத்திலும் ஒன்றனை ஏற்பதாகவும், பலவற்றினை ஏற்பதாகவும் வருவன பெயர்ச்சொற்களாகும். இப்பெயர்ச் சொற்கள் மொழியியல் அடிப்படையில் கீழ்வருமாறு ஆராயப்பட்டுள்ளன. அவை

| | |
|---|---|
| இடுகுறிப்பெயர் | திசைப்பெயர் |
| காரணப்பெயர் | சுட்டுப்பெயர் |
| பொதுப்பெயர் | பதிலீட்டுப் பெயர் |
| சிறப்புப்பெயர் | ஆகுபெயர் |
| சினைப்பெயர் | வேற்றுமை |
| காலப்பெயர் | தொகைப்பெயர் |
| பண்புப்பெயர் | பெயரடை |
| எண்ணுப்பெயர் | |

**இடுகுறிப்பெயர்**

மக்கள் பழங்காலம் முதல் தொன்றுதொட்டு ஒரு பொருளை யாதொரு காரணமும் இன்றி குறிப்பிட்ட ஒரு பெயரால் வழங்கி வருவது இடுகுறிப்பெயர் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அகம் (காரை.121:2) | கல் (கடு.26:2) |
| கடல் (காரை.8:1) | கன்னல் (பாம்.57:3) |

**காரணப்பெயர்**

ஒரு பொருளை இன்ன காரணம் கருதி வழங்கி வரும் பெயர் காரணப் பெயர் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அசுரர் (சுப்பி.8:2) | கவசம் (காரை.23:1) |
| கயிறு (அழு.6:3) | கள்ளம் (கடு.15:2) |

**பொதுப்பெயர்**

ஒரே வகையான பொருட்களை அல்லது மக்களை இனம் காட்டி ஒன்றாக்கிக் கூறுவது பொதுப்பெயர் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அன்னை (காகபுசு.56:1) | தாவரம் (குதம்.30:1) |
| கலை (அகப்.46:1) வீடு | (பாம்.40:1) |
| கோயில் (பாம்.94:3) | |

**சிறப்புப் பெயர்**

குறிப்பிட்ட ஒரு மனிதன் அல்லது இடம் அல்லது பொருளைக குறித்து வருவது சிறப்புப் பெயர் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அம்பிகை (மது.2:1) | கருநெல்லி (மது.134:1) |
| கந்தன் (பீரு.36:1) | கரும்புகை (தடங்.3:3) |
| கமலம் (காரை.12:4) | கல்லுப்பு (சூரி.11:2) |
| கருந்துளசி (காக.71:1) | தும்பிமுகன் (மதுரை.2:2) |

**சினைப்பெயர்**

மனிதன் அல்லது பொருளின் உறுப்புகளைக் குறித்து வரும் பெயர்ச்சொல் சினைப்பெயர் எனப்படும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அங்கை (பாம்.14:1) | கொங்கை (பாம்.54:2) |
| இதழ் (உரோம.5:2) | தலை (அகப்.27:1) |

| | |
|---|---|
| கரம் (கண.76:2) | முடி (குதம்.5:1) |
| கழுத்து (கண.39:1) | மூக்கு (கண.39:1) |
| குடல் (உரோம.11:2) | வாய் (பாம்.46:2) |

**இடப்பெயர்**

இடத்தைக் குறிக்கும் பெயர்கள் இடப்பெயர்கள் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| உலகு (பாம். 104:3) | சந்தைப்பேட்டை (மது. 100:1) |
| கச்சிமாநகரம் (கண. 59:2) | சதுரகிரி (சுப். 31:1) |
| கயிலை (கண. 21:2) | சிதம்பரம் (கண. 95:3) |
| காசி (கடு. 16:1), | சிரகைலாயம் (கண. 86:7) |
| குகைமலை (மது. 136:2) | சிவலோகம் (மது. 61:2) |
| கைலாயம் (சட்டை. 104:2) | நாடு (கடு. 15:1) |
| கொல்லிமலை (மது. 134:2) | பாளையம்கோட்டை (மது. 24:2) |

**காலப்பெயர்**

காலத்தைக் குறித்து வரும் பெயர் காலப்பெயர் ஆகும். இக்காலப் பெயர் பொது, சிறப்பு என இரண்டு வகைப்படும். அவற்றுள் பொதுக்காலப் பெயர் என்பது காலம், நேரம், பொழுது, மாதம் போன்றவற்றைக் குறித்து வரும் சிறப்புக் காலப்பெயர் என்பது பொதுக்காலப் பெயர்களை இன்றியமையாததாகக் கொண்டு கார்காலம், காலைப்பொழுது, மாலைப் பொழுது, சித்திரை மாதம், தை மாதம் போன்றவற்றைக் குறித்து வரும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அரைக்கணம் (சட்டை. 188:2) | நாலாநாள் (இராம. 7:2) |
| ஆண்டு (இராம. 5:3) | நாள் (கடு. 3:2) |
| இரவு (கண. 26:3) | தினம் (குதம். 16:1) |
| காலம் (அகப். 35:1) | பகல் (குதம். 29:1) |
| சாமம் (இராம. 5:2) | மாதம் (கடு. 5:1) |

**பண்புப்பெயர்**

ஒரு மனிதன், பொருள், இடம் ஆகியவற்றின் பண்பை அல்லது இயல்பை உணர்த்தும் பெயர்கள் பண்புப் பெயர்கள் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அம்பொன் (அழு. 5:3) | செம்பொன் (அழு. 5:2) |
| செந்தேன் (கடு. 24:2) | |

**எண்ணுப்பெயர்**

எண்களைக் குறித்து வரும் பெயர்ச் சொற்கள் எண்ணுப் பெயர்கள் எனப்படும். சித்தர் பாடல்களில் இடம் பெற்ற எண்ணுப்பெயர்கள் கீழ்வருமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளன.



**எண்ணுப்பெயர் + எண்ணுப்பெயர்**

| | |
|---|---|
| அஞ்சுநூறும் (சட்டை 103:1) | ஒருகோடி (சூரி.11:1) |
| அறுநூறு (கணபதி 98:1) | கோடானுகோடி (சட்.183:1) |
| ஈராறும் (பீரு.53:2) | கோடிலட்சம் (சட்.125:2) |
| ஏழுலட்சம் (காக.41:1) | நாலேழில் (மதுரை.150:1) |
| ஐவரோர் (கண.19:4) | தொண்ணூற்றாறு (கண.19:1) |

**எண்ணுப்பெயர் + பெயர்ச்சொல்**

அஞ்சுகரைப்பங்கு (மது. 18:1) = அஞ்சுகரை + பங்கு

அஞ்செழுத்து (காக. 132:4) = அஞ்சு + எழுத்து

அட்டசித்தி (கடு. 19:2) = அட்ட + சித்தி

அட்டதிக்கு (குதம். 18:1) = அட்ட + திக்கு

இருகண்ணில் (காக. 1:2) = இரு + கண்ணில்

எழுதோற்றம் (சூரி. 3:3) = ஏழு + தோற்றம்

நாலாநாள் (இராம. 7:2) = நான்காம் + நாள்

லட்சவுரு (இராம. 4:2) = லட்சம் + உரு

**எண்ணுப்பெயர் + வினைச்சொல்**

இரண்டுமாகி (கண. 7:1) = இரண்டு + ஆகி

ஐவர் அடைந்திடும் (கடு. 14:1)

ஐந்து பேர் சூழ்ந்திடும் (கடு. 14:1)

மூன்றாகி (காக. 1:1)

**எண்ணுப்பெயர் + இடைச்சொல்**

ஆறினையும் (அழு. 35:1)

இருநூறும் (சட்டை. 118:4)

**எண்ணுப்பெயர் + வேற்றுமை**

அஞ்சில் (சட்.142:1) (இல்)

இருபத்தைந்தில் (சூரி.8:1), (இல்)

ஐங்கரணை (அழு.33:1) (ஐ)

ஒன்றோடு (அகப்.87:1)

**எண்ணுப்பெயர் + எண் + பெயர்ச்சொல்**

அறுபத்து நாலுயோகம் (காக. 11:1) = அறுபத்து + நாலு + யோகம்

ஆயிரத்தெட்டிதழ் (மதுரை. 60:1) = ஆயிரத்து + எட்டு + இதழ்

நூற்றெட்டு உருவம் (இராம. 6:3) = நூற்று + எட்டு + உருவம்

**திசைப்பெயர்**

குறிப்பிட்ட ஒரு திசையைக் குறித்து வரும் பெயர் திசைப்பெயர் ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அட்டதிக்கு (குத.18:1) | திசைகள் (கண.58:1) |
| எத்திசை (காக.44:4) | திசைநாதம் (சட்.41:4) |
| நாலுதிக்கு (சட்.193:3) | திசைகலங்கும் (காரை.16:2) |
| திக்குதிசை (இரா.3:3) | வடநூல் (காக.111:1) |

**சுட்டுப்பெயர்**

சுட்டுச் சொற்களுள் பெயராக வருவனவற்றைச் சுட்டுப்பெயர் என்பர். அதாவது ஒரு இடத்தில் இருக்கும் மனிதரையோ பொருளையோ சுட்டப் பயன்படும் பெயர் சுட்டுப்பெயர் என்று அழைக்கப்படுகின்றது. சுட்டுப்பெயர் இடத்தன்மையின் அடிப்படையில் மூன்று வகைப்படும். பொருள் தன்மையின் அடிப்படையில் இரண்டு வகைப்படும்.




**அண்மைச்சுட்டு**

அண்மை இடத்து இருக்கின்ற மனிதரையோ பொருளையோ சுட்டும் பெயர் அண்மைச் சுட்டுப்பெயர் எனப்படும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| இங்ஙன் (கடுவெளி.13:1) | இவள் (காகபுசு.47:2) |
| இங்கு (உரோமரிசி.3:3) | இவன் (சூரியா.11:3) |
| இது (கணபதி.88:2) | இவை (மதுரை.24:2) |
| இவர் (சட்.191:1) | |

**சேய்மைச்சுட்டு**

தொலைவில் இருக்கின்ற மனிதனையோ பொருளையோ சுட்டும் பெயர் சேய்மைச் சுட்டு எனப்படும்.

**காட்டுகள்**

அங்கு (சட்.70:3) அவர் (மதுரை.15:1)

அந்த (பீடு.1:2) அவன் (கடு.33:1)

அது (காரை.9:1) அவை (இடை.ஆ.க.4:1)

**இடைமைச்சுட்டு**

அண்மை இடத்துக்கும் சேய்மை இடத்துக்கும் இடைப்பட்ட தூரத்தில் மனிதனையோ பொருளையோ சுட்டும் பெயர் இடைமைச் சுட்டு எனப்படும்.இடைமைச்சுட்டு சொற்கள் சித்தர் பாடல்களில் இடம் பெறவில்லை.

**அகச்சுட்டு**

ஒரு சொல்லுக்கு அகத்தே நின்று சுட்டுப்பொருளை உணர்த்தும் சுட்டுப்பெயர் அகச்சுட்டுப் பெயர் ஆகும்.

**காட்டுகள்**

அது (அகப்.6:2)

இது (சட்.202:2)

**புறச்சுட்டு**

ஒரு சொல்லுக்குப் புறத்தே நின்று சுட்டுப்பொருளை உணர்த்தும் சுட்டுப்பெயர் புறச்சுட்டுப் பெயர் ஆகும்.

**காட்டுகள்**

அவ்வழி (கடு.10:2) இந்நூல் (காக.22:4)

அவ்வளி (சட்.19:2) இவ்வகை (காக.117:3)

அவ்விருளை (கண.64:2)

**பதிலீட்டுப் பெயர்**

ஒரு பெயர்ச் சொல்லுக்குப் பதிலாக மற்றொரு பெயரை இட்டு வழங்குவது பதிலீட்டுப் பெயர் என்று அழைக்கப்படுகிறது. இதனை மாற்றுப் பெயர் என்று அழைப்பர். பதிலீட்டுப் பெயர்களாக வருபவை.

மூவிடப்பெயர்

வினாப்பெயர்

**மூவிடப்பெயர்**

மூவிடப்பெயர் → தன்மைப்பெயர்
மூவிடப்பெயர் → முன்னிலைப்பெயர்
மூவிடப்பெயர் → படர்க்கைப் பெயர்

**தன்மைப்பெயர்**

தன்னை அல்லது பேசுகின்றவனைக் குறிக்கும் பெயர் தன்மைப்பெயர் ஆகும்.

தன்மைப்பெயர் → தன்மை ஒருமைப்பெயர்
தன்மைப்பெயர் → தன்மை பன்மைப்பெயர்

என இரண்டு வகைப்படும்.

**தன்மை ஒருமைப்பெயர்**

சித்தர் பாடல்களில் என், நான், யான் ஆகிய தன்மை ஒருமைப் பெயர்கள் இடம் பெற்றுள்ளன.

**காட்டுகள்**

என் – (அகப்.சி.21:1) – கணத்தில் **என்** பயம் அற மயில் முதுகினில் வருவாயே (பா.21:1)

நான் – (அகப்.70:1)

தான் – (இரா.2:1)

யான் – (அழு.19:2)

**தன்மைப் பன்மைப் பெயர்**

தன்மைப் பெயர் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைப்பெயர், உளப்படுத்தாத் தன்மைப் பன்மைப் பெயர் என இருவகைப்படும்.

**உளப்பாட்டுத் தன்மைப் பன்மைப் பெயர்**

யாரிடம் பேசுகிறோமோ அவரையும் உட்படுத்திக் கூறும் பெயர் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைப் பெயர் எனப்படும்.

காட்டுகள்

எம் – (அகப்.19:1) – இந்த விதங்கமெல்லாம் அகப்பேய் **எம்** இறை அல்லவடி (அக.19:1)

நம் – (கடு.2:1)– சாபம் கொடுத்திலடாமோ? – விதி

தன்மை **நம்** மாலே தடுத்திடலாமோ?

யாம் – (சட்.1:2) – தேனென்ற மேருவுக்குத் தீட்சை வேண்டும்

சிறுபிள்ளை **யாம்** ஒருவன் தீண்டப்போகா (சட்.1:2)

**உளப்படுத்தாத் தன்மைப் பன்மைப் பெயர்**

யாரிடம் பேசுகிறோமோ அவரை விடுத்துக் கூறும் பெயர் உளப்படுத்தாத் தன்மைப் பன்மைப் பெயர் ஆகும்.

**காட்டு**

எங்கள்–(காக.59:1) எங்கள் சுந்தரம் வேறு ஆர் ஒர்வாள் (காக.59:1)

**முன்னிலைப் பெயர்**

தன் முன் இருப்பவரைக் குறிக்கும் பெயர் அல்லது யாரிடம் பேசுகிறோமோ அவரைக் குறிக்கும் பெயர் முன்னிலைப் பெயர் ஆகும்.




என இரண்டு வகைப்படும்.

**முன்னிலை ஒருமைப் பெயர்**

**காட்டுகள்**

1. உன் – (அகப். 59:2) –

   இணங்கு மொழிலுடைய யானும் இங்கு

   உன் அடியவர் போல் (அகப். 59:2)

2. நீ – (காக. 49:4) –

   அநந்தம் மேலை வெளியேறி நீ இன்றி

   நாடினும் (காக. 49:4)

3. தங்கள் – (காக. 101:3) –

   அம்புலி அடைந்த நூல்

   விஞ்சையர்கள் தங்கள் (காக. 101:3)

4. உரைத்தீர் (காக. 123:1) –

   பெற்றேரே யென்று உரைத்தீர் வசிட்டரே நீர்

   பிறந்திருந்தே எட்டாங்காற் பிறந்து வந்தீர் (காக. 123:1)

**முன்னிலைப் பன்மைப்பெயர்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட சித்தர் பாடல்களில் முன்னிலைப் பன்மைப் பெயர் இடம் பெறவில்லை.

**படர்க்கைப் பெயர்**

தன்மை மற்றும் முன்னிலையில் இருப்பவரைக் குறிக்காமல் வேறோரிடத்து இருப்பவரைக் குறித்து வரும் பெயர் படர்க்கைப் பெயர் ஆகும்.




என இருவகைப்படும்.

**படர்க்கை ஒருமைப்பெயர்**

1. அது – (பீரு.6:1) – பராபரத்தினில் பஞ்சவன்னமேது சிங்கி <u>அது</u> (பீரு.6:1)
2. அவள் – (காக.37:2) –

   உருக்கமுடன் பெண்ணரசி யொன்றி நின்பாள்

   ஒகோகோ <u>அவள்</u> முகத்தைப் பார்க்கும் போது (காக. 37:2)

**படர்க்கைப் பன்மைப்பெயர்**

**காட்டுகள்**

1. அவை – (கடு. 33:1) –

   எவ்வகையாக நன்னீதி – <u>அவை</u>

   எல்லாம் மறிந்தே யெடுத்து நீ போதி (கடு. 33:1)

2. தாம் (அழு. 12:3, காக. 33:1)

   மங்கை காளி நடனமாடி அன்பர் <u>தாம்</u> (அழு. 12:3)

   இரக்கம் செயாது உரை சிறுவர் கடையில் சென்று <u>தாம்</u> (காக. 33:1)

**வினாப்பெயர்**

வினாப்பொருளை உணர்த்துகின்ற பெயர்ச்சொல் வினாப்பெயர் ஆகும். தொல்காப்பியர் ஆ, ஏ, ஓ இம்மூன்றும் வினா என வினாப் பெயர்களின் முதல் எழுத்துகளைச் சுட்டுகின்றார். இவ்வெழுத்துக்களை முதலாகக் கொண்டு வரும் வினாப்பெயர் மொழி முதல் வினா அல்லது அடி வினா, மொழி இறுதி வினா அல்லது ஒட்டு வினா என இரு வகைகளை உடையது.

**மொழி முதல் வினா அல்லது அடி வினா**

எ ஏ யா ஆகிய மூன்று எழுத்துக்களை முதலாகக் கொண்ட சொற்கள் மொழி முதலில் வந்து வினாப் பொருளைத் தருகின்றன.

**காட்டுகள்**

1. எந்த (அகப். 28:1) –

   இறைவன் என்றதெல்லாம் அகப்பேய்

   <u>எந்த</u> விதமாகும் (அக. 28:1)

2. எவ்வாறு (காக. 120:3) –

. தூரமாக எவ்வாறே திரும்பப் போவார்

சூட்சமதை நாமறிவோம் பின்னே தோதான் (காக. 120:3)

3. எவர் (பாம். 16:2) (கணபதி. 95:4) –

கூடு விட்டுக் கூடு பாயும் கொள்கையுடைய

குருவின் வல்லபம் எவர் கூற வல்லவர் (பாம். 16:2)

4. எவன் (மதுரை. 7:1) –

ஏகப் பெருவெளி பட்டணமாம் – அதில்

எவன் சித்தனொருவனுண்டாம் – அந்த (மது. 7:1)

5. எவை (காரை. 5:3) –

அயனில்லா எவையுந்தா னாகக் காணல்

அத்துவிதத் தாலின்பச் சித்தம் பேணல் (காரை. 5:3)

6. ஏது (காக. 61:1, அகப். 77:1) –

அறியாத பாவிக்கு ஞான மேது

ஆறுமுகன் சொன்ன தொரு நூலைப்பாரு (காக. 61:1)

7. யார் (பீரு. 9:1) –

மூலக் குகையெனுங் கோட்டைக் கரசர் யார் சிங்கி – அது

முப்பொருள் ஒன்றாய் முடிந்த நினைவடா சிங்கா (பீரு. 9:1)

8. யாவர் (கண. 40:3) –

ஆபத்து வந்தா லுன்னோ டியாவர் தாம் வருவார்? அந்தக்

கோபத்தை மறந்து நாகை லிங்கரைத் தொழுவாய் நெஞ்சே (40:3)

**மொழி இறுதி வினா அல்லது ஒட்டு வினா**

ஆ, ஓ ஆகிய இரண்டு எழுத்துகளை இறுதியாகக் கொண்ட சொற்கள் மொழி இறுதியில் வந்து வினாப் பொருளைத் தருகின்றன.

**காட்டுகள்**

ஆ:

அறிந்தா – (கண. 22:2)

காணப்பா – (காக. 59:1)

கூட்டமப்பா – (காக.144:2)

கேளப்பா – (காக. 3:1, 4:1, 34:1)

ஓ:

அரிதோ (இடை. 75:2)

அன்றளவோ (காக. 134:4)

ஆகாதோ (அழு. 6:5)

உளதோ (இடை. 57:2)

எங்கே (கண. 63:3)

ஒப்பாமோ (அழு. 26:5)

காணதோ (அழு. 23:5)

கிட்டுமோ (கண. 7:4)

சதமாமோ (அழு. 26:4)

**ஆகுபெயர்**

ஒன்றன் பெயர் அதனொடு தொடர்புடைய பிறிதொன்றுக்கு ஆகி வருவது ஆகுபெயர் ஆகும். நன்னூல்,

பொருள்முத லாறோ டளவைசொல் தனி
கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
ஒன்றன் பெயரால் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே [4]

என்கிறது.

**காட்டுகள்**

மகுடத்தோனே (காக.116:4)

ஆலத்தான் (காரை. 24:4)

**வேற்றுமை**

பெயருக்கும் வினைக்கும் உள்ள உறவு வேறுபாடுகளை வேற்றுமை என்பர். பெயர்கள் உருபுகளை ஏற்று, பொருள் வேற்றுமைப்படுத்தும் தன்மையை உணர்த்தும் பகுதி வேற்றுமை ஆகும். தமிழில் உள்ள வேற்றுமைகளை மரபிலக்கணங்கள் 8 வகையாகப் பிரித்துள்ளன. அவ்வேற்றுமைக்கு எண்ணிக்கை அடிப்படையிலும் மரபு அடிப்படையிலும் பொருள் அடிப்படையிலும் பெயர் கொடுத்துள்ளனர். வேற்றுமை உருபுகள் பெயர்கள் உடன் இணையும் போது இன், வற்று, அத்து, அம், ஒன், ஆன், அக்கு, இக்கு, அன் ஆகிய சாரியைகளைப் பெற்றும் பெறாமலும் இணைகின்றன.

**காட்டுகள்**

1. அடியை (சட். 188:2)
   ஆட்டினை (தடங். 5:3)
   காரணத்தை (சுப். 13:3)
   } ஐ

   எண்ணையால் (தடங். 3:3)
   வாயால் (மதுரை. 135:2)
   } ஆல்

| | |
|---|---|
| குருடர்க்கு (தடங். 6:4) | கு |
| மலையின் (தடங். 4:3) | |
| பஞ்சணையின் (அழு. 3:2) | இன் |
| கண்ணாடியின் (இடை. 126:1) | |
| மனத்தொடு (சட். 164:4) | ஒடு |
| சுழித்தோடும் (சட். 147:4) | |
| அதீதத்தில் (சட். 84:3) | |
| வாயில் (மது. 135:2) | இல் |
| நொடியில் (அழு. 25:5) | |

**பெயரடை**

பெயருக்கு அடையாக வரும் கிளவிகள் எல்லாம் பெயரடை ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அழகிய உடல் (தடங். 4:1) | மடவனமே (இடை. 91:2) |
| இளவயசு (காக. 50:2) | நற்குரு (அக. 64:2) |
| சீரடி (கண. 30:3) | நன்மனம் (சட். 191:1) |
| பைம்பொன் (அழு. 5:1) | நன்மனையில் (கண. 85:2) |

**விளிப்பெயர்கள்**

சேய்மையில் இருப்பவரைத் தன் முகமாக அழைக்கும் பொருட்டு விளியுருபை ஏற்றும் வரும் பெயர் விளிப்பெயர் ஆகும். சித்தர் பாடல்களில் விளிப்பெயர்கள் மிகுதியான பெயர்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் சில காட்டுக்கள்.

குதம்பாய் (குதம்.1:1)

நெஞ்சே (தடங்.4:4)

நோக்கியடா (காளை.3:2)

**தொகைப்பெயர்**

பெயர்ச்சொற்களோடு பெயர்ச்சொற்களையும் வினைச்சொற்களோடு வினைச்சொற்களையும் இணைக்கும் போது அவற்றின் இடையே சில சொற்கள் தொக்கி வருவது உண்டு. அவ்வாறு தொக்கி வரக்கூடிய சொற்கள் தொகைச் சொற்கள் என்று அழைக்கப்படுகின்றன. தொகைப் பெயர் ஆறு வகையில் வருகின்றது.

அவை :




**வேற்றுமைத்தொகை**

வேற்றுமைத் தொகையாவது இரண்டு சொற்களுக்கு இடையே இரண்டாம் வேற்றுமை உருபு முதல் ஏழாம் வேற்றுமை உருபுகள் மறைந்து வருவது ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| இமயகிரி (சுப்பி. சி. 6:3) | சிவசத்தி (சுப்பி.சி. 6:1) |
| உச்சிமேல் (கண. 59:3) | சிவசொரூபம் (காக. 106:3) |
| நங்கைமேல் (கண. 50:3) | சிவயோகம் (சுப்பி.சி. 0:1) |

**வினைத்தொகை**

வினையும் பெயரும் சேர்த்து அமைந்த தொகையினை வினைத்தொகை என்பர். இதில் காலம் காட்டும் இடைநிலைகள் மறைந்து வருகின்றன.

**காட்டுகள்**

| | |
|---|---|
| ஆடுகின்றாள் அன்னை (காரை. 25:2) | படுகளம் (மது. 105:2) |
| எரிமலை (காரை. 16:1) | வருபதம் (கண. 22:4) |
| உறுகதி (காரை. 13:1) | விரி தலைமயிரும் (தட. 7:1) |
| தொடுகுறி (சட். 154:1) | |

**பண்புத்தொகை**

பண்புப்பெயரும் பண்பியும் தொக்க தொகையினைப் பண்புத்தொகை என்பர். பண்புத் தொகையாவது இரண்டு சொற்களுக்கு இடையே வண்ணம், வடிவு, அளவு, சுவை ஆகிய பண்புகளைக் காட்டும் சொற்கள் தொக்கி வருவது ஆகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அம்பொன் (அழு. 5:3) | செம்பாதி (மது. 15:2) |
| அருங்குணம் (காரை. 5:4) | செம்பொன் (அழு. 5:2) |

| | |
|---|---|
| கடுந்தவம் (அகப். 50:1) | திருவாய் (காரை. 7:1) |
| கருங்கல் (தடங். 8:3) | நல்வினை (அகப். 37:1) |
| கரும்புகை (தடங். 3:3) | பசும்பொன் (கண. 37:1) |
| கருநெல்லி (மது. 134:1) | பைம்பொன் (அழுக. 5:1) |
| செங்கமலம் (சுப். 27:2) | பைம்பொன் (அழுக. 5:1) |
| செங்கை (கண. 50:4) | முத்தமிழ் (குதம். 10:1) |

**உவமைத்தொகை**

உவமைத் தொகையாவது இரண்டு சொற்களுக்கு இடையே உவமையைக் காட்டும் உவம உருபுகள் வருவது ஆகும்.

**காட்டுகள்**

சேல்விழி (அழு. 5:2)

மலர்பாதம் (சூரி. 9:4)

மலரடி (கண. 22:4, 56:4)

**உம்மைத்தொகை**

உம் என்னும் கிளவி மறைந்து நிற்கத் தொகுக்கப்பட்ட பெயர்த்தொகை உம்மைத்தொகை எனப்பெயர் பெறும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அல்லுபகல் (காக. 65:3) | பரிதிமதி (சுப். 29:2) |
| சிவனுமையாள் (சுப். 3:2) | தாய்தந்தை (அழு. 28:2) |

**அன்மொழித்தொகை**

அன்மொழித்தொகையாவது மேற்கூறிய தொகை மொழிகளில் தொக்கிவந்த மொழிகள் தவிர்த்துப் பிறமொழிகள் சொற்றொடரில் மயங்கி வருவதாகும்.

ஆயிழையாள் (காக. 14:3)

ஆயிழையாள் என்பது அழகான தொடியினை அணிந்திருக்க கூடிய பெண்ணைக் குறிக்காமல் பார்வதியைக் குறித்தது.

**வினைச்சொல்**

ஒரு வினையை உணர்த்தும் சொல் வினைச்சொல் ஆகும். இவ்வினைச்சொல் வேற்றுமை ஏற்காது. காலம் காட்டும்.

வினைச்சொல்

**செய்பவன் கருவி நிலஞ்செயம் காலம்**
**செயப்பொரு ளாறுந் தருவது வினையே** [5]

என நன்னூல் கூறும் ஆறு பொருள்களை உணர்த்தக் கூடியதாக வருகின்றது.

- தெரிநிலைவினை
- குறிப்புவினை
- தன்வினை
- பிறவினை
- செயப்படுபொருள் குன்றாவினை
- செயப்படுபொருள் குன்றியவினை
- உடன்பாட்டு வினை

- எதிர்மறை வினை
- எச்சவினை
- வினையடை
- வினைப்பெயர்
- துணைவினை
- முற்று வினை

முதலிய பிரிவுகளில் ஆராயப்பட்டுள்ளது.

**தெரிநிலைவினை**

ஒரு வினைச்சொல் தான் உணர்த்தும் பொருளை வெளிப்படையாக உணர்த்தினால் அச்சொல் தெரிநிலை வினைச்சொல் என்று அழைக்கப்படும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அஞ்சார்கள் (அக. 31:1) | செய்தார் (சூரி. 6:2) |
| இருந்தார் (மது. 57:1) | சொன்னார் (பீரு. 17:1) |
| சாராதார் (இடை. 45:1) | மறந்தார் (காரை. 14:2) |

**குறிப்புவினை**

ஒரு வினைச்சொல் தான் உணர்த்தும் பொருளை வெளிப்படையாக உணர்த்தாது குறிப்பாக உணர்த்தினால் அச்சொல் குறிப்பு வினைச்சொல் எனப்படும்.

| | |
|---|---|
| ஏழையர் (தடங். 8:2) | செய்தவன் (இரா. 9:4) |
| ஒருத்தவன் (காக. 105:2) | செத்தார் (குத. 24:1) |
| கொண்டவள் (தடங். 7:2) | மனையாள் (கண. 23:2) |

**தன்வினை**

ஒருவன் தான் செய்யக்கூடிய தொழிலைத் தானே செய்து கொள்வதாக அமையும் வினைச்சொல் தன்வினையாகும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அறிவேன் (காக. 116:3) | செய்தேன் (இடை. 65:1) |
| இருந்தேன் (அழு. 19:2) | வைத்தேன் (சூரி. 8:2) |
| சாற்றுவேன் (சட். 86:1) | |

**பிறவினை**

ஒருவன் தான் செய்யக்கூடிய தொழிலைத் தானே செய்து கொள்ளாது. பிறர் உதவியைக் கொண்டு தன் தொழிலை முடித்துக் கொள்வது பிறவினை ஆகும்.

**காட்டுகள்**

போக்கு (சட்டை) 146:1, 147:2

மாயம் போக்கு (சட்டை) 110:2

**செயப்படுபொருள் குன்றாவினை**

ஒரு வினைச்சொல் செயப்படுபொருளை உணர்த்தக் கூடியதாக அல்லது வேற்றுமையை ஏற்று வரக்கூடியதாக இருக்குமானால் அச்சொல் செயப்படுபொருள் குன்றாவினை எனப்படும்.

| | |
|---|---|
| அருந்தி (கண. 73:3) | நொந்தல் (அழு. 25:4) |
| எய்தல் (பாம். 94:2) | புனைவர் (தட. 8:3) |
| கடத்தல் (இடை. 64:1) | முத்திபெற்று (குத. 19:1) |

**செயப்படுபொருள் குன்றியவினை**

ஒரு வினைச்சொல் செயப்படுபொருளை உணர்த்தாது அல்லது வேற்றுமையை ஏற்காது வருமானால் அச்சொல் செயப்படுபொருள் குன்றியவினை எனப்படும்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அடங்க (இடை. 104:1) | படைத்து (தட. 9:3) |
| உயர்ந்தது (கடு. 19:1) | பிறந்தது (அக. 43:2) |
| படர்ந்தது (அழு. 18:1) | பெருக (காக. 73:4) |

**உடன்பாட்டு வினை**

ஒரு வினைச்சொல் தன் பொருளை நேரடியாக உணர்த்துவது உடன்பாட்டு வினை ஆகும்.

**காட்டுகள்**

அறிந்திலேன் (காக. 135:1)

அறியோம் (காக. 119:2)

கண்டிலேன் (சட். 191:1)

**எதிர்மறை வினை**

**காட்டுகள்**

நினையார் (தடங். 8:1)

நெகிழார் (தடங். 8:2)

வாழேன் (அழு. 28:5)

**எச்சவினை**

ஒரு வினைச்சொல் முற்றுப்பெறாது மற்றொரு சொல்லுக்காக எஞ்சி நிற்பது எச்சவினை ஆகும்.




என இரண்டு வகைப்படும்.

**பெயரெச்சம்**

ஒரு பெயருக்காக எஞ்சி நிற்கும் வினைச்சொல் பெயரெச்சச் சொல்லாகும். அதாவது ஒரு வினைச்சொல் பெயர்ச்சொல்லைச் சார்ந்து பொருள் உணர்த்துவது பெயரெச்சம் ஆகும். இது இரண்டு வகைப்படும். அவை;




**தெரிநிலைப் பெயரெச்சம்**

ஒரு பெயரெச்சச் சொல் வெளிப்படையாகத் தன் பொருளை உணர்த்துவது தெரிநிலைப் பெயரெச்சம் ஆகும். இப்பெயரெச்சம் வெளிப்படையாகப் பொருள் உணர்த்துவதால் மூன்று காலங்களையும் உணர்த்துகிறது. தெரிநிலைப் பெயரெச்சம் மூன்று வகைப்படும். அவை:




என மூவகைப்படும்.

**காட்டுகள்**

- இறந்தகாலத் தெரிநிலைப் பெயரெச்சம்

அழிந்த (அக. 71:2) கூறிய (மது. 158:1)

ஆட்கொண்ட (கண. 17:2) கொண்ட (மது. 35:1)

கடந்த (இடை. 6:1, 49:1)

- நிகழ்காலத் தெரிநிலைப் பெயரெச்சம்

ஆளுகின்ற (அழு. 24:1) பெருக்கின்ற (சூரி. 3:2)

இருக்கின்ற (மது. 144:2) பேசுகின்ற (சூரி. 7:1)

புரிகின்ற (இடை. 71:2)

- எதிர்காலத் தெரிநிலைப் பெயரெச்சம்

அசைந்திடும் (கடு. 14:1) முட்டும் (இரா. 4:3)

ஆட்டும் (கண. 19:1) விட்டோடும் (இடை. 41:2)

ஆடும் (குத. 18:1) வெறுத்திடும் (இடை. 110:1)

ஓடும் (காக. 3:2)

**குறிப்புப் பெயரெச்சம்**

ஒரு பெயரெச்சச் சொல் வெளிப்படையாகத் தன் பொருளை உணர்த்தாது குறிப்பாக உணர்த்துமாயின் அச்சொல் குறிப்புப் பெயரெச்சம் ஆகும். இப்பெயரெச்சம் குறிப்பாகப் பொருளைக் காட்டுவதால் காலமும் குறிப்பாகவே வெளிப்படுகின்றது.

காட்டுகள்

அழகிய உடல் (தட. 4:1) பொல்லா யோகம் (காரை. 13:4)

நல்லபுத்தி (கடு. 12:2) வளர்ந்த லிங்கம் (காக. 44:1)

சார்ந்த ஆன்மா (காக. 86:1)

**வினையெச்சம்**

ஒரு வினைச்சொல் முற்றுப் பெறாது மற்றொரு சொல்லுக்காக எஞ்சி நிற்பது வினையெச்சமாகும். வினையெச்சம் பொருள் உணர்த்தும் தன்மையின் அடிப்படையில் இரண்டு வகைப்படும்.




என மூன்று வகைப்படும்.

**காட்டுகள்**

- இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சம்

  அழித்துப் போட்டார் (மது. 35:4)

  மாண்டு (உரோ. 2:1)

  வந்து (அழு. 12:4)

- நிகழ்காலத் தெரிநிலை வினையெச்சம்

  கண்டு (தட. 2:4)

- எதிர்காலத் தெரிநிலை வினையெச்சம்

  அசைந்து (குத. 18:1)

  சிந்தித்து (அக. 15:2)

  விழித்து வெளிகாட்டாயோ (அழு. 32:5)

**குறிப்புப் பெயரெச்சம்**

ஒரு வினைச்சொல் எஞ்சி நின்று காலத்தைக் குறிப்பாய்க் காட்டிப் பொருள் உணர்த்துவது குறிப்பு வினையெச்சம் ஆகும்.

**காட்டுகள்**

அல்லாது (காக. 139:2)

அன்றி (கடு. 27:1)

இல்லாது (பாம். 103:3)

**வினைப்பெயர்**

வினைப்பெயர் என்பது வினைச்சொற்களில் இருந்து உருவாக்கப்படும் பெயர்கள் ஆகும். இப்பெயர் இரண்டு வகைப்படும். அவை:




**ஆக்கப்பெயர்**

ஆக்கப்பெயர் என்பது ஒரு பெயரை வினையிலிருந்து உருவாக்குவது ஆகும்.

**காட்டுகள்**

அஞ்சலி (சட். 105:3) சொல்லல் (அக. 73:1)

ஆடல் (கண. 67:2) வாழ்க்கை (உரோ. 4:1)

செப்பு (சட். 66:4)

**தொழிற்பெயர்**

ஒரு வினையைக் குறித்து வரும் பெயர்ச்சொல் தொழிற்பெயர் ஆகும். அதாவது ஒரு வினைச்சொல் ஒரு தொழில் நடைபெறுவதை உணர்த்தாது அத்தொழில் எதுவென்று உணர்த்துவது தொழிற்பெயர் ஆகும்.

இத்தொழிற்பெயர் பெயர்களைப் போன்று வேற்றுமை உருபுகளை ஏற்றும் வினைகளின் பண்புகளையும் பெற்று வரும். தொழிற்பெயரில் வினையாலணையும் பெயரும் அடங்கும். ஒரு வினைமுற்றுச் சொல் ஒரு வினையை உணர்த்தாது. அவ்வினை செய்தவனையோ பொருளையோ உணர்த்துவது வினையாலணையும் பெயராகும்.

**காட்டுகள்**

உண்டுதல் (கண. 55:3) தரிசித்தல் (காக. 146:2)

உருப்படுத்தல் (இடை. 93:1) திடப்படுதல் (சட். 176:3)

கடத்தல் (இடை. 64:1) மூசுழிதல் (இரா. 3:1)

சேர்த்தல் (உரோ. 6:1)

**வினையாலணையும் பெயர்**

அண்டினோர் (கடு. 11:2) குடித்தவன் (காரை. 10:2)

கண்டவர் (அழு. 20:3) பருகிடுவான் (காரை. 10:2)

கண்டோர் (குதம். 11:1) மறந்தார் (அழு. 28:2)

**துணைவினை**

ஒரு வினைச்சொல் உடன் அகராதிப்பொருள் தரும் மற்றொரு வினைச்சொல் இணைந்து நின்று ஒரு சொல் நீர்மைத்தாகி இலக்கணப் பொருள் உணர்த்துவது துணைவினை ஆகும்.

**காட்டுகள்**

உறு – விந்தையுறு (காரை. 28:3)

மாறு – பதியுமாறு (காக. 152:2)

இட – புகழ்ந்திட (காக. 44:4)

இடு – அரைத்திடு (காக. 71:2), மடித்திடு (தட. 7:1)

கண்டு – கலங்கண்டு (சட். 59:2)

இட்டு – வேடமிட்டு (காக. 27:3), சுருக்கிட்டு (காக. 96:2)

**முற்றுவினை**

பொதுவியல் பறையும் தேற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரலது ஏற்பில முதற்றே [6]

என நன்னூல் முற்றுவினைக்கு இலக்கணம் வகுக்கிறது. ஒரு தொழில் அல்லது வினைமுடிந்ததைக் குறிக்கும் வினைச்சொல் முற்றுவினை ஆகும். அது ஐந்து வகைப்படும்.




**தன்மை வினைமுற்று**

பேசுகின்றவனின் வினை முடிந்ததைக் குறிக்கும் வினைச்சொல் தன்மை வினைமுற்றாகும். தன்மை வினைமுற்று இரண்டு வகைப்படும். அவை:




**காட்டுகள்**

- தன்மை ஒருமை வினைமுற்று

உணர்த்துகிறேன் (மது. 151:1) சொல்லுகிறேன் (இரா. 5:4)

என செய்வேன் (சட். 123:4) மாற்றுகிறேன் (காக. 130:2)

கண்டேன் (காரை. 26:4) வந்தேன் (சட். 61:3)

பகருகிறேன் (காரை. 28:1)

- தன்மை பன்மை வினைமுற்று

அறியோம் (காக. 119:2) பகர்வோம் (காக. 28:1)

இருப்போம் (கண. 6:2) பார்த்திருப்போம் (காக. 120:1)

காண்போம் (காக. 141:3) போவோம் (காக. 124:4)

ஈவோம் (சுப். 2:3) கேட்டிருப்போம் (சட். 50:1)

செய்வோம் (சட். 200:3)

**முன்னிலை வினைமுற்று**

கேட்கின்றவனின் வினை முடிந்ததைக் குறிக்கும் வினைச்சொல் முன்னிலை வினைமுற்றாகும். இது முன்னிலை ஒருமைவினைமுற்று. முன்னிலைப் பன்மை வினைமுற்று என இரண்டு வகைப்படும்.

**காட்டுகள்**




- முன்னிலை ஒருமை வினைமுற்று

அலைந்தாய் (கண. 6:3) செபித்திடுவாய் (சட். 194:4)

உரைப்பாய் (கண. 7:4) நிற்பாய் (காக. 30:2)

செய்திடுவாய் (காக. 23:3) வந்தாய் (சட். 190:4)

- முன்னிலை பன்மை வினைமுற்று

| | |
|---|---|
| அறிவீர் (காக. 153:2) | கண்டீர் (காரை. 6:4) |
| அனுப்புவித்தீர் (சட். 64:1) | பன்னிடுவீர் (சட். 139:3) |
| உரைத்தீர் (காக. 123:2) | பெற்றீர் (காக. 124:1) |
| உணருவீர் (காக. 159:2) | வென்றீர் (சட். 144:3) |
| எண்ணுவீர் (இடை. 4:2) | |

**படர்க்கை வினைமுற்று**

படர்க்கை வினைமுற்று என்பது அயலான் ஒருவரின் தொழில் முடிந்ததை உணர்த்தும் வினைச்சொல்லாகும்.




என ஐந்து வகைப்படும்.

| • ஆண்பால் படர்க்கை வினைமுற்று | • பெண்பால் படர்க்கை வினைமுற்று |
|---|---|
| அபிமானன் (மது. 164:2) | ஆட்டுவாள் (சட். 12:3) |
| அலைந்திடுவான் (காக. 27:3) | இருந்தாள் (காக. 139:4) |
| சுடுவான் (சட். 96:4) | இட்டாள் (அழு. 21:3) |
| கட்டினான் (மது. 76:2) | ஈவாள் (காக. 143:2) |
| கருதுவான் (காக. 34:1) | ஊட்டுவாள் (சட். 12:4) |
| சேர்வான் (காக. 118:2) | கொண்டவள் (தட. 7:2) |

| | |
|---|---|
| சொன்னான் (காக. 113:3) | கொண்டாள் (சட். 38:1) |
| போயினான் (மது. 29:2) | செய்வாள் (காக. 63:4) |
| போவான் (காக. 72:2) | நிறத்தாள் (மது. 62:1) |
| போனான் (உரோ. 2:1) | பூண்டாள் (காக. 143:1) |
| மயங்குவான் (சட். 94:1) | போட்டாள் (சட். 13:3) |
| வடிவேலன் (சுப். 10:4) | |
| வீழ்வான் (காக. 17:4) | |

| • பலர்பால் படர்க்கை வினைமுற்று | • ஒன்றன்பால் படர்க்கை வினைமுற்று |
|---|---|
| அண்டினோர் (கடு. 11:2) | அறியாதது (மது. 173:1) |
| குளியார் (காரை. 11:2) | அமைத்து (கண. 45:4) |
| கூடினதோர் (சட். 38:4) | அழிந்தது (அக. 71:2) |
| செய்தோர் (சட். 2:3) | உயர்ந்தது (கடு. 19:1) |
| சேர்ந்தோர் (குத. 31:1) | உரைத்தது (மது. 138:1) |
| நினையார் (தட. 8:1) | எடுத்தது (கண. 5:1) |
| பார்த்தோர் (உரோ. 3:3) | எழுந்தது (பீரு. 2:2) |
| பிடித்தோர் (இடை. 36:1) | கடந்தது (அக. 76:1) |
| வைதோர் (கடு. 26:1) | கறந்தது (காக. 139:3) |
| | படர்ந்தது (அழு. 18:1) |
| | பழுத்தது (காளை. 1:2) |
| | வந்தது (அக. 2.2) |

• பலவின் பால் படர்க்கை வினைமுற்று

ஊர்வன (காக. 25:3)

**ஏவல் வினைமுற்று**

முன்னிலையில் நிற்கும் ஒருவரைப் பார்த்து இத்தொழிலைச் செய்துமுடி என்று கட்டளையிட்டுக் கூறுவது ஏவல் வினைமுற்று ஆகும்.




என இரண்டு வகைப்படும்.

- ஏவல் ஒருமை வினைமுற்று

  அறிவாய் (இடை. ஆ.க.3)

  காண் (இடை. 128:2)

  சொல் (சட்டை. 44:2)

  தெளிவாய் (அக. 53:2)

  பார் (மது. 165:1)

  வா (சுப். 12:3)

  விளம்புவாய் (இடை. 63:2)

- ஏவல் பன்மை வினைமுற்று

  உரைசெய்வீரேல் (காக.புசு.127:4)

  மொழிகேட்பீரே (காக.புசு.98:2)

**வியங்கோள் வினைமுற்று**

கயவொடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கு என்ப [7]

என நன்னூல் வியங்கோள் வினைமுற்றின் ஈற்று எழுத்துக்களை குறிக்கின்றது.




ஆகிய நான்கு பொருண்மையில் வரும்.

**காட்டுகள்**

சொல்க (சட். 34:4)

பெருக (காக. 73:4)

வாழ்க (காக. 151:2)

**இரட்டைப் பன்மை**

ஒரு சொல்லின் இறுதியில் உள்ள பன்மை விகுதியொடு மற்றொரு பன்மை விகுதி சேர்ந்து வருவது இரட்டைப் பன்மை ஆகும். இரட்டைப் பன்மை விகுதியாகக் கள் விகுதியே வந்துள்ளது. இது பெயர்ச்சொல்லோடும் வினைச்சொல்லொடும் பயின்று வந்துள்ளது.

சித்தர் பாடல்கள் இரட்டைப் பன்மையை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்.

**காட்டுகள்**

பெயர்ச்சொல் + இரட்டைப் பன்மை விகுதி

அங்கங்கள் (சட். 129:3)

அடியார்கள் (கண. 84:2)

உயிர்கள் (காக. 39:1)

கலைகள் (அக.46:1)

களங்கள் (கண. 32:2)

சங்கடங்கள் (காரை. 9:2)

தெரியல்கள் (தட. 3:2)

போதனர்கள் (சுப். 6:3)

வினைச்சொல் + இரட்டைப் பன்மை விகுதி

அஞ்சார்கள் (அக. 31:1)

அறிவார்கள் (பீரு. 20:1)

அலைவார்கள் (மது. 120:1)

கதறுவார்கள் (காக. 16:2)

சொன்னார்கள் (சூரி. 7:3)

**அடுக்குத் தொடர்**

ஒரு சொல் தொடர்ந்து இரண்டாகவோ, மூன்றாகவோ, நான்காகவோ அடுக்கி வருவது அடுக்குத் தொடர் ஆகும். இச்சொற்களைப் பிரித்தால் பொருள் தரும். அடுக்குத் தொடர்கள் பெயர் + பெயர்ச் சொற்களாகவும் வினை + வினைச் சொற்களாகவும் அமைந்துள்ளன. இவ்வகையில் அமைந்த சொற்களை ஓசைநயம் கருதி சித்தர்கள் மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்கள்.

**காட்டுகள்**

- பெயர் + பெயர்

தண்ணி தண்ணி (காக.112:4)

பல பல (தட.3:2)

- வினை + வினை

கண்டு கண்டு (காக.21:1)

குதி குதி (தட.1:3)

பிசு பிசு (தட.3:1) போகும் போகும் (காரை.17:1)

பேரன் பேரன் (சட்.123:1)

வித்தை வித்தை (காரை.18:1)

**இடைச்சொல்**

இடை எனப்படும் பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும் தமக்கு இயல்பு இலவே [8]

என்னும் தொல்காப்பிய வழி இடைச்சொல் என்பது பெயருக்கும் வினைக்கும் இடையில் நின்று பொருளை உணர்த்தும் சொல் இடைச்சொல்லாகும். இதற்கு என்று தனித்த இயல்பு கிடையாது. இடைச்சொற்களாக ஏகாரம், ஓகாரம் என என்று, உம், தில், மன், மற்று, மற்றையது, சொல், கொடு, தெய்ய, அந்தில், ஆங்கு, அம்ம, மா, எல், ஆர், கொன், குரை, ஏற்று, மன்ற, தஞ்சம், போலும், மியா, இகா, மோ, மதி, இகும், சின் ஆகிய முன்னிலை அசைச்சொற்களும், யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது ஆகிய மூவிடத்தும் வரும் அசைச்சொற்களும் பிறவும் வருகின்றன எனத் தொல்காப்பியரும், பவணந்தியாரும் வரையறுத்துள்ளனர். மேற்காட்டிய இடைச்சொற்களுள் சித்தர் பாடல்களில் இடம்பெற்றவை:

அதனால் (கண. 14:3) : காரணமாக அல்லது விளைவாக என்னும் பொருளில் இரண்டு வாக்கியங்களைத் தொடர்புபடுத்தும் இடைச்சொல்.

ஆம் – நீண்டதுவாம் (காக. 106:1) : ஒரு வாக்கியம் தெரிவிக்கும் செய்தி பிறர் வழியாகத் தெரிய வந்தது என்பதை உணர்த்துவதற்காக அந்த வாக்கியத்தின் பயனிலையுடன் சேர்க்கப்படும் இடைச்சொல்.

**உம்**

முற்றும்மை – எண்ணவும் (தட. 1:4)

அசைநிலை – அமிர்தமோடும் (சட். 42:2)

எண்ணும்மை – அல்லும் பகலும் (இடை. 7:2)

**ஏகாரம்**

பிரிநிலை – சேர்மின்களே (இடை. 23:4)

அசைநிலை – சிறந்திடவே (காக. 3:4)

தேற்றம் – பகவனையே (பீரு. 57:2)

இரக்கம் – என்னே (கண. 75:2)

இசைநிறை – இருக்கையிலே (சட். 99:1)

**ஓகாரம்**

அசைநிலை – அந்தமோ (காக. 125:3)

**தன்**

உன்றன் (அக. 39:1) : சுட்டுப் பெயருடன் இணைந்து ஆறாம் வேற்றுமைப் பொருளில் வரும் இடைச்சொல்.

**தான்**

அசைநிலை – ஓரணைதான் (காளை. 2:1)

**உரிச்சொல்**

பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் சார்ந்து நின்று பொருள் உணர்த்தி செய்யுளுக்கே உரிமை உடையதாய் வரும் சொல் உரிச்சொல்லாகும்.

உரிச்சொல் கிளவி விரிக்கும் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் குறிப்பினும் மெய் தடுமாறி
ஒருசொல் பலபொருட்டு உரிமை தோன்றினும்
பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபில் சென்று நிலை மருங்கின்
எச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல் [9]

என்னும் தொல்காப்பிய நூற்பா உரிச்சொல்லின் இலக்கணத்தை வரையறுத்துள்ளது.

**சான்றுகள்**

உறு – உற்றவர்கள் உறுகதியைப் பார்க்க வேண்டும் (காரை. 13:1)

கடி –

கழி –

தவ –

கூர் –

சால – (நூலணிவார் தம் நொய்மையே நிரப்ப நுழைந்த கல் உருவின் முன் படைத்த சாலவும் மகிழ்வார் (தட. 9:3–4)

தட –

நனி – நனி தோத்திரமாய்த் தியானம் பண்ண (சட். 167:3)

மா – நிராதார மாமலத்தை (மது. 82:2)

**இயற்சொல்**

தமிழ் நிலத்தில் வழங்கும் மொழியாகித் திரிசொற்களைப் போன்று இல்லாமல் கல்வியைக் கற்றவரும் கல்லாதவரும் புரிந்து கொள்ளும் முறையில் பொருளை உணர்த்துகின்ற சொல் இயற்சொல் ஆகும்.

செந்தமி ழாகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மை இயற்சொல் [10]

என நன்னூலார் இயற்சொல்லுக்கு இலக்கணம் வகுக்கிறார்.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அம்பிகை (மது. 2:1) | குகை (பீரு. 9:1) |
| அமுதம் (சட். 105:2) | குடில் (இடை. 118:2) |
| ஓலை (மது. 39:2) | பாதம் (இரா. 1:3) |
| கங்கை (அக. 53:2) | மலை (தட. 8:3) |
| கல் (கடு. 26:2) | முடி (இரா. 2:2) |
| கனி (அக. 69:2) | வலை (இடை. 78:1) |
| கிழங்கு (பீரு. 10:1) | |

**திரிசொல்**

ஒரு பொருள் குறித்த பல சொல்லாகியும்
பல பொருள் குறித்த வொருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும் [11]

என நன்னூலார் திரிசொல்லின் இலக்கணத்தைத் தருகின்றார். இது கல்வி கற்றவர் மட்டும் புரிந்து கொள்ளும் முறையில் வருகின்ற சொற்கள் ஆகும்.

**ஒரு சொல் பல பொருள்**

அண்டம் (பாம். 103:2)

அண்டரண்டம் (சட். 2:1)

அவனி (கண. 36:1)

செகமெல்லாம் (அழு. 22:3)

**உலகம்**

தராதலம் (அக. 2:2)

தாரணி (காக. 47:1)

பார் (பாம். 44:3)

புவனம் (அக. 16:1)

புவி (அக. 2:2)

வையம் (கடு. 26:1)

**சிவன்**

ஆத்துமலிங்கம் (கண. 44:1)

ஈசன் (கண. 10:3)

சர்வேசுவரன் (மது. 160:1)

சதாசிவன் (மது. 78:2)

பரமசிவன் (காக. 128:2)

**வானம்**

ஆகாசம் (கண. 33:3)

வானம் (காக. 89:2)

விண்ணின் (கண. 16:4)

விண்ணுலகம் (காக. 107:2)

**சொல்லாக்கம்**

சொல்லாக்கம் என்பது ஒரு சொல்லை ஆக்குவது அல்லது உருவாக்குவது ஆகும். சொல்லாக்கத்தில் ஒரு மொழியில் சொற்பெருக்கம் நடைபெறுகிறது. பெயர்ச்சொற்கள் அல்லது வினைச்சொற்கள் இறுதியில்

பெயர்கள், வினைகள், இடைநிலைகள், சாரியைகள், விகுதிகள் போன்றவை சேர்க்கப்பட்டுப் புதிய சொற்கள் ஆக்கப்படுகின்றன. இவ்வகையில் அமைந்த பல சொற்கள் சித்தர் பாடல்களில் உள்ளன. அவை:

பெயர் + பெயர்

பெயர் + வினை

பெயரடை + பெயர்

வினை + வினை

வினை + பெயர்

வினையிலிருந்து பெயர்

பெயரிலிருந்து பெயர்

ஆகிய அமைப்பு முறைகளில் வகைதொகை செய்யப்பட்டுள்ளன.

**பெயர் + பெயர்**

இரண்டு பெயர்கள் இணைந்து ஒரு சொல்லாக வருகின்றன.

**காட்டுகள்**

அகிலபிரபஞ்சம் (சட். 154:3) = அகிலம் + பிரபஞ்சம்

அண்டபிண்டம் (சூரி. 3:4) = அண்டம்+ பிண்டம்

அடிமுடி (இரா. 2:2) = அடி + முடி

சொர்க்கலிங்கம் (காரை. 25:3) = சொர்க்கம் + லிங்கம்

சொரூபஞானம் (காக. 92:2) = சொரூபம் + ஞானம்

மெய்ஞ்ஞானம் (சட். 68:1) = மெய் + ஞானம்

**பெயர் + வினை**

முதலில் பெயர்ச்சொல்லும் இரண்டாவது வினைச்சொல்லும் சேர்ந்து ஒரே சொல்லாக வந்துள்ளது.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அடிபணிந்து | – அடி + பணிந்து (கண. 28:4) |
| கண் கூசி | – கண் + கூசி (சட். 34:1) |
| சித்தம் முற | – சித்தம் + உற (காரை. 13:3) |
| பிறப்பறுக்க | – பிறப்பு + அறுக்க (அழு. 34:1) |
| ருசிகண்டு | – ருசி + கண்டு (சுப். 3:4) |
| வேதம்முழங்கிட | – வேதம் + முழங்கிட (காரை. 4:3) |
| சொல்கேட்டு | – சொல் + கேட்டு (சட். 62:1) |

**பெயரடை + பெயர்**

பெயருக்கு அடையாக வரும் சொற்களும் பெயர்ச்சொற்களும் சேர்ந்து ஒரு சொல் நீர்மைத்தாகும்.

**காட்டுகள்**

இளவயசு – இளம் + வயசு (காக. 50:2)

செம்பொன் (அழு. 5:2)

நல்லபுத்தி (சட். 199:1)

பெரும்பாதை (சட். 184:4)

மடவனமே (இடை. 90:2)

முதுகோடு (காக. 107:1)

வெங்கதிர் (இடை. 12:3)

**வினை + பெயர்**

ஒரு வினைச்சொல்லும் அதற்கு அடுத்த ஒரு பெயர்ச்சொல்லும் சேர்ந்து ஒரு சொல்லாகி ஒரு பொருளை உணர்த்துகின்றது.

**காட்டுகள்**

| | |
|---|---|
| அருட்கண் (சட். 10:3) | வடிவேல் (சுப். 32:2) |
| உறுகதி (காரை. 13:1) | வெய்யவினை (கரு. 26:2) |
| எரிமலை (காரை. 16:1) | |

**வினை + வினை**

இரண்டு வினைச்சொற்கள் சேர்ந்து ஒரு பொருளை உணர்த்தும் சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**காட்டுகள்**

| | |
|---|---|
| தீர்ந்துவிடும் (காரை. 25:1) | போக்கி விடும் (காரை. 25:1) |
| பறிபோய் (அழு. 24:4) | மாண்டுவிழ (அழு. 36:1) |
| பார்த்துவர (காளை. 1:2) | மூட்டுவிக்கு (சட். 21:4) |

**பெயரிலிருந்து பெயர்**

**காட்டுகள்**

| | |
|---|---|
| அளவிட்டோர் (சட். 60:3) | பஞ்சாயக்காரர் (அழு. 2:2) |
| உலகத்தோர் (சட். 25:3) | பாரான் (காக. 28:4) |
| நிலைக்காரர் (மது. 13:1) | மாரிசக்காரர் (மது. 23:2) |

**வினையிலிருந்து பெயர்**

**காட்டுகள்**

அறிந்தவர் (அக. 55:1) கல்லாதவர் (காரை. 13:4)

உபதேசித்தார் (சட். 187:1) மறந்தவன் (காக. 94:3)

கலந்திருந்தவன் (கண. 61:3)

**தொகுப்புரை**

1. ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட சித்தர் பாடல்களிலுள்ள சொற்களில், பெயர்ச்சொல், வினைச்சொல் அதன் வகைகள் எடுத்துக் காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.
2. இடுகுறிப்பெயர், காரணப்பெயர், பொதுப்பெயர், சிறப்புப் பெயர், சினைப்பயர், காலப்பெயர், பண்புப்பெயர், எண்ணுப்பெயர், திசைப்பெயர், சுட்டுப்பெயர், பதிலீட்டுப் பெயர், ஆகுபெயர், வேற்றுமை, தொகைப்பெயர், பெயரடை ஆகிய சொற்கள் ஆய்வில் ஆராயப்பட்டுள்ளன.
3. சித்தர் பாடல்களில் இடைச்சொல், உரிச்சொல், இயற்சொல் திரிசொல் ஆகியவை எடுத்துக்காட்டுகளுடன் கொடுக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. **நன்னூல்**, நூற்.258.
2. மு. சண்முகப்பிள்ளை (ப.ஆ.), **தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையர்**, ப.120.
3. ச. தண்டபாணி தேசிகர், **பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூல் விருத்தியுரை**, ப.227.
4. நன்னூல், நூற்.289.
5. மேற்படி, நூற்.319.
6. மேற்படி, நூற்.322.
7. மேற்படி, நூற்.337.
8. **தொல்காப்பியம் தெளிவுரை**, நூற்.734.
9. மேற்படி. நூற்.782.
10. நன்னூல், நூற்.271.
11. மேற்படி, நூற்.271.

## இயல் - மூன்று

# இலக்கிய நோக்கு

### முன்னுரை

இலக்கை உடையது இலக்கியம். (இலக்கு + இயம் = இலக்கியம்) சித்தர் பாடல்களில் பயின்று வந்துள்ள பாடல்களின் இயல்புகள், நடை, யாப்பு, எதுகை, மோனை, முரண், உவமை, உருவகம், அணிகள், சொல்லாட்சி, பழமொழி, புராணச் செய்திகள், அந்தாதி ஆகியவை இலக்கிய நோக்கு என்னும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

### யாப்பு

செய்யுள் இலக்கணம் கூறும் இலக்கணப் பகுதியினை யாப்பு என்பர். பொதுவாக யாப்பிலக்கணம், செய்யுளை வகைப்படுத்தும். செய்யுளில் உள்ள அக உறுப்புகளை விளக்கி அவற்றிடையே உள்ள தொடர்பினையும் விளக்கிக் கூறும். செய்யுளில் அமைந்துள்ள ஒலிநயங்களைப் பற்றியும், செய்யுளில் சொற்கள் முறைமாறி அமைந்திருந்தால் பொருள் நோக்கில் அவற்றை எப்படி அமைத்துப் பொருள், கொள்ள வேண்டும் என்பதையும் விளக்குவது யாப்பாகும். சித்தர் பாடல்களில் பல்வேறு வகையான யாப்புகள் வந்துள்ளன. அவை,

1. நேரிசை வெண்பா
2. பின்முகு நேரிசை வெண்பா
3. நேரிசை ஆசிரியப்பா
4. நிலைமண்டில ஆசிரியப்பா
5. தரவு கொச்சகக் கலிப்பா

6. அறுசீர் விருத்தம்
7. சந்தக் கட்டளைக் கலிப்பா
8. எண்சீர் விருத்தம்
9. கலிவிருத்தம்
10. கட்டளைக் கலித்துறை
11. அறுசீர் சந்த விருத்தம்
12. சந்தக் கலித்துறை
13. சிந்து கண்ணிகள்
14. வண்ணப்பா

எனப் பதினான்கு வகையில் யாப்புகள் பாடல்களாக அமைந்துள்ளன.

## கட்டளைக் கலித்துறை

கட்டளைக் கலித்துறைகள் தமிழிலக்கிய உலகில் ஈடும் எடுப்பும் இல்லாதனவாகத் திகழ்கின்றன. ஒழுகிய ஓசையும் விழுமிய நடையும் அமைந்த கட்டளைக் கலித்துறைகளுக்குச் சித்தர்களின் பாடல்கள் தலை சிறந்த சான்றாகும்; சித்தர்கள் அழகிய கட்டளைக் கலித்துறையில் பாடலை இயற்றியுள்ளனர்.

இவர்களின் பாடல்களில் எண்சீர் விருத்தம், அறுசீர் விருத்தம், கலிவிருத்தம், அறுசீர் சந்த விருத்தம், எண்சீர் சந்த விருத்தம், சந்தக் கலித்துறை ஆகிய யாப்புகளில் ஒவ்வொரு பாடல்களாக அமைந்துள்ளன.

### நடை

தெரிந்த மொழியால் செவ்வதின் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலன்என மொழிப் புலன் உணர்ந்த தோரே [1]

எல்லார்க்கும் விளங்கும் எளிய நடையில் பாடுவது ‘‘புலன்’’ என்னும் வனப்பு என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்குச் சித்தர் பாடல்கள் இலக்கியமாகக் கூறலாம்.

## வண்ணப்பா

இசைத் தமிழில் உள்ள தாளமுடைய பாடல்கள் நான்கு வகைப்படும். அவை சந்தம், வண்ணம், சிந்து, உருப்படி என்பன. இவை நான்கிற்கும், இயற்றமிழ்ப் பாக்களுக்கு யாப்பிலக்கணங்களில் கூறப்பட்ட யாப்பிலக்கணங்கள் பொருந்தாது. அவை அனைத்தும் இசைப் பாடல்கள், வண்ணப்பாடல்கள் என்பது பரிபாடலில் உள்ள முடுகியல் என்ற உறுப்பே வண்ணம் என்பதை அராகம் என்றும் தேவாரத்தில் பல அமைப்பில் திருவராகங்களைப் பாடியுள்ளனர்.[1] எனினும் இவை அனைத்தும் நான்கு அடி பாடல்களும் இவற்றில் தொங்கல் என்னும் உறுப்பு இல்லை. ஆனால் தமிழிலக்கிய வரலாற்றில் தொங்கல் என்னும் உறுப்பமைந்து முதன் முதலாக வண்ணம் பாடியவர் பட்டினத்தார். பட்டினத்தார் உடல் கூற்றின் வரலாற்றைக் கருவில் உருவானது முதல் காட்டில் எரியூட்டுவது வரையில் இனிய முறையில் பாடலை அமைத்து இடையிடையே வரும் தொங்கல் என்னும் உறுப்புகளைக் கொண்டு பாடியுள்ளார்.

## தொடைநயம்

அடி இரண்டு தொடுத்து வருவதால் தொடை என்னும் பெயரைப் பெற்றது.[2]

செய்யுளில் பல அடிகளிலும் பல சீர்களிலும் எழுத்துக்கள் ஒன்றிவரத் தொகுப்பது தொடை எனப்படும். இவை மோனைத்தொடை, எதுகைத்தொடை, முரண்தொடை, இயைபுத்தொடை, அளபெடைத்தொடை,

அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை என எட்டு வகைப்படும்.

**மோனைத்தொடை**

முதற்சீரில் வந்து, முதல் எழுத்தே அடுத்து வருஞ்சீர்களுள் ஒன்றனுள்ளேனும், பலவற்றினுள்ளேனும் வந்து தொடுப்பது மோனைத் தொடையாகும்.[3]

**எதுகைத்தொடை**

அடிதோறும் முதலெழுத்தெல்லாம் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து, இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகைத் தொடையாம்.[4]

**முரண்தொடை**

முரண் என்றால் மாறுபாடு, பாட்டின் அடிகளில் சொற்கள் முரணாக வருவது எதிர் எதிர் சொல்லாக அமைந்து வருவதாம்[5] சொல் முரண் என்றும் பொருள் என்றும், அது இருவகைப்படும்.

**இயைபுத் தொடை**

செய்யுளில் அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், சொல்லானும் ஒன்றிவரத் தொடுப்பது இயைபுத் தொடையாகும்.[6]

**அளபெடைத் தொடை**

செய்யுளில் அளபெடை அமைந்து வருவது அளபெடைத் தொடை[7] எனப்படும்.

### அந்தாதித் தொடை

பாடலுள் அடிதோறும் இறுதியில் வந்த ஓரெழுத்தோ, ஓரசையோ, ஒருசீரோ, அல்லது அடிமுழுவதுமோஅடுத்த அடிக்கு முதலாக நின்று, தொடுக்கப்படும் தொடைக்கு அந்தாதித்தொடை[8] என்று பெயர்.

### இரட்டைத்தொடை

பாடலுள் ஓரடி முழுவதும் முதலில் வந்த சொல்லே அடுத்து எல்லாவிடங்களிலும் வரத் தொடுப்பது இரட்டைத் தொடையாகும்.[9]

### செந்தொடை

எதுகைத் தொடை, மோனைத் தொடையின்றி வரும் பாட்டு செந்தொடை[10] எனப்படும்.

### அடுக்குத்தொடர்

ஒரு சொல்லைப் பலமுறை அடுக்கிக் கூறுதல் விரைவு, வெகுனி, உவகை, அச்சம், துன்பம், வற்புறுத்தல் முதலிய காரணங்களால் அமையும். இது கூறியது கூறல் என்னும் குற்றமாகாது. அப்படி அடுக்கும்போது இரண்டு முறை நான்கு முறை வரை ஒரு சொல் அடுக்கிக் கூறப்படும்.

ஒரு சொல்லே மேலும் மேலும் அடுக்கி வருதல் அடுக்குத்தொடர் எனப்படும். இஃது அசைநிலை, விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் முதலிய பொருள்களாலும், செய்யுளில் அசைநிலையாகவும், இசை நிறையாகவும் சொற்கள் அடுக்கி வரும்.

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்று நான்கு எல்லைமுறை அடுக்கும்[11]

## மெய்ப்பாடு

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப [12]

நகை – புன்முறுவல்

அழுகை – அவலம்

இனிவரல் – இழிவு

மருட்கை – வியப்பு

அச்சம் – அஞ்சுதல், பயம்

பெருமிதம் – மிடுக்கு

வெகுளி – சினம்

உவகை – மகிழ்ச்சி

விரைவு – வேகம்

## அணிநயம்

கற்போருக்கும் இன்பம் பயக்கும் முறையில் கருத்துக்களைச் செய்யுளில் அழகுபடுத்திக் கூறுவது அணி எனப்படும். இவ்வணிகள் பல வகைப்படும். சித்தர்களின் பாடலில் பயின்று வந்துள்ள அணிகளாவன :

## சொற்பொருள் பின்வருநிலையணி

ஒரு செய்யுளில் முன்னர் வந்த ஒரு சொல்லே பின்வரும் அடிகளில் வந்து முன்னர் உணர்த்திய பொருளையே உணர்த்துமாயின் அது சொற்பொருள் பின்வருநிலையணி[13] ஆகும்.

## உவமை அணி

பண்பு, தொழில், பயன் என்ற காரணங்களால் ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவது உவமையணியாகும்.[14]

அறியாத ஒரு பொருளை உணர்த்த அதைப் போன்ற மற்றொரு பொருளைச் சுட்டி, அது போன்றது இது என்ற விளக்கிக் காட்டிச் சொல்லும் பொருள் உவமையாகும்.

**வினை பயன் மெய் உரு என்ற நான்கே**
**வகை பெற வந்த உவமத் தோற்றம்**[15]

தொழில் (வினை) பயன்பாடு ''பயன்'' வடிவம் ''மெய்'' நிறம் ''உரு'' என நான்கன் காரணமாக ஒரு பொருளை அதன் தன்மை கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவதற்கு உவமையணி என்று பெயர்.

## எடுத்துக்காட்டு உவமையணி

ஒரு பொருளை அதன் தன்மை கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறும்போது இடையே உவம உருபு இல்லாமல் கருத்துக்களை மட்டும் எடுத்துக்கூறி ஒப்பிட்டுக் கூறுவது எடுத்துக்காட்டு உவமையணி[16] எனப்படும்.

## உருவக அணி

உவமைப் பொருளையும், உவமிக்கப்படும் பொருளையும் வேறுபாடு ஒழித்து, ஒன்றோ எனும் உள்ளுணர்வு தோன்ற ஒற்றுமை படக் கூறுவது உருவக அணி[17] ஆகும்.

## வேற்றுப் பொருள் வைப்பணி

ஒரு பொருளை உலகம் அறிந்த பொதுப் பொருளின் துணைக் கொண்டு விளக்குவதற்கு வேற்றுப் பொருள் வைப்பணி[18] என்று பெயர்.

## தன்மையணி

ஒரு பொருளின் தன்மையை மிகைப்படுத்தியும், உயர்வாகவும் கூறாமல் உள்ளதை உள்ளவாறு அழகுபடக் கூறுவது தன்மையணி என்று பெயர். இதை, தன்மை நவிற்சி அணி[19] என்றும் கூறுவர்.

## உயர்வு நவிற்சி அணி

ஒன்றை எடுத்துக் கூறும் பொழுது உள்ளதை உள்ளவாறு கூறாமல் கேட்போர் மகிழும் வண்ணம் அழகு படப் பன்மடங்கு உயர்வாய்ப் பெருக்கிக் கூறுவது உயர்வு நவிற்சி அணி[20] எனப்படும். சித்தர் பாடல்களில் பயின்று வந்துள்ள இலக்கிய நயங்கள் ஒவ்வொரு சித்தருக்கும் தனித்தனியே கொடுக்கப்பட்டுள்ளது. அவை பின்வருமாறு,

## அகப்பேய்ச் சித்தர் - பாடலியல்புகள்

அகப்பேய்ச் சித்தர் பாடல்களில் நடை, யாப்பமைதி, சுவைப்பகுதிகள் என்னும் மூன்றின் அடிப்படையில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதை ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## நடை

எளிய சொற்களால் எளிய நடையில் பாடினாலும் இவர்தம் பாடல்கள் பெரும்பாலும் இருண்மை கொண்டவையாகவே உள்ளன. விந்து நாதம், அகாரம், உகாரம் (14), மகாரம், சிகாரம் முதலிய சொற்களும், வானம் ஓடிவரில், வந்தும் பிறப்பாயே (40) போன்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன.

**யாப்பமைதி**

அகப்பேய்ச் சித்தர் பாடல்களில் சிந்து தாளத்தோடு கூடிய இசைப்பாக்கள் மிகுதியாக வந்துள்ளன. தமிழிலக்கிய உலகில் மிகப் பிற்காலத்தில் தோன்றிய பாடல் வகையே சிந்து இலக்கியம் ஆகும். நாட்டுப்புறத்து மக்களின் இயற்கையான இசையிலிருந்து எடுத்துக் கொண்ட பாவகை இதுவாகும். பொது மக்களின் மெட்டுக்களில் பாடினால் எதையும் அவர்கள் விரும்பிக் கேட்பார்கள் என்னும் எண்ணத்தில் சித்தர்கள் சிந்து இலக்கிய வகையை இலக்கியத்தில் புகுத்தினார்கள் என்று சொல்லக்கூடிய வகையில் சித்தர் பாடல்களில் அமைந்துள்ளன.

**சிந்துப் பாக்கள்**

சிந்துப் பாக்கள் இரண்டடி கொண்ட கண்ணிகளாக அமைந்துள்ளன. இரண்டு அடிகளும் ஓர் எதுகையில் தொடுக்கப்பட்டு, அடிகளின் இடையில் தனிச்சொல் இருக்கும். அடியின் பாதியில் மோனை அமையும்.

**எதுகை**

இவர் தம் பாடல்களில் எதுகை சிறப்பாகவே இருக்கின்றன.

நஞ்சுண்ட வேண்டாவே அகப்பேய்
நாயகன் தாள் பெறவே
நெஞ்சு மலையாத அகப்பேய்
நீயொன்றும் சொல்லாதே (அக.சி.பா.1)

பராபர மானதடி அகப்பேய்
பரவையாய் வந்ததடி
தராதலம் ஏழ்புவியும் அகப்பேய்
தானே படைத்ததடி[21] (அக.சி.பா.2)

நஞ்சு, நெஞ்சு, பராபர, தராதலம் என்பதில் இரண்டாம் எழுத்தான 'ஞ்', 'ரா' எதுகையாகப் பயின்று வந்துள்ளன. மேலும் பல பாடல்களில் எதுகை பயின்று வந்துள்ளன. அவை பின்வருமாறு

(நாத, பாத) (விந்து, ஐந்து) (நாலு, மூலம்) (வாக்காதி, ஒக்கம்) (சத்தாதி, மித்தை) (வசனாதி, தெசநாடி) (காரணம், மாரணம்) (ஆற, மாறாத), (பிருதிவி, உருவது) (தேயு, வாயு) (வானம், ஊனம்) (அகார, உகாரம்) (மகார, சிகார) (வன்னம், இன்னம்) (அத்தி, மித்தை) (தத்துவ, புத்தி) (இந்த, அந்த) (பாவ, சாவது) (எத்தனை, சித்தும்), (சமயம், அமைய) (ஆறாறும், வேறே), (உன்னை, உன்னை), (சரியை, கிரியை) (யோக – தேக) (ஐந்துதலை, இந்த) (இறைவ, அறைவ) (கண்டு, உண்டு) (உள்ளது, கள்ளம்) (அரிந்து, புரிந்த) (ஈசன், பாசம்) 32வது பாடல் (எத்தனை, முத்தனும்) (நாசம், பாசம்) (நாணம், காண) (சும்மா, சும்மா) (உன்றனை, என்றனை) (சைவம், சைவம்) (ஒன்று, நன்றி) (சும்மா, எம்மாயம்) (கலை, நிலை) (இந்த, இந்து) (என்ன, சொன்னது) (காடும் – வீடும்) (பரத்தில், பரத்துக்கு) (பஞ்ச, குஞ்சித) (பங்கம், கங்கை) (தானது, ஊனற) (பிறவி, துறவி) (ஆர், ஊர்) (தேனாறு, ஊனாறு) (வெள்ளை – உள்ளது) (அறிவுள் – அறிவு) (வாசியிலேறி – வாசியிலேறி) (தூராதி – பாராமற்) (உண்டாக்கி – கண்டார்கள்) (நாலுமறை, நாலுமறை) (மூலமில்லை – மூலமுண்டானால்) (இந்திரம், மந்திரம்) (சாதிபேதம் – ஓதியுணர்த்தல்)68, (சூழவானமடி – வேழம்)69, (நானு, தானு)70, (சொல்ல, இல்லை)73, (என்ன – சொன்ன)77, (தன்னை, மன்னை)78, (பிச்சை, இச்சை)79, (கோலம் – சாலம்)80, (ஒப்பனை – அப்புடன்)81, (மோட்சம், தீட்சை)82, (பாலன், காலம்)83, (கண்டது உண்டது)84, (அஞ்சையும், நெஞ்சையும்)85, (நாதாந்த – மீதான)86, (ஒன்றோடு, நின்ற)87, (தோன்றும், தோன்றாமல்)88, (பொய், மெய்)89, (வேதம், பாதம்)90 அகப்பேய்ச் சித்தர் தம் பாடல்களில் மேற்காட்டிய

சொற்கள் மட்டுமின்றி மிகுதியான எதுகை சொற்களைப் பயன்படுத்தி இருப்பதை அறியமுடிகிறது.

## பொழிப்பு மோனை

முதற்சீரும் மூன்றாம் சீரும் இணையாக வருவது பொழிப்பு மோனை எனப்படும். அந்த வகையில் அகப்பேய்ச் சித்தர் பாடல்கள் அனைத்தும் பொழிப்பு மோனையில் அமைந்துள்ளன. சான்றாக,

நஞ்சுண்ண வேண்டாவே அகப்பேய்
நாயகன் தாள் பெறவே
நெஞ்சு மலையாத அகப்பேய்
நீ ஒன்றுஞ் சொல்லாதே (அக.சி.பா.1)

சாத்திர சூத்திரமும் அகப்பேய்
சங்கற்பம் ஆனதெல்லாம்
பார்த்திடல் ஆகதே அகப்பேய்
பாழ்பலன் கண்டாயே (பா.33)

என்பதாகும்.

## மோனை

முதற்சீரில் வந்த முதல் எழுத்தே அடுத்து வருஞ்சீர்களும் ஒன்றினுள்ளேனும், பலவற்றினுள்ளேனும் வந்து தொடுப்பது மோனைத் தொடையாகும்.

இந்து அமிழ்தமடி அகப்பேய்
இரவி விடமோடி
இந்து வெள்ளையடி அகப்பேய்
இரவி சிவப்பாமே (பா.47)

மேலும்

பரத்தில் சென்றாலும் அகப்பேய்
  பாரியே மீளுமடி
பரத்துக்கு அடுத்தஇடம் அகப்பேய்
  பாழது கண்டாயே (பா.51)

இப்பாடல்களில் சீர் மோனை, அடி மோனை பயின்று வந்துள்ளன.

**விளித்தல்**

"அகப்பேய்" என்னும் சொல் 180 இடங்களில் விளிப்பதாக அமைந்துள்ளது.

**சந்தநயம்**

அகப்பேய்ச் சித்தர் பாடல்களில் சந்த நயம் அமையப் பாடப்பட்டுள்ளது. சான்றாக,

பிருதிவி பொன்னிறமே அகப்பேய்!
  பேதைமை அல்லலடி
உருவது நீரடியோ
  உள்ளது வெள்ளையடி (அக.சி.பா.11)

என்ற பாடல் காணக் கிடக்கின்றது.

**முரண்**

பாடலின் அடிகளில் சொற்கள் முரணாக வருவது முரண் எனப்படும், முரண் என்பது மாறுபாடு ஆகும். பாடலில் முரண் எதிர் எதிர் சொல்லாகவும் வரும். அடிகளிலும் அமையும். அவ்வகையில்

இந்த விதம், அந்த விதம் – 19

சாத்திரம் சூத்திரம் – 33

நாசம், பாசம் – 36

ஆணல – பெண்ணலவே – 48

ஆகிய சொற்கள் எதிர் எதிர் சொல்லாக அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

காடும் மலையுமடி அகப்பேய்
கடுந்தவம் ஆனால் என்
வீடும் வெளியாமோ அகப்பேய்
மெய்யாக வேண்டாமோ (அக.சி.பா.50)

என்னும் பாடலில் காடு, வீடு என்னும் சொற்கள் அடிகளில் பயின்று வந்துள்ளன.

**உவமை**

அகப்பேய்ச் சித்தர், இறைவன் உயிரோடு கலப்பது, ஒன்றோடொன்று கலந்து இரண்டாவதன்று. அது நீரில் கலந்த உப்பு போல இரண்டற்று இருப்பது என்று தன் மனத்தை நோக்கிக் கூறுகின்றார்.

அப்புடன் உப்பெனவே அகப்பேய்
ஆராய்ந் திருப்பாயே (அக.சி.பா.81)

என்று கூறி, தன்னை ஆட்கொண்ட இறைவனுடனான உறவை வெளிப்படுத்தியுள்ளார். மேலும்,

வேழம் உண்டகனி அகப்பேய்
மெய்யது கண்டாயே (அக.சி.பா.69)

விளாம்பழத்தில் வேழம் என்று ஒரு நோய் உண்டு. அது வந்தால் அப்பழத்தின் ஓடு மட்டுமே இருக்கும்; உள்ளே சதை எதுவும் இருக்காது. அது போல உலகு யாவும் வெறும் வெளியே என்பதை உணர்ந்து பற்றற்று வாழும் ஞானியர் தம் மனதை நோக்கி, உலக மெய்யை உண்மை எண்ணாது பற்றற்ற மனம் கொண்டோரே பரமஞானியர் ஆவர் என்னும் கருத்துடன் பாடியுள்ளார். இவை போன்ற உவமைகள் அவருடைய பாடல்களில் மிகுதியாகக் காணப்பட்டுள்ளன.

# அழுகணிச் சித்தர்

## சொல்லாட்சி

மகளிர் ஒப்பாரி என்பது எளிய பேச்சுமொழிச் சொற்கள் நிரம்பியது. அழுகணிச்சித்தர் பாடல்களில் பேச்சுமொழிச் சொற்கள் கொதிக்குதடி (7), கிட்டுதல்ல 8, மச்சினி 11, வாடுறேண்டி (2)1, தவிக்கிறேண்டி 15, சாகிறேண்டி 17, வேகிறேண்டி (22), இராசாக்கள் (24), ஏறியல்லோ 12, நொந்தல்லோ 25 போன்ற பேச்சு வடிவங்கள் காணப்படுகின்றன.

## பிற்காலச் சொல்

பிற்காலச் சொல்லாகிய கஞ்சா (27) என்னும் சொல் இவர் பாடலில் இடம் பெறுகின்றது.

## அணிநலம்

நாட்டுப்புற இலக்கிய வடிவங்களையுடைய சித்தர் பாடல்களில் அழுகணிச்சித்தர் பாடல்களே அழகும் ஒலிநயமும் சார்ந்தவை. செய்யுளுக்கே உரிய அழகிய சொல்லாட்சிகளையும், சுவைபடச் சொல்லும் முறையும், பாட்டுத்திறத்துடன் உருக்கமான உணர்வை வெளிப்படுத்து வதையும் இவர் பாடல்களில் காண முடிகிறது.

## உவமைகள்

முத்துப்போல் அன்னமிட்டு முப்பழமும் சர்க்கரையும்
தித்திக்கும் தேனமிழ்தம் என் கண்ணம்மா
தின்றுகளைப் பாரேனோ (அழு.சி.பா.4)

இப்பாடலில், சம்பாஅரிசியில் முத்துப் போல் சோறு சமைத்து, அச்சோற்றில் உழக்கு நெய் வார்த்து, முக்கனியும், சர்க்கரையும், தேனும்,

அமுதும் கலந்து தின்று களைப்பாறுவேன் யான் என்பது உவமையாக அமைந்த பாடல் ஆகும்.

மேலும்,

கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி என்வயிறு
நில்லென்று சொன்னால் நிலை நிறுத்தக் கூடுதில்லை (அழு.சி.பா.7)

பற்றற்ற நீரதிலே பாசி படர்ந்தது போல்
உற்றற்றுப் பார்ப்பதாலும் உன்மயம் தீரவில்லை (அழு.சி.பா.18)

மாணிக்கத்து உள்ளொளிபோல் - ஆத்தாடி
மருவி யிருந்தாண்டி (அழு.சி.பா.39)

இச்சித்தர் பாடலில் அமைந்த உவமைகளாகும்.

**உருவகம்**

அந்தரத்தை வில்லாக்கி ஐந்தெழுத்தை அம்பாக்கி
மந்திரத்தேர் ஏறியல்லோ மான்வேட்டை யாடுதல் (அழு.சி.பா.12)

இப்பாடலில் நான் புருவம் இரண்டையும் வில்லாக நினைத்து, நமசிவாய அல்லது சிவாயநம மந்திரத்தை அம்பாக்கித் தொப்புளில் தொடங்கி நெற்றி வரை நீளமாக நிறுத்தி, இம்மந்திரத் தேரில் ஏறி மானாகிய குண்டலினிப் பெண்ணை வேட்டையாட வேண்டும் என்றமைந்த பாடலும்,

உன்னை மறந்தல்லோ உளுத்த மரமானேன்
தன்னை மறந்தார்க்குத் தாய்தந்தை யில்லையடி (அழு.சி.பா.28)

என்பதும் உருவகப் பாடல்களாகும்.

**நடையியல்பு**

அழுகணிச்சித்தர் பாடல்கள் பெரும்பாலும் செப்பலோசையுடன் கூடிய செய்யுள் நடை இவருடையது. ஒப்பாரிக்குச் செப்பலோசை எவ்வளவு

பொருத்தமானது என்பதை இவர் பாடல்களில் தெரிந்து கொள்ள முடிகிறது. பின்வரும் பாடலில்,

சம்பா அரிசியடி சாதம் சமைத்திருக்க
உண்பாய் நீ என்றுசொல்லி உழக்குழக்கு நெய்வார்த்து
முத்துப்போல் அன்னமிட்டு (அழு.சி.பா.4)

பைம்பொன் சிலம்பணிந்து பாடகக்கால் மேல்தூக்கி
செம்பொற் கலையுடுத்திச் சேல்விழிக்கு மையெழுதி (அழு.சி.பா.5)

மூக்கால் அரும்பெடுத்து மூவிரண்டாய்த் தான்தூக்கி
நாக்கால் வளைதூக்கி நாற்சதுர வீடுகட்டி

என்னும் பாடல்கள் இவரின் செந்தமிழ் நடைக்குச் சான்றுகளாகக் காணப்படுகின்றன.

## யாப்பமைதி

சித்தர் பாடல்களில் 32 பாடல்கள் அமைந்துள்ளன. வேறு என்னும் தலைப்பில் 8 பாடல்கள் இரண்டடிப் பாடல்களாக உள்ளன. மொத்தம் 40 பாடல்கள். 32 பாடல்களில் என் கண்ணம்மா என்னும் தனிச்சொல் ஈற்றடிகளில் காணப்படுகின்றன. நான்காம் அடியின் எதுகைச் சொல்லுக்கேற்ற மோனையோடு கூடிய நீட்சியைப் பெற்றுள்ளன.

பெரும்பாலும் வெண்டளைகளும் சிறுபான்மை கலித்தளைகளும் இவர் பாடல்களின் சிறப்பியல்புகள். தலையாகு எதுகைகளும் நிரம்பக் காண முடிகிறது. கலித்தாழிசையில் எல்லா அடிகளும் ஒரே எதுகையில் வர வேண்டும். அவ்வமைப்புக்கு மாறாக இவர்தம் 21 ஆம் பாடல் சாய – மாய, பொட்டென்று – இட்ட என இரண்டு எதுகை பெற்றுள்ளது. 22 ஆம் பாடல்

பாதாள – வேதாளம், செந்தூர – தந்த

என்று இரண்டு எதுகைகள் பெற்றுள்ளது. இவ்வாறு அமைந்ததை இரண்டடி எதுகை எனலாம்.

## இசைப்பாடல்கள்

இசைப் பாடல்களில் இடையடி மடங்கி வருவது இயல்பு. சான்றாக,

ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊற்றைச் சடலம்விட்டே என் கண்ணம்மா
உன் பாதஞ் சேரேனோ

இவ்வாறே 7, 8, 9, 10, 11, 13, 15, 16, 17, 18, 19, 20, 23, 24, 26, 30, 31, 32 முதலிய பாடல்களிலும் இடைமடக்கைப் பெற்றனவாய் இசைப் பாடல்கள் அமைந்துள்ளன.

## குறிப்பு மொழிகள்

அழுகணிச்சித்தரின் எல்லாப் பாடல்களும் வெளிப்படையான சொற்களால் பொருள் உணர்த்துவனவாகவே உள்ளன. ஆனால், அப்பாடல்களின் உட்பொருள்களைக் கண்டுகொள்ள இயலவில்லை.

## எதுகை

(மூல, கோல, பால, மேல 1)

(முத்து, சத்து, அத்தை, குத்து 3)

(பைம் பொன், செம்பொன், அம்பொன், கம்பத்தின் 5)

என்னும் பாடல்களும் மேலும், 6–39 வரையுள்ள பாடல்களில் எதுகைகள் இடம் பெற்றுள்ளன.

## மோனை

(தித்திக்கும் – தின்று 4)

(கம்பத்தின் – கண் 5)

(வாழை – வாழ்வெனக்கு 9, பையூரும், பாழாய் 10)

(காமன் – கண்விழிக்க 11, 14, 15, 16, 18, 21, 22–27, 29–36, 39, 40)

முதலிய பாடல்களில் மோனை அமைந்துள்ளன.

### அடி முரண்

அழுகணிச்சித்தர் பாடல்களில் அடி முரண் முழுவதுமாக அமைந்துள்ளன.

### சுவைப் பகுதிகள்

பைம்பொன் சிலம்பணிந்து பாடகக்கால் மேல்தூக்கிச்
செம்பொன் கலையுடுத்துச் சேல்விழிக்கு மையெழுதி (அழு.சி.பா.5)

பையூரிலேயிருந்து பாழூரி லேபிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன் (அழு.சி.பா.10)

புல்லரிடத்தில் போய்ப் பொருள் தனக்குக் கையேந்தி
பல்லை மிகக்காட்டிப் பரக்க விழிக்காமல் (அழு.சி.பா.31)

முதலிய பாடல்கள் சுவைப்பகுதிக்குச் சான்றாக அமைந்துள்ளன.

## இடைக்காட்டுச் சித்தர் பாடல்கள்

இடைக்காட்டுச் சித்தர் பாடல்களில் கொச்சைச் சொற்கள், விருத்தம், சிந்து, எதுகை, மோனை, முரண் சொற்கள், அணிநலம், சந்தநயம் ஆகியவை பயின்று வந்துள்ளன. அவை பின்வருமாறு:

### நடை

செஞ்சொற்களைக் கொண்ட செந்தமிழ் நடையில் பாடல்கள் அமைந்துள்ளன. பெரும்பாலும் வெளிப்படையான சொற்களைப் பயன்படுத்தியே பாடல்கள் அமைத்துள்ளார். கொச்சைச் சொற்கள் இவர் பாடல்களில் இல்லை.

சான்று :

மண்ணாதி பூதங்கள் ஐந்தையும் கண்டேனே
    மாயா விகாரங்கள் யாவையும் விண்டேனே
விண்ணாளி மொழியை மெய்யினுள் கொண்டேனே
    மேதினி வாழ்வினை மேலாக வேண்டேனே. (25)

**யாப்பமைதி**

இடைக்காட்டுச் சித்தர் பாடல்களில் யாப்பு வகைகள் பலவாக பயின்று வந்துள்ளன. அவை,

| | |
|---|---|
| கலிவிருத்தம் | – காப்பு பாடல் |
| கும்மி | – 1–10 |
| வெண்டளைத் தரவு கொச்சக் கலிப்பா | – 11–12 |
| கட்டளைக் கலித்துறை | – 18 |
| நேரிசை வெண்பா | – 19 |

சிந்துகண்ணிகள் 13–17 வகை – 1, சிந்துக் கண்ணிகள் 20–26 வகை –2, சிந்துக் கண்ணிகள் 27 வகை–3, சிந்துக் கண்ணிகள் 28–41 வகை–5, சிந்துக் கண்ணிகள் 42–71 (85–90) வகை–4, சிந்துக் கண்ணிகள் 72–77 வகை–6, சிந்துக் கண்ணிகள் 78–81 வகை–7 சிந்துக் கண்ணிகள் (82–84) வகை–8, சிந்துக் கண்ணிகள் (91–101), வகை–9, சிந்துக் கண்ணிகள் (102–107) வகை–10, சிந்துக் கண்ணிகள் (108–117) வகை–11, சிந்துக் கண்ணிகள் (118–125) வகை–12

இவற்றில் சிந்துப் பாடல்களே மிகுதியாக இருக்கிறது, மக்களுக்குப் பிடிக்கும் நாட்டுப்புற மெட்டுகளில் ‘‘தாந்திமித்திமி’’ என்று பாடி ஆடுவதில் விருப்பமுள்ளவர் என்பது அவருடைய சிந்துப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. சான்றாக தாண்டவராயக் கோனார் கூற்று சிந்துக் கண்ணி என்னும் தலைப்பில் அமைந்த

தாந்தி மித்திமி தந்தக் கோனாரே
தீந்தி மித்திமி திந்தக் கோனாரே
ஆனந்தக் கோனாரே - அருள்
ஆனந்தக் கோனாரே.

என்னும் பாடலில் நாட்டுப்புற மெட்டு அமைந்துள்ளது. இவற்றில் வரும் பசுக்கண்ணிகள் **(28–41)** என்னும் வகை சிந்துக்களில் மிகச் சிறிய வடிவம் கொண்டது. இதனை **108** முதல் **117** வரை உள்ள பாடல்கள் ஓரடிக் கண்ணிகளாக இருப்பதை அறியமுடிகிறது.

## எதுகை, மோனை

இடைக்காட்டுச்சித்தர் பாடல்களில் எதுகை மோனைத் தொடைகளும் தாள அமைப்பும் சிறப்பாக அமைந்துள்ளன. எதுகைக்குச் சில காட்டுகள்:

எல்லா உலகமும் எல்லா உயிர்களும்
எல்லாப் பொருள்களும் எண்ணரிய
வல்லாளன் ஆதி பரமசிவனது
சொல்லால் ஆகுமோ கோனாரே (இடை.சி.பா.1)

இப்பாடலில் எல்லா எல்லாம் வல்லாளன், சொல்லால் ஆகிய சொற்களில் இரண்டாம் எழுத்து ஒன்றி வருகின்றன. இவைபோன்றே இடைக்காட்டுச் சித்தர் பாடல்களில் எதுகை சொற்கள் வந்துள்ளன.

## மோனை

முதல் எழுத்து ஒன்றி வருவது மோனை. இம்மோனைக்குச் சில சான்றுகள்.

எல்லாம், எல்லா (1)

முத்திக்கு, முத்திக்கு (3)

சொல்லரும், சொல்லினால் (7)

மும்மலம், முப்பாழ் (9)

பஞ்ச, பற்றற்று (10)

அந்த, அஞ்ஞானம் (13)

பற்றி, பாலையும், சிற்றின்பம், சிற்பரன் (15)

அண்ணாக்கை, அந்த (16)

மண்ணாதி, மாயா (17)

சினமென்னும், சித்தியென்ற (20)

ஓசையுள், ஓங்காரம் (21), 22, 23, 24, (104), 105, 106, 109, 111, 112, 115, 116, 120, 121, 122, 123 என்னும் பாடல்களிலும் மோனை அமைந்துள்ளன.

## முரண்

நெஞ்சத்து இருத்தி இரவு பகலுமே
நேசித்துக் கொள்ளுவீர் கோனாரே (இடை.சி.பா.10)

என்பதில் இரவு, பகல் என்னும் முரண் அமைந்துள்ளது.

வீடும் மணிகளும் வெண்பொன்னும் செம்பொன்னும் (இடை.சி.பா.25)

வெண்பொன், செம்பொன் முரணாக அமைந்துள்ளது.

பொய்ப்பொருளை விட்டுப் புலமறிய ஒண்ணாத
மெய்ப்பொருளை நாளும் விருப்புற்றுப் போற்றீரே (48)

(பொய்பொருள், மெய்ப்பொருள்)

பொய்யான கல்விகற்று பொருள் மயக்கம் கொள்ளாமல்
மெய்ஞ்ஞானக் கல்வியினை விரும்புவாய் கல்மனமே! (58)

(பொய், மெய்)

மெய்யில் ஒரு மெய்யாகி மேலாகிக் காலாகிப்
பொய்யில் ஒரு பொய்யாகும் புலமறி நீ புல்லறிவே (64)

முதலிய பாடல்களில் முரண்தொடை அமைந்துள்ளன.

## அணிநலம்

இடைக்காட்டுச் சித்தர் பாடல்களில் உவமைகள் மிகுதியாக உள்ளன. இதில் சூரியனைக் கண்ட பனிபோல் என்பதை,

சூரியன் வாள்பட்ட துய்ய பனிகெடும்
தோற்றம் போல் வெவ்வினை தூள்படவே (இடை.சி.பா.8)

என்னும் பாடலில் சூரியனின் கதிராகிய ஒளி பனியில் பட்டதும் அழியும். அது போலவே கொடிய வினைகள் அனைத்தும் பெண் பாகம் கொண்ட சிவனை நெஞ்சில் போற்றினால் தூளாகி மறைந்து விடும்; நல்ல கதி கிடைக்கும் என்கிறார். மேலும், மனதைக் குரங்கென்றும் பேய் என்றும் கூறுவது மரபாயிருக்க இவர் மனதை மாடு என்கிறார். இதனை,

மனமென்னும் மாடு அடங்கில் தாண்டவக் கோனே (இடை.சி.பா.13)
ஆசையெனும் பசுமாளின் தாண்டவக்கோனே! (இடை.சி.பா.14)

என்னும் பாடல்களின் வழி அறியமுடிகின்றது.

மேலும் பாலின் சுவையிலும், பழத்தின் இனிமையிலும், பொருளின் இனிமையிலும் முதலானவை நுண்ணியனவாய் இருப்பது போல் இறைவனும் நுண்பொருளில் இருப்பவர் என உணர்ந்து போற்றுக என்பதை,

பாலில் சுவைபோலும் பழத்தின் மதுப்போலும்
நூலின் பொருள்போலும் நுண்பொருளைப் போற்றீரே (இடை.சி.பா.45)

என்னும் பாடலில் விளக்குகின்றார்.

எள்ளில் தைலம் போல் எங்கும் நிறைபொருளை (இடை.சி.பா.51)

இப்பாடலிலும் நுண்பொருளாக இறைவன் இருக்கின்றார் என்கிறார். மேலும் பொருளில் ஆசை வைத்தலைப் பேய்க்குரங்கு இச்சை வைத்தல் போல் என்றும், மக்கள் அலைவதை நாய் நரிகள் போல் அலைவது என்றும் கூறுகின்றார். இதனை,

பேய்க்குரங்கு போலப் பேருலகில் இச்சைவைத்து
நாய் நரிகள் போல் அலைந்தால் நன்மையுண்டோ கல்மனமே

(இடை.சி.பா.56)

என்பதில் மனிதனின் ஆசையைக் குறிப்பிடுகின்றார்.

இரும்பை இழுக்கும் காந்தத்து இயற்கைபோல் (இடை.சி.பா.57)

என்னும் பாடலில், இரும்பைப் போல் மனிதன் உள்ளான் என்றும் ஆசை வந்தவுடன் காந்தம் இரும்பை இழுப்பது போல் மனிதன் பொருள்களை விரும்புகின்றான் எனக் கூறுகின்றார்.

கைவிளக்குக் கொண்டு கடலில் வீழ்வார்போல
மெய்விளக்குன் னுள்ளிருக்க வீழ்குவதேன் புல்லறிவே

(இடை.சி.பா.69)

என்னும் பாடலில், கையில் விளக்கை வைத்துக் கொண்டே கடலில் விழுபவர் போல மெய்யான விளக்கு உனக்குள்ளே இருக்கும் போது நீ ஏன் வீழ்ச்சி அடைகிறாய் புல்லறிவே என்கின்றார். மேலும்,

தீதுறும்பவம் தீப்படும் பஞ்சுபோல் (கா.பா.)

காற்றின் மரமுறியும் காட்சியைப் போல் நல்லறிவு
தூற்றிவிடில் அஞ்ஞானம் தூரப்போம் மடவனமே (85)

அக்கினியாற் பஞ்சுபொதி அழிந்திட்டவாறே போல்
பக்குவநல் அறிவாலே பாவம்போம் மடவனமே (86)

குளவிபுழு வைக்கொணர்ந்த கூட்டில் உருப்படுத்தல்போல்
வளமுடைய வன்மனத்தை வசப்படுத்து மடவனமே (87)

அப்புடனே உப்புச்சேர்ந்தளவு சரியானது போல்
ஒப்புறவே பிரமமுடன் ஒன்றி நில்லு மடவனமே (88)

என்னும் அடிகளும்,

மேலும்,

காய்ந்த இரும்புநிறங் காட்டுதல் போல் ஆத்துமத்தை
வாய்ந்திலங்கச் செய்துவளம் பெறுநீ மடவனமே (இடை.சி.பா.89)

நெருப்பில் காய்ந்த இரும்பு எவ்வாறு சிவப்பு நிறம் காட்டுகின்றதோ அதுபோல் ஆத்மாவும் பிரம்மத்தில் சேர்ந்து அதுவாகவே ஆவதை நீயும் பெறுவாய் என்று அறிவுறுத்துகின்றார். இவ்வாறு பாடல்களில் உவமைகளைப் பயன்படுத்திப் பொருள்களைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்.

**சுவைப்பகுதிகள்**

பொய்யான கல்விகற்றுப் பொருள்மயக்கம் கொள்ளாமல்
மெய்யான ஞானக்கல்வி விரும்புவாய் கல்மனமே (55)

பலமதம் பொய்ம்மை யேஎன் றோதுகுயிலே (78)

இல்லறமே அல்லலாம் என்று ஆடுமயிலே - பத்தி
இல்லவர்க்கு முத்திசித்தி இல்லை மயிலே (82)

ஆகிய பகுதிகள் சுவைப் பகுதிகளுக்குச் சான்றாகும்.

## கடுவெளிச்சித்தர்

கடுவெளிச் சித்தர் பாடல்களில் யாப்பமைதி, எளிய சொற்கள், எதுகை, மோனை, முரண் என்னும் வகையில் அமைந்துள்ளன.

**நடை**

கடுவெளிச்சித்தர் பாடலின் நடை எளிய நடையாக அமைந்துள்ளது. ஆண்டி ஒருவன் குயவனை வேண்டித் தோண்டி பெற்றுக் கூத்தாடிக்

கூத்தாடி அதை உடைத்தான் என்னும் குறிப்புக் கூற்றாக, உயிரானது பத்து மாதமாக இறைவனை வேண்டிப் பெறற்கரிய இந்த உடலைப் பெற்று வந்து ஒழுக்கக் கேடான நடத்தையால் அதை அழித்துக் கொள்கின்றது என்னும் கருத்தைப் பின்வரும் பாடலில்,

நந்த வனத்திலோர் ஆண்டி - அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தான் ஒரு தோண்டி - மெத்தக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி (கடு.சி.பா.4)

எளிய நடையில் பாடல் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

## யாப்பமைதி

எடுப்பு முடிப்புகளுடன் கூடிய இசைப்பாடல் உருவத்தை முதன் முதலாக உருவாக்கியவர் கடுவெளிச்சித்தரே என்னும் கருத்து குறிப்பிடத்தக்கது. இவருக்கு முன் இத்தகைய இசைப்பாடல் வடிவம் இருந்ததாகத் தெரியவில்லை எனக் குறிப்பிடுவர்.

'பாபம் செய்யாதிரு மனமே' என்பது ஒரு வகையான சிந்துப் பாடலாகும். இரண்டடிகள் ஒரெதுகை பெற்ற கண்ணிகளாக வரும். கடுவெளிச் சித்தரின் பாடல்களில் இந்த இயைபு பாடல்தோறும் மிகச் செம்மையாக அமைந்துள்ளது. எனவே பாடல் சிறப்புக்கு இதுவும் காரணமாக உள்ளது. இதனை,

வைதோரைக் கூடவை யாதே - இந்த
வையம் முழுதும் பொய்த்தாலும் பொய்யாதே
வெய்ய வினைகள் செய்யாதே - கல்லை
வீணிற் பறவைகள் மீதில் எய்யாதே (கடு.சி.பா.25)

என்னும் பாடலில் வையாதே, பொய்யாதே, செய்யாதே, எய்யாதே என்ற ஒலியமைப்பை தரும் அடி இயைபுகளைக் காண முடிகின்றது. மேலும் இயைபு

அமைந்த பாடல்கள் 1 முதல் 34 வரையுள்ள பாடல்களிலும் இயைபு காணப்படுகின்றன.

## இசை (மும்மை நடை)

எட்டு எண்ணிக்கையுடைய தாளத்தில் தகிட தகிட என்று மும்மை நடையுடன் பாடுமாறு பாடல் அமைந்துள்ளது.

வைதோரைக் கூடவை யாதே[1] - இந்த
வையமு[2] முதும்பொய்த் தாலும்பொய்[3] யாதே (கடு.சி.பா.25)

மும்மை நடைக்குத் தக்கபடி அதன் ஒவ்வொரு சீரிலும் மும்மூன்று உயிர்கள் அமைந்திருப்பதைக் காணலாம்.

## எதுகை

சாபம் கொடுத்திடலாமே? விதி
தன்னை நம்மா லேதடுத்திடலாமோ?
கோபம் தொ டுத்திட லாமோ? - இச்சை
கொள்ளக்க ருத்தைக் கொடுத்திடலாமோ (கடு.சி.பா.1)

சாபம், கோபம் என்னும் சொற்களில் எதுகை காணப்படுகின்றது. மேலும் 11 முதல் 34 வரையுள்ள பாடல்களிலும் எதுகை அமைந்துள்ளன.

## மோனை

முதல் எழுத்து ஒன்றி வரும் மோனை கடுவெளிச் சித்தர் பாடல்களில் பல பாடல்களில் மோனை சொற்கள் அமைந்துள்ளன. சான்றாக

பார்மீதில், பற்றாதி 3, நந்த, நாலாறு 4, நல்ல, நாளும் 6 வல்லவர், வள்ளலை 6, 7 முதல் 34 வரையுள்ள பாடல்களில் மோனை அமைந்துள்ளன.

**முரண்**

மெய்க்குரு சொற்கட வாதே - நன்மை
மென்மேலும் செய்கைமி கவடக் காதே
பொய்க்கலை யால் நடவாதே - நல்ல
புத்தியைப் பொய்வழி தனில் நடத்தாதே (கடு.சி.பா.11)

பொய்யாக பாராட்டும் கோலம் - எல்லாம்
போகவே வாய்த்திடும் யார்க்கும் போங்காலம்
மெய்யாக வேசுத்த சாலம் - பாரில்
மேவப்பு ரிந்திடில் என்னனு கூலம் (கடு.சி.பா.16)

மேற்குறித்த பாடல்களில் பொய், மெய் ஆகியவை முரண் சொற்களாக உள்ளன. மேலும் அவர் பாடல்களில்,

காயம் – நேயம் **3**

காடு, வீடு **13**

கோட்டை, காட்டை **14**

மோகம், யோகம் **31**

முதலான சொற்கள் முரணாக வந்துள்ளன.

**சுவை மிக்கப் பகுதிகள்**

காசிக்கோ டில்வினை போமோ? அந்தக்
கங்கையா டில்கதி தானும் உண்டாமோ (கடு.சி.பா.15)

வைதோரைக் கூடவை யாதே - இந்த
வையம் முழுதும் பொய்த் தாலும்பொய் யாதே (கடு.சி.பா.25)
போற்றும்ச டங்கை நண்ணாதே - உன்னைப்
புகழ்ந்து பலரிற் புகல எண்ணாதே (கடு.சி.பா.28)

என்பவற்றைச் சுவை மிக்கப் பகுதிகளுக்குச் சான்றாகக் காட்டலாம். இவற்றில் காசிக்குச் சென்று கங்கையில் மூழ்கினாலும் நாம் செய்த பாவம்

நம்மை விட்டு போகாது என்றும், நம்மை பழித்தாரைக் கூடி பழித்துப் பேசாமல் பொய்யின்றி மெய்யாக வாழ வேண்டும்என்றும், மனித வாழ்வின் உண்மைகளை அழகாகத் தம்முடைய பாடல்களில் எடுத்துரைத்துள்ளார்.

## குதம்பைச் சித்தர்

குதம்பைச் சித்தர் பாடல்களில் யாப்பமைதி, குறிப்பு மொழி, எளிய நடைச் சொற்கள் யாப்பு ஆகியவை இடம் பெற்றுள்ளன. அவை

**நடை**

ஒரு பெண்ணை அழைத்துப் பல வினாக்களை ஒரு முறைக்கு இருமுறையாக வினாவுவதாக மட்டுமே இவர் பாடல்கள் அமைந்துள்ளன. எந்த வினாவுக்கும் விடை கூறப்படவில்லை. மேலும் இவருடைய பாடல்களில் உள்ள சொற்கள் எல்லோரும் அறிந்தனவாக இருந்தாலும் அவற்றில் குறிப்பாகச் சுட்டப்படும் பொருள்கள் அவ்வளவு எளிதில் விளங்கிக் கொள்ள முடியாதனவாக உள்ளது. இதனை,

நித்திரை **6**

நினைவு **6**

வேகாமல் **12**

சாகாமல் **13**

அந்தரம் **14**

மாங்காய்ப்பால் **28**

தேங்காய்ப்பால் **28**

தாவரம் **30**

என்னும் சான்றுகள் வழி அறியலாகிறது.

## யாப்பமைதி

குதம்பை என்னும் தனிச்சொல் உடைய 32 கண்ணிகளை உடைய பாடல்கள் "குதம்பைக் கண்ணிகள்" என்று குறிப்பிடப்படுகின்றது. அனைத்துப் பாடல்களும் இரண்டாமடியின் இடையில் தனிச்சொல் பெற்றுள்ளன. தனிச்சொல்லுக்கு முன்னுள்ள பகுதியே, பின்னும் மடங்கி வருகிறது. இது மற்றச் சித்தர் பாடல்களில் காணப்படாத புதிய அமைப்பாகும். இவர் பாடல்கள் சிந்து வகையைச் சேர்ந்தவை. மும்மை நடைப் பாடலாதலின் இதன் ஒவ்வொரு சீரிலும் மும்மூன்று உயிர்கள் ஒலிப்பதைக் காண முடிகிறது. இக்கண்ணிகள் அனைத்தும் செப்பலோசை கொண்டுள்ளன.

## குறிப்பு மொழிச்சொற்கள்

குதம்பைச் சித்தர் பாடல்களில் குறிப்பாகச் சொல்லப்படும் கருத்துக்கள் மிகுதியாக உள்ளன. மெய்யான தெய்வத்தைக் கண்டு உடம்பில் அது விளங்கும் படி செய்த மெய்ஞ்ஞானிக்குக் காயகல்ப மருந்து உடலை வாழவைக்கத் தேவை இல்லை என்பதை,

**மெய்ப்பொருள் கண்டு விளங்கும் மெய்ஞ்ஞானிக்குக்**
**கற்பங்கள் ஏதுக்கடி - குதம்பாய்**
**கற்பங்கள் ஏதுக்கடி** (குத.சி.பா.2)

என்னும் பாடலில் கற்பங்கள் என்னும் குறிப்பு மொழி அமைந்துள்ளது. மேலும் பல பாடல்களில்

முத்திரை ஏதுக்கடி **(6)** உத்தியம் ஏதுக்கடி **(8)** சத்தங்கள் ஏதுக்கடி **(10)** பத்திரம் ஏதுக்கடி **(16)** நட்டணை ஏதுக்கடி **(18)** பத்தியம் ஏதுக்கடி **(19)** முட்டாங்கம் ஏதுக்கடி **(21)** பூத்தானம் ஏதுக்கடி **(23)** கண்டாரை நோக்கி **(25)** உண்காயம் ஏதுக்கடி **(27)** மாங்காய்ப்பால் உண்டு **(28)**

தேங்காய்ப்பால் **(28)** முட்டாக்கு **(29)** போன்ற சொற்கள் குறிப்புமொழியை உணர்த்தும் வகையால் அமைந்துள்ளன.

**உவமை**

செத்தாரை போலத் திரியும் மெய்ஞ்ஞானிக்குக்
கைத்தாளம் ஏதுக்கடி - குதம்பாய்
கைத்தாளம் ஏதுக்கடி (குத.சி.பா.24)

என்னும் பாடலில் உவமை பயின்று வந்துள்ளது.

**புராணச்சொல்**

ஆதாரமான அடிமுடி கண்டோர்க்கு
வாதாட்டம் ஏதுக்கடி - குதம்பாய்
வாதாட்டம் ஏதுக்கடி

என்னும் பாடலில் சிவனின் அடிமுடியை திருமால், பிரம்மன் இருவரும் அடிமுடியை தேடுதல் என்னும் புராணச் செய்தி அமைந்துள்ளது.

## பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள்

**நடை**

இவருடைய பாடல்களிலுள்ள சொற்கள் பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் எளிய நடையில் சொற்கள், யாப்பு, எதுகை, மோனை, முரண், அணி, உருவகங்கள், பழமொழி, புராணச் செய்திகள் ஆகியவற்றைக் கொண்டமைந்துள்ளன. அவை, இசைப் பாட்டுக்கேற்ற வண்ணம், புரியாத மக்களும் கேட்டவுடன் புரிந்துகொண்டு சுவைக்கும்படி மிக எளிய நடையில் இவர் பாடல்கள் அமைந்துள்ளன. அதன் விளைவாகவே 'நாதர் முடி மேலிருக்கும்' என்னும் பாடல் மேடைகள் தோறும் ஆடி, பாடி பாமர மக்களும் இன்புறுமாறு அமைந்திருக்கின்றன.

**யாப்பு**

பாம்பாட்டிச் சித்தர் 129 பாடல்களைப் பாடியுள்ளார். முதல் 111 பாடல்கள் இரண்டடி கண்ணிகளாக உள்ளன. எஞ்சிய 112 முதல் 129 வரையில் உள்ள 18 பாடல்கள் நாலடி கண்ணிகளாக உள்ளன. நாலடி கண்ணிகள் நடையிலும் சுவையிலும் வேறுபட்டு காணப்படுகிறது. எல்லாக் கண்ணிகளும் ஆடு பாம்பே என்று தான் முடிகின்றன. அனைத்தும் சிந்து என்னும் இசைப்பாடல் வடிவமாகும்; முதல் கண்ணியில் மட்டும் தனிச்சொல் வருகிறது. மற்ற பாடல்களில் இல்லை.

**இயைபு (அடி இயைபு)**

நாதர்முடி மேல் இருக்கும் நாகப் பாம்பே!
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே!
பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே!
பாடிப்பாடி நின்று விளையாடு பாம்பே! (பாம்பு.சி.பா.20)

என்று இயைபுத்தொடையும்

**எதுகை**

நீடுபதம் நமக்கென் றுஞ்சொந்தம் என்றே
நித்தியம் என்றே பெரிய முத்தி யென்றே
பாடுபடும் போதும் ஆதிபாதம் நினைந்தே
பன்னிப்பன்னிப் பரவிநின்று ஆடுபாம்பே (பாம்பு.சி.பா.2)

நீடுபதம், பாடுபடும், இரண்டாம் எழுத்து ஒன்றி வரும் எதுகை தொடையும் வருகின்றது. மற்றும்,

பொன்னில், மன்னும் 3

எள்ளில், உள்ளபடி 4

அண்ட, எண். 5

சோதி, நீதி 6

அருவாயும், திருவாயும் 7

சுட்டி, எட்டி, 8

எவ்வுயிரும், அவ்வுயிரும் இவருடைய 129 பாடல்களில் பெரும்பாலான பாடல்களில் எதுகை வந்துள்ளன. 49, 55, 60, 103 ஆகிய பாடல்களில் மட்டும் எதுகை இடம் பெறவில்லை.

## மோனை

பாம்பாட்டிச் சித்தர் பாடல்களில் மோனை சொற்கள் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன. அவை சீர், அடி, இயைபு ஆகியவை வந்துள்ளன. அண்டபிண்டம், அகலாமலே 5, அருவாயும், அந்தமாயும் 7, எட்டி, எடுத்து 8, உள்ளம், உண்மை, கள்ள மனம், களித்து 13 ஆகிய பாடல்களில் அடிகள் தோறும் மோனை வந்துள்ளன. அங்கையில், அறிவிக்கும் அட்டதிக்கும், அடக்கிய 17, கற்பகாலம், கடமழி 18, வச்சிர, வல்லுடம்பு 19, 20, 22, 23, சந்திரனை, சங்கரனுக்கு 24, கட்டுக்கு, கடுவிடம் 25, ஆதிசேடன், ஆட்டி 26, 27, 28, 30, செப்பரிய, செங்கதிர் 31, வேதனை, வேதனை 32, 34, அனந்தனை, அதன், கனங், கடுஞ்சங்க 36, அட்டதிக்கு, அக்கோண 37, அட்டதிக்கு, அவ்வவற்றில் 38, 39, நாடுநகர், நடுவன், கூடுபோன, கூத்தன் 40, 42, 43, 44, 45, 46, 47, 48, 49, 55, 56, 57, 58, 59, 60, 61, 62, 63, 64, 65, 66, 67, 70, 71, 72, 74, 75, 77, 78, 79, 80, 81, 83, 84, 85, 86, 87, காடு மலை, கால் கடுக்க 89, காந்தம், காட்சியான, சாந்தமுடன், சலியாமல் 91, உளியிட்ட, உலகத்தின் 92, 94, தன்னை, தன்னை 95, 96, தேக்கெடுத்தே, தேகபந்தம் 97, சமய பேதம், சகத்தோர் 99, பூசை, பூமி, ஆசை, அடை 100, 101, சடுத்தனாதி, சமைந்த, மகத்துவ, மற்றும் 102, 103, நாற்பத்து, நாடும் 104, எவ்வுலகும், எங்கள் 108, மணக்கோலம், மக்கள் 109,

110, 112, தந்திரம், தனி மந்திரம், மந்திரம், மதிலினை, அந்தரம், அருள், இந்த, இனி, 113, களி மண்ணினால், கனமான, அளிபுலம், அறிவென்னும், 114, 115, 116, 118, 119, 120, 121, கன்னான், கருமான் 122, 123, 124, 125, 126, 127, சூத்திரம், சுழுமுனை, பாத்திரம், பத்தெட்டு, ஊத்தை, உளவன், பார்த்துரை, பதனம் 128, மவ்வக்குடம், மணிவட்டம், வவ்வக், வக்கிர, பவ்வ, பஞ்ச, சிவ்வுரு, சீர்பாதம் 129 போன்ற பாடல்களில் இது போன்றே முதல் எழுத்தொன்றி மோனை பயின்று வந்துள்ளன.

**முரண்**

அருவமாகவும், உருவமாகவும், இரண்டுமாகவும், இருளாகவும், ஒளியாகவும், ஆகமமாகவும், வேதமாகவும், குருவாகவும், சீவனாகவும் எங்குமாய், எல்லாமும் செறிந்த அப்பொருளைப் போற்றி, ஆடு பாம்பே என்பதை,

அருவாயும் உருவாயும் அந்தி யாயும்
அந்தாமாயும் ஒளியாயும்..... (பாம்பு.சி.பா.7)

என்பதில் முரண் அமைந்துள்ளன.

எவ்வுயிரும், எவ்வுலகும் ஈன்று புறம்பாய்
இருந்து திருவிளையாட்டு எய்தியும் பின்னர்
அவ்வுயிரும், அவ்வுலகும், ஆகியும் நின்ற
ஆனந்த வெள்ளங்கண்டு ஆடுபாம்பே *(பாம்பு.சி.பா.9)*

இப்பாடலில் எவ்வுயிரும் எவ்வுலகும், அவ்வுயிரும் அவ்வுலகும் என்பது முரணாக அமைந்துள்ளன. மேலும்,

பொய்ம் மதங்கள், மெய்ம் மதங்கள் (11)

சந்திரனைச் சூரியனை (24)

என்னும் பாடலிலும் முரண் பயின்று வந்துள்ளன. மேலும்,

தூணை ஒரு சிறு துரும்பு போல் தோன்றச் செய்வோம், சிறு துரும்பை ஒரு பெருந்தூணாகத் தோன்றச் செய்வோம். ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் ஆகச் செய்குவோம். ஆகவே ஆரவாரமாக எழுந்து, எதிரில் நின்று பாம்பே ஆடுவாயாக என்று குண்டலி எழுப்புவதைக் கூறுகின்றார். இதனை,

தூணைச் சிறுதுரும் பாகத் தோன்றிடச் செய்வோம்
துரும்பைப் பெரும்தூணாகத் தோற்றம் செய்குவோம்
ஆணைப் பெண்ணும் பெண்ணை ஆணும் ஆகச் செய்குவோம்
ஆராவாரித்து எதிராய் நின்று ஆடுபாம்பே (பாம்பு.சி.பா.27)

தூண், துரும்பு, ஆண், பெண், பெண், ஆண் என்பன முரணாக வந்துள்ளன. மேலும், எண்ணெய்க்கும் நீருக்கும் **(74)**, ஆசை, ஆங்காரம் **(79)**, காடு, வீடு பெறும் **(88)**, சூரியனைக் கண்ட பனி **(90)**, தன்னையறிந்து, பின்னை **(95)** மணக்கோலம் கொண்டு மிக மனமகிழ்ந்துமே என்னும் பாடல்களிலும் முரண் வந்துள்ளது.

மக்கள் மனை சுற்றத்தோடு மயங்கி நின்றாய்
பிணக்கோலம் கண்டுபின்னும் துறவா வீட்டில்
பிறப்புக்கே துணையாம் என்று ஆடுபாம்பே (பாம்பு.சி.பா.109)

என்னும் பாடலில், மணக்கோலம், பிணக்கோலம் என்பது முரணாக வந்துள்ளன.

பிறப்பையும், இறப்பையும் அறுத்து விடையான் (110)

தந்திரம் சொல்லுவார், மந்திரம் செபிப்பார்கள் (113)

உள்ளும் புறம்பையும் அறிய வேண்டும் (115)

ஓங்காரக் கம்பம், ஆங்காரக் கோபம் (116)

தூங்காமல் தூங்கியே சுகம் அடைந்து (116)

பிறப்பு இறப்பு அற்றோம் என்று ஆடுபாம்பே (125)

வடக்கும் கிழக்குமாக நூலை இழைப்போம் (127)

மேலும் இவருடைய பாடலில் அடி முரணும் பயின்று வந்துள்ளது. சான்றாக,

நடக்கும் வழியினிலே உண்டை சேர்ப்போம்
நடவா வழியினிலே புடவை நெய்வோம் (127)

**உவமை**

பொன்னிலொளி போல எங்கும் பூரணமதாய்ப்
பூவின்மணம் போலத்தங்கும் பொற்புடையதாய்
மன்னும்பல உயிர்களில் மன்னிப் பொருந்தும்
வள்ளலடி வணங்கிநின் றாடுபாம்பே (பாம்பு.சி.பா.3)

என்னும் பாடலில் பொன்னில் ஒளி பொன்னை விட்டுப் பிரியாது இருப்பது போல் பிரபஞ்சத்தை விட்டு அக்கடவுள் பிரியமாட்டார். பருவம் வரும் பொழுது பூவில் மணம் வந்து பொருந்துவது போல் நம் பக்குவம் கண்டே அவரும் வெளிப்படுவார். பலவகை உயிர்களிலும் அவர் நிறைந்து உள்ளார். அப்படிப்பட்ட இறைவன் அடியை வணங்கி நின்று பாம்பே, ஆடுவாயாக என்று குறிப்பிடுகின்றார்.

எள்ளில் எண்ணெய் போலவுயிர் எங்கும் நிறைந்த
ஈசன்பத வாசமலர் எண்ணி எண்ணியே (பாம்பு.சி.பா.4)

எள்ளுக்குள் அதன் பகுதி முழுவதும் எண்ணெய் நிரம்பியிருப்பது போல், உயிர் எங்கும் ஈசனின் திருவடிகள் நிறைந்திருக்கிறது. அவரை நினைத்து நினைத்து இருக்கும் படி அடக்கத்தோடு ஆடுபாம்பே என்று (குண்டலியை) அறிவுறுத்தி. பாடியுள்ளார்.

உள்ளங்கையிற் கனிபோல் உள்ள பொருளை
உண்மையுடன் காட்டவல்ல உண்மைக் குருவைக்
கள்ள மனத் தன்னைத் தள்ளிக்கண்டு கொண்டன்பாய்க்
களித்துக் களித்து நின்று ஆடுபாம்பே (பாம்பு.சி.பா.13)

என்பதில் உள்ளங்கையில் இருக்கும் நெல்லிக்கனியின் பாகங்கள் அதன் மேல் தெரியும் வரம்புக் கோடுகளால் தெளிவாகத் தெரியும். அது தூரத்தில்

தெரிவது கடினம். அதுபோலவே இறைவனை உண்மையான அன்பால் உணரலாமே. கள்ள மனத்தோடு நோக்குதல் தவறு என்னும் கருத்தைக் காணமுடிகிறது.

அங்கையிற் கண்ணாடிபோல் ஆதிவத்துவை
அறிவிக்கும் எங்கள் உயிரான குருவை (14)

வெயில்கண்ட மஞ்சள் போன்ற மாதர் அழகை
விரும்பியே மேல் விழுந்து மேவு மாந்தர் (50)

பாரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேர் அறியவே மெத்த வீங்கி (62)

நீரில் எழும் நீர்க்குமிழி நிலைகெடல் போல (64)

மரப்பாவை போலவொரு மண்ணுருச் செய்து
வளமான சீவன் என்னுஞ் சூத்திரம் மாட்டித் (68)

தாமரையின் இலையிலே தண்ணீர் தங்காத
தன்மைபோலச் சுகத்தாசை தள்ளிவிட்டெங்கும் (70)

சொல்லும் புளியம் பழத்தின் தோடு போலவே (72)

சேற்றில்திரி பிள்ளைப்பூச்சி சேற்றை நீக்கல் போல் (73)

எண்ணெய்க்கும் நீருக்கும் சொந்தம் இல்லாவாறுபோல் (74)

கக்கிவிட்ட சோறுகறி கந்த மூலங்கள்
கண்களுக்குச் சுத்தமான காட்சி போலவே (75)

தேனில் வீழ்ந்த ஈயைப்போலச் சிந்தை குலைந்து
திகையாமல் சிற்சொரூப தெரிசனங்கண்டு (81)

சூரியனைக் கண்டபனி தூரஓடல் போல் (90)

கந்தம்வலி இரும்புபோல் காசில் மனத்தை (91)

திரளான போரில் ஊசி தேடல்போல் (93)

ஏட்டுச் சுரைக்காய் கறிங்கிங் கெய்திடாதுபோல்
பாலிற்சுவை போலும் எங்கும் பாய்ந்த ஒளியைப்
பற்றுப்பொன் பற்றவைத்த பான்மை போலவே (96)

என்னும் பாடல்களில் பலப்பல உவமைகளைக் கொண்டு இறைவன் இருக்கும் இடத்தின் பொருளை விளக்குகிறார் சித்தர்.

## எடுத்துக்காட்டு உவமையணி

ஒரு பொருளை அதன் தன்மை கொண்ட மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறும் பொழுது, இடையே உவம உருபு இல்லாமல் கருத்துக்களை மட்டுமே எடுத்துக் கூறி ஒப்பிட்டுக் கூறுவதற்கு ''எடுத்துக்காட்டு உவமையணி'' என்று பெயர். இதனை,

உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி?
உலகத்தின் மூடர்களுக்குக் குண்டோ உணர்ச்சி (பாம்பு.சி.பா.92)

என்னும் பாடலில் உளியிட்ட கற்சிலைக்கு உணர்ச்சி இல்லை என்றும் உலகத்தில் மூடர்களுக்கும் உணர்ச்சி உண்டோ என்னும் கருத்தைக் குறிப்பிடுகின்றார்.

## உருவகங்கள்

உவமைக்கும் பொருளுக்கும் வேறுபாடின்றி உவமையினையே பொருளாகக் கூறுவது 'உருவகம்' என்று பெயர். உவமேயப் பொருள் முன்னும், உவமைப் பொருள் பின்னும் அமைவது சித்தர் பாடலில், அமைந்த உருவகம்.

கோபம் எனும் மதயானை கொண்ட மதத்தைக்
கூர்கொள்யுத்தி அங்குசத்தால் கொன்றழித்தோம் காண
(பாம்பு.சி.பா.76)

என்னும் பாடலில், கோபத்திற்கு, மதயானையை யுத்தி அங்குசம் என உருவகப்படுத்தியுள்ளார். மேலும்,

மனமென்னும் குதிரையை வாகனமாக்கி
மதியென்னும் கடிவாளம் வாயினில் பூட்டி
சினமென்னும் சீனியின் மேற்சீராய் ஏறி (பாம்பு.சி.பா.78)

ஆசையென்னும் செருப்பின்மேல் அடியை வைத்தே
ஆங்கார முட்காட்டை அறவே மிதித்தே (79)

மேற்கூறிய பாடல்களில் கோபமென்னும் மதயானை, யுத்தி அங்குசம், மனமென்னும் குதிரை, மதி என்னும் கடிவாளம், சினமென்னும் சீனி, ஆசை எனும் செருப்பு, ஆங்கார முள்காடு ஆகியவை உருவகங்களாகக் கூறப்பட்டுள்ளன.

## சிலேடை அணி

ஒரே சொற்றொடர் பல பொருள் அளிக்கும் வகையில் அமைக்கப் பெறுதல் “சிலேடை அணியாகும்”. சித்தர் பாடலில் அமைந்த,

பரியாசம் போலவே கடித்த பாம்பு
பலபேர் அறியவே மெத்த வீங்கிப்
பரியாரம் ஒருமாது பார்த்தபோது
பையோட கழன்றதென்று ஆடுபாம்பே (பாம்பு.சி.பா.62)

என்பதில் பாம்பு கடித்த பின்னர், அது பலரும் அறியும்படி மிகவும் வீங்கி, மருத்துவம் பார்த்ததும் கடிவாயில் விஷம் முழுதும் கழன்றது. ஓர் ஆடவன் ஓர் இளம் பெண்ணுடன் பழகிக் கூடியதால் கர்ப்பமாகிப் பலரும் அறியும்படி வயிறு வீங்கியது. மருத்துவச்சி பார்த்த போது கர்ப்பப்பையோடு குழந்தை கழன்று விழுந்தது என்னும் இரு கருத்துக்கள் கூறப்படுவதால் சிலேடை அணியாகும்.

## சொல்லாட்சி

பிற்காலச் சொற்களான கப்பல், சுக்கான், சீனி, வையாளி, சவாரி, ஒயில், வருடிக்கும் ஆகிய சொற்கள் பயின்று வந்துள்ளன.

## பழமொழி

உள்ளங்கையிற் கனிபோல (13)

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது (94)

என்னும் பழமொழிகள் பயின்று வந்துள்ளன.

### புராணச் செய்தி

உலகமெல்லாம் ஊழி வெள்ளத்தில் அழியும் போது ஓர் ஆலம் இலையில் அடங்கிய குழந்தை போல் கண்ணன் மிதந்த புராணக் கதையை,

ஆலச்சயனத்து மாலுடன் நின்றே
ஆனந்தஞ் சேர்ந்தோம் என்று ஆடுபாம்பே (119)

என்னும் பாடல் வரிகள் விளக்குகின்றன.

## இராமதேவர்

இராமதேவர் பத்துப் பாடல்களிலும் பூஜை செய்யும் முறைகளைப் பற்றி பாடியுள்ளார். யோகம் செய்து எல்லாவற்றிற்கும் மூலமாகிய மணிவிளக்கை உள்ளத்தினால் அறிய வேண்டும் என்னும் கருத்தைக் குறிப்பிடுகின்றார். மேலும் எதுகை, மோனை, பேச்சு மொழிச் சொற்கள், அந்தாதி அமைப்பு ஆகியவை இவரின் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

### எதுகை

ஆதியென்ற மணிவிளக்கை அறிய வேணும்
அகண்டபரி பூரணத்தைக் காண வேணும்
சோதியென்ற துய்யவெளி மார்க்க மெல்லாஞ்
சுகம்பெறவே மனோன்மணி யென்னாத்தாள் தன்னை
நீதியென்ற பரஞ்சோதி ஆயிபாதம்
நிற்குணத்தி னின்றநிலை யாருங் காணார்
வேதியென்ற வேதாந்தத் துள்ளே நின்று
விளங்குவதும் பூசையிது வீண் போகாதே. (இராம.பா.1)

என்னும் பாடலில் ஆதியென்ற, சோதியென்ற, நீதியென்ற, வேதியென்ற முதலிய சொற்களில் இரண்டாம் எழுத்தாக 'தி' என்பது எதுகையாக வந்துள்ளன. மேலும்

போதாமல், ஆகாமல், வாதமல், சாதாமல் (2)

சித்தான, முத்தான, வித்தான, சத்தான (4)

தேளப்பா, வாளப்பா, ஆளப்பா (5)

இன்ன, அன்ன, வன்ன, சன்ன (6)

ஆமப்பா, வீமப்பா, சோமப்பா, தாமப்பா (8)

தானென்ற, ஆனென்ற, கோனென்ற, வானென்ற (9)

யோகியா, யோகிகளா, தாகிகளாய், மோகிகளால் (10)

என்னும் பாடல்களில் எதுகைகள் அமைந்துள்ளன.

## மோனை

முக்கோண மூச்சுழிதற் கோண மாகி
  முதலான மூலமணி வாலை தன்னில்
நாற்கோண நாலுவரை நயந்து காக்க
  நாயகியாள் பரஞ்சோதி நாட்ட முற்று (பா.13)

என்பதில் முக்கோண, முதலான, நாற்கோண, நாயகியாள் ஆகியவை மோனையாக அமைந்துள்ளன.

முத்தான, முற்றிடுமே, வித்தான, விரிவான (4)

அன்னமின்னா, அறிவுடைய, வன்னமின்னார், வலிதான
சன்னமின்னா, சதிராக (6)

தொடுத்த முதல், தொகை முடிந்து, விடுத்த பின்பு,
விரித்துரைத்தேன் தடுத்துவிடு, தட்டழிந்து (7)

போன்ற பாடல்களில் மோனை அமைந்துள்ளன.

**பேச்சுமொழிச்சொற்கள்**

கேளப்பா, வாளப்பா, ஆளப்பா, காணப்பா (5)
ஆமப்பா, வீமப்பா, சோமப்பா, தாமப்பா (8)

எனப் பேச்சுமொழிச் சொற்கள் அமைந்துள்ளன.

**அந்தாதி**

பாடலுள் அடிதோறும் இறுதியில் வந்த ஒரெழுத்தோ, ஓரசையோ, ஒரு சீரோ அல்லது அடி முழுவதுமோ அடுத்த அடிக்கு முதலாக நின்று, தொடுக்கப்படும் தொடைக்கு 'அந்தாதித்தொடை' என்று பெயர். இராமதேவர் பாடலில் அமைந்த அந்தாதி பாடல் சான்றாக:–

ஆதியென்ற மணிவிளக்கை அறியவேணும் ...
பூசையிது விளங்குவதும் வீண்போகாதே (1)

போகாமல் நின்றதோரையா நீதான்
..................................முக்கோணமாமே (2)

முக்கோண மூசுழிதற் கோணமாகிஆ
.................................. சித்தனாமே (3)

இவர் பாடல்கள் அனைத்தும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன.

## காளைச்சித்தர்

காளைச்சித்தர் பாடல்கள் மூன்றிலும் யோகம் பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலும் எதுகை, மோனை, முரண், பள்ளு, ஏர்ப்பாட்டு ஆகியவை இடம் பெற்றுள்ளன.

**எதுகை**

முன்னேரும் பின்னேரும் - என் தோழா
மூவணையும் ஓரணைதான்

முன்னேர் உழுதுமிட - என் தோழா
  முகவெள்ளைக் காளையடா? (காளை.சி.பா.2)

சந்திரரும் சூரியரும் - என் தோழா
  சந்தி பண்ணும் பொய்கையிலே (காளை.சி.பா.3)

என்னும் பாடலில் எதுகை அமைந்துள்ளன.

## மோனை

எல்லோரும் கொல்லையுழ - என் தோழா
  என் கணவன் பள்ளம் உழ
பள்ளம் பழுத்தல்லவோ - என் தோழா
  பார்த்துவரப் பிள்ளையீரே (காளை.சி.பா.1)

எல்லாரும், என், பள்ளம், பார்த்து மேலும்,

முன்னேரும், மூவணையும், முன்னேர், முகவெள்ளை (2)

சந்திரரும், சந்தி பண்ணும் (3)

என்னும் பாடலில் மோனை அமைந்துள்ளன.

## முரண்

முன்னேரும், பின்னேரும் (2)

மூவணையும், ஓரணைதான் (2)

சந்திரரும், சூரியரும் (3)

என வரும் பாடல்களில் முரண் அமைந்துள்ளன.

## பள்ளு

தொண்ணூற்றாறு வகை சிற்றிலக்கியங்களில் ஒன்று உழத்திப்பாட்டு. உழத்திப் பாட்டிற்கு இணையானது பள்ளு என்னும் சிற்றிலக்கியம் ஆகும். பள்ளு என்பது பள்ளமான நன்செய் நிலங்களையும் அங்கு செய்யப்படும் உழவினையும் குறிக்கும். ஆகவே பள்ளு உழவரின்

பாட்டுக்குப் பெயராக வந்தது. சித்தர் இலக்கியத்தில் காணப்படும் பள்ளு வழக்கமான உறுப்புகளைக் கொண்டதல்ல. எனினும் பள்ளு இலக்கியக் கூறுகளுடன் காணப்படுகிறது. காளைச் சித்தர் பாடல்கள் மூன்றும், பள்ளு இலக்கியத்தைச் சார்ந்தனவாகும். அப்பாடல்கள் உழவர்களின் வாழ்வைச் சித்திரிக்கின்றன. இதனை,

முன்னேரும் பின்னேரும் - என் தோழா
மூவணையும் ஓரணைதான்
முன்னேர் உழுதுமிட - என் தோழா
முகவெள்ளைக் காளையடா (காளை.பா.2)

என்று ஏர் உழவரின் செயல்களைப் பதிவு செய்யப்பட்டு, ஏர்ப்பூட்டுதல், உழுதல், காளையைப் பயன்படுத்துதல் முதலிய குறிப்புகளடங்கிய இப்பாட்டு சிந்துவில் அமைந்துள்ளது. இப்பாடல் பள்ளு இலக்கியப் பதிவாகும்.

## உரோமரிஷி

உரோமரிஷி பாடல்களில் நடையமைப்பு, எதுகை, மோனை, முரண், அந்தாதி அமைப்பு, உவமை, பழமொழி ஆகியவை அமைந்துள்ளன. அவை,

**நடை**

உரோம ரிஷி பாடல்களின் நடை எளிய நடையாக மக்கள் புரிந்து கொள்ளக் கூடியதாக, பாடல்கள் எண்சீர் விருத்தத்திலும் அமைந்துள்ளன. முத்திக்கு வித்தாகி இறைவனாகிய முதல்வனும், தலைக்கு மேல் உள்ள பகுதியில் வெளிப்படும் பரபிரம்மம் தன் நூலைக் காக்க என்றும், யோகம் சரியாக செய்யவில்லை என்றால் பயன் இன்றி மாண்டு போவார். நடுநாடியை விட்டு விலகாமல் அதனுடன் ஒன்றினால் அதுவே முத்தியாகும். அது மட்டுமின்றி, சரியான மூச்சு பயிற்சி சுவாச எண்ணிக்கை போன்றவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

**எதுகை**

மூலவட்டம், மேலவட்டம், காலவட்டம், ஞாலவட்டம் (1)
கண்ணாடி, விண்ணாடி, ஒண்ணான, பெண்ணார் (2)
பேசுவேன், நேசமதாம், காதலாய், சோதனையாய் (3)
வாங்கி, ஓங்கி, தாங்கி, ஒங்கினை (4)
பாரையா, நேரையா, கூரையா, ஆரையா (5)
அழைப்பதும், பிழைப்பதற்கு, உழைப்பதற்கு (6)
மேலென்ன, நாலென்ன, காலென்ன, கோலென்ன (7)
கூட்டியே, காட்டுவிக்கு, மூட்டுவிக்கு, தட்டிகா (8)
செலுத்துவது, வலுத்ததடா (10)
சொரூபமுத்தி, அருபமுத்தி, பருபத்தை (12)
ஓமென்ற, ஆமென்ற, போமென்று, தாமொன்று (13)

போன்றவற்றில் எதுகைத் தொடை அமைந்துள்ளன.

**மோனை**

கண்ணாடி, கருவதனை (2-1)
ஒண்ணான, ஒரு போதும் (2-3)
காதலாய், காணாத (3)
உழைப்பதற்கு, உதவிதனக்கு (6)
தட்டிகா, தனலான (8)
மனையான, மத்யமுதல் (9)
செலுத்துவது, சென்றேறி (10)
பலித்ததடா, பருவமாய் (10)
வீடேதிங்கு, வீண்பேச்சா (11)
காடேறி, காய்கறி (11)
அருபமுத்தி, அபாரட்ச (12)
பருபத்தை, பழங்கதை (12)
போமென்று, போச்சுது (13)
தாமொன்று, தானினைந்த (13)

முதலியவற்றில் மோனைத் தொடை அமைந்துள்ளன.

### முரண்

இடங்கலை, பிங்கலை (3)
நாலென்ன, எட்டென்ன (7)

என முரண் உள்ளன.

### அந்தாதி

மூலவட்டமான குரு பாதங்காப்பு... காணே (1)
கண்ணாடி சிலமுடித் தனுப்பினாலே... பேசுவேனே (2)
பேசுவேன் இடைகலையே சந்திர காந்தம்... (3)

பதின்மூன்று பாடலும் அந்தாதியில் அமைந்துள்ளன.

### உவமை

சொருபமுத்திக் கடையாளம் ஏதென்றக்கால்
சுடர்போலக் காணுமடா தூலதேகம்
அருபமுத்தி யிடமல்லோ பிரம ஞானம்
அபாரட்ச மென்று சொல்லுஞ் சிரவ ணந்தான்
பருபத்தை அசைப்பனெனச் சிற்றெ றும்பின்
பழங்கதைபோ லாச்சுதித்த யோகம் விட்டால்
வெறுங்கடத்தி லீப்புகுந்தவாறு போல
வேதாந்த மறியாத மிலேச்சர்தாமே (உரோம.சி.பா.12)

என்னும் பாடலில் சொரூப முத்திக்கு அடையாளம் இந்தத் தூல உடம்பு சுடர் போல் ஒளி உடம்பாகத் தோன்றும். பிரம்ம ஞானத்திலும் கூட அரூப முத்தியே உண்டு. சாகத் திருநாமம் ஓதும் (சிரவணத்தால் – நினைவு கூறும் பகுதி) பர உச்சத்திற்குக் கொண்டு செல்லாது, மலையைச் சிற்றெறும்பு அசைப்பது போல் இந்த யோகத்தால் உடலை ஒளியுடல் ஆகச் செய்யலாம். இதனை விட்டால் வெறும் குடத்தில் ஈ புகுந்து கெட்டது போல் வேதாந்தம் அறியாதவர் நாகரிகமில்லாதவர் ஆவார் என்று உவமை எடுத்தாளப்பட்டுள்ளன.

**பழமொழி**

நாம் ஒன்று நினைத்தால் தெய்வம் ஒன்று நினைக்கும் என்னும் பொருளில்,

தாமொன்று நினைக்கையிலே தெய்வமொன்று
தானினைந்த தன்மை யல்லோ விதிகள் தாமே (உரோம.சி.பா.13)

என்னும் பழமொழி அமைந்துள்ளது.

## கணபதி தாசர்

தனது நெஞ்சுக்கு அறிவுரை கூறுவது போல் ஒவ்வொரு பாட்டிலும் நெஞ்சே என்று விளித்துப் பாடுகின்றார். நாகை நாதர் பெயரையும் ஒவ்வொரு பாடலின் இறுதி அடியிலும் அமைத்திருக்கிறார்; பாடல்கள் எளிய நடையில் அமைந்துள்ளன. இவற்றில் எதுகை, மோனை, முரண், உவமை, அணி, பேச்சு வழக்குச் சொற்கள் ஆகியவையும் அமைந்து பாடலைச் சிறப்பிக்கின்றன.

**யாப்பமைதி**

நெஞ்சறி விளக்கத்தில் காணப்படும் 100 பாடல்களும் அறுசீர் விருத்தங்களே. அவற்றுள் தொடக்கத்தில் காப்புப் பாடல் ஒன்றும், பாடல்களாக தொண்ணூற்றொன்பது பாடல்கள் மொத்தம் நூறாக உள்ளன. எல்லாப் பாக்களும் 'விளம்–மா–தேமா' என்னும் அமைப்பிலானவை. நூறு பாடல்களும் 'நெஞ்சே' என்னும் ஏகாரத்தால் முடிகின்றன.

**எதுகை**

பாடல்கள் முழுவதும் எதுகையால் அமைந்துள்ளன.

வஞ்சக மனத்தின், கஞ்சமா மலரிட்டோதும், நெஞ்சமறி,
குஞ்சர முகத்து (1)

தந்தை தாய், மைந்தரும், இந்த மெய், சுந்தர நாகை (2)

கிட்டுமோ, கட்டுமோ, எட்டுமோ, தட்டுமோ (21)

ஏட்டிலே, காட்டிலே, நாட்டிலே, கூட்டினில் (24)

கடலென, உடல்பொருள், திடமுடன், நடமிடும் (47)

குலங்கெட்டு, மலங்கெட்டு, தலங்கெட்டு, பலங்கெட்டு (52)

பொறிவழி, அறிவெனும், உறிதனி, நெறிதரு (55)

மடைவாயில், விடையேறும், தடையற, புடைசூழ(66)

நடக்கிலும், முடக்கிலும், மடக்கிலும், திடக்குரு (88)

அலைவாயில், வலைவாயில், உலைவாயில், பலகாலு (97)

இறந்திடும், இறந்திடும், மறந்திடா, சிறந்த (99)

என்னும் பாடல்களில் எதுகைகள் அமைந்துள்ளன.

## மோனை

காண்பதும், காயமும் (3-1)

வஞ்சகம், வளர்வினை (8-1)

உடலினை, உலகெலாம், கடல்மரம், கம்பம் (9)

குளத்திலே, குளக்கரை, குளத்துநீர், குறிப்புடன் (12)

தண்ணீரிலிருக்கும், தண்ணீரிற் கருவை, கண்ணினால்,
கயலுறு (16)

பசும்பொன், பணிதிவே, உசும்புசீ, உடல்பல (37)

என மோனைகள் பாடலில் அமைந்துள்ளன.

## முரண்

ஒருபதம், இருபதம் (22)

இரவுடன், பகல் (26)

பாலு நீர்போற் (28)

உருவமும் நிழலும் (34)

அருவுரு வில்லா (77)

உறக்கமும் விழிப்பும் (94)

என்னும் பாடல்களில் முரண் பயின்று வந்துள்ளன.

**உவமை**

கணபதிச் சித்தரின் நெஞ்சறி விளக்கப் பாடலில் உவமைகள் மிகுதியாக அமைந்துள்ளன. அவை,

உடலினை நிசமென் றெண்ணி உலகெலாம் ஓடியாடிக் கலக்கமுற்றாய்
கடல்மரக் கலம்பாய்க் கப்பல் காகம் போற் (9)
புல்லினுள் இருக்கும்பூச்சிபொருத்த
வெண்ணுரையுண்டாக்கி
மெல்லிய தண்ணீர் வீட்டில் வெயிற்படாதிருக்கு மாபோல்
சொல்லிலே நாகைநாதர் தோய்ந்திடச் சூட்சங் கண்டாற்
கல்லிலே தெய்வமில்லை கருத்திலே தெய்வம் நெஞ்சே (15)
சூரியகாந்தம் பஞ்சைச் சுட்டிடுஞ் சுடரே போல
கூரிய அடிமூலத்தின் குண்டலிக் கனலை மூட்டி,(18)
விரக நாயகனைத் தேடி விரும்பிய மங்கை போல
குரவனா ருபதேசத்தைக் குறிப்புடன் நிதமுந் தேடி (26)
தீபத்தை மலரென்றெண்ணிச் சென்றிடு விட்டில் போல
கோபத்தின் கனலில் வீழ்ந்து கொடியதோர் பிறவி பெற்றாய் (40)
மடைவாயில் பட்சி போல மனந்தனை அடக்கிவாதி
விடையேறும் ஈசன்பாதம் விரும்பிய பெரியோர் பின்னே (67)
ஓட்டிலே பட்ட பட்சி உழல்கின்ற நெறிபோலசைக்
கட்டிலே மயங்கி மாறாக் கவலையுற்றலைந்தாய் நீரதான் (73)
சேற்றிலே நுழைந்திருந்த சிறுபிள்ளைப் பூச்சி போலும்
நீற்றிலே நுழைந்திருந்த நேர்மையாம் அழற்சிபோலும்
மாற்றுபேருலகில் நல்லோர் மருவிரி மருவார் சித்தம் (82)
நாடகப் பெண்ணை ஆட்டும் நட்டுவன் போல உன்றன்
கூடகச் சடத்தை ஆட்டுங் குருவை நீ அறிந்திடாமல்
மூடக மானாய் ஞான முதல்வனை அறிவால் தேடி (83)
காலது மேலதாகக் கனியுண்ணும் வௌவால் போல
மூலநல்வாசி யோடு முறைமையை அறிவார் கண்டு (94)
சுவர்த்தலைப் பூனை போலச் சுற்றிய பிறவி தீரத்
தவத்தினுக் குருவமான சற்குறி தானைப் போற்றி (97)

என்னும் பாடல்களில் உவமைகள் அமைந்துள்ளன. மேலும் 12 முதல் 18, 25, 28, 29, 31, 32, 34, 40, 42, 43, 51, 68, 70, 71, 72, 73, 80, 81, 82, 93, 94, 95, 96, 97 முதலிய பாடல்களிலும் உவமையணி அமைந்துள்ளன.

இவர் பாடல்களில் உவமைகளை அடுக்கிக் கூறும் நடையும் அமைந்துள்ளன. அவை,

அலைவாயில் பூடுபோலும் ஆனைவாய்க் கவளம் போலும்
வலைவாயில் மிருகம் போலும் மயங்கிநைந்தலைந்தாய் நீதான்
உலைவாயில் மெழுகைப்போல உருகிமெய்ப் பொருளையுன்னி
பலகாலு மேத்தி நாகை லிங்கரைப் பணிவாய் நெஞ்சே! (பா.97)

அலைதனில் துரும்பு போலும் ஆலைவாய்க் கரும்பு போலும்
வலைதனில் மானைப் போலும்................ (பா.54)

ஆனைவாய்க் கரும்பு போலும் அரவின் வாய்த்தேரை போலும்
பூனைவாயெலியைப் போலும் புவியில்நைந் தலைந்தாய்ஞான (பா.73)

என்பனவாகும்.

## சொற்பொருட் பின்வருநிலையணி

''ஒரு செய்யுளில் முன்னர் வந்த ஒரு சொல் பின்னர் பல இடத்தும் வந்து முன்னர் உணர்த்திய பொருளை உணர்த்துமாயின் அது ''சொல்பொருள் பின்வரு நிலையணி' எனப்படும்.''

தந்தைதாய் நிசமுமல்ல, சனங்களு நிசமுமல்ல;
மைந்தரும் நிசமுமல்ல, மனைவியும் நிசமுமல்ல
இந்தமெய் நிசமுமல்ல, இல்லற நிசமுமல்ல
சுந்தர நாகை துணையடி நிசம்பார் நெஞ்சே! (பா.2)

என்னும் பாடலில் நிசமும் அல்ல என்ற சொற்கள் 6 முறை ஒன்றன்பின் ஒன்றாக ஒரே பொருளையே உணர்த்தி வருகின்றன. மேலும் இது போன்ற பாடல் அமைப்பு

காண்பதும் அழிந்துபோகும், காயமும் அழிந்துபோகும்
ஊண்பொருள் அழிந்துபோகும், உலகமும் அழிந்துபோகும் (பா.3)

நடக்கிலும் வாசிபாரு, நாட்டமும் வாசி பாரு
முடக்கிலும் வாசிபாரு, முழுசுழி வாசி பாரு
மடக்கிலும் வாசி பாரு, மறிவிலும் வாசி பாரு (பா.88)

என்னும் பாடல்களிலும் சொற்பொருள் பின்வருநிலையணி அமைந்துள்ளன.

## சொல்லாட்சி

கணபதி தாசர் மாயை என்னும் சொல்லை மாய்கை என்றும், உவந்து என்னும் சொல்லை உகந்து என்றும் பலவிடங்களில் ஆள்கிறார். ஆச்சு, தோண (மிகுதியாக), பாரு என்ற பேச்சு வழக்குகளும் பயன்படுத்தியுள்ளார். வேட்டி (31) என்ற பிற்காலச் சொல்லையும் கையாண்டுள்ளார்.

## செவியறிவுறூஉ

''நல்லுரை கூறுதல்'' என்று பொருள்படும் செவியறிவுறூஉ பிரபந்த வகைகளில் ஒன்று. பொதுவாக செவியறிவுறூஉத் துறைப் பாடல்கள் மன்னர்களுக்கு வழிகாட்டும் முகமாக அமைச்சர் மற்றும் புலவர்களால் பாடப் பெறுவது.''

சித்தர் இலக்கியங்களில் சித்தர்கள், சீடர்களுக்கும் பொதுவான மனித சமுதாயத்திற்கும் வழிகாட்ட செவியறிவுறூஉப் பாடல்களைப் பாடியுள்ளார்கள்.

சித்தர் பாடல்களில் கணபதிதாசர் அருளிச் செய்த நெஞ்சறி விளக்கத்தில் அமைந்த பாடல்களும் செவியறிவுறூஉப் பாடல்களாக அமைந்துள்ளன. அதனை,

மனமெனும் பேயினாலே மாய்கையாய் இருள்தான் மூட

..........................................................................

பனமெனும் நாகைநாதர் பதம்பணிந் தருள்சேர் நெஞ்சே (கண.4)

என்று கூறி மனதிற்கு அறிவுறுத்துகிறார் சித்தர். இவருடைய பாடல்கள் அனைத்தும் இவ்வாறே அமைந்துள்ளன.

## காகபுசுண்டர்

பாடல்கள் எளிய நடையில் அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் பயின்று வந்துள்ளன. 144 பாடல்கள் எண்சீர் விருத்தத்திலும் இறுதியாக 16 பாடல்கள் குறள் வெண்பாவினால் அமைந்துள்ளன. காப்புப் பாடல், காகபுசுண்டர் உபநிடதம், காக புசுண்டர் காவியம், காகபுசுண்டர் குறள் போன்ற தலைப்புகளில் நூல் காணப்படுகின்றது.

**எதுகை**

பாரப்பா பரப்பிரமம் ஒளிவினாலே
பத்தியே நரம்பு வழி பாயும்போது
ஆரப்பா இருகண்ணில் ஒளிவதாகி
அண்டமெல்லாம் ஏகமாய்த் தெரியலாச்சு
காரப்பா நரம்பென்ற விழுது வட்டம்
கபாலத்தின் முக்கூறாய்ச் சுழுமுனை யாச்சு
வீரப்பா காதுக்கும் நமக்குக் குந்தான்
வெற்றிபெற இன்னமுந்தானுரைக்கக் கேளே (காக.பு.சி.பா.2)

என்னும் பாடலில் எதுகை அமைந்துள்ளன. மேலும்

வாறான, கூறாக, வீறான (1)
கேளப்பா, நாளப்பா, வாளப்பா, தேளப்பா (3)
பாரடா, நேரடா, வீரடா, காரடா (4)
போமடா, ஆமடா, நாமடா, ஓமடா (5)
பாரான, சீராக, வீரான, கூரான (6)

ஆகிய பாடல்கள் முழுவதும் எதுகை பயின்று வந்துள்ளன.

## மோனை

சாட்சிசத்தா யதீதகுணா தீக மாகி
சூட்சுமனத் தாலறியத் தகாது யாது
சாட்சியதே யேதுசா தனமுந் தள்ளிச்
சகலவந்தா யாமித்வ சர்வபூத
சாட்சியினை யிவ்வளவவ் வளவாமென்று
தனைக்குணித்து நிர்ணயிக்கத் தகாது யோகம்
சாட்சியதே ஞானதுர்ஞான ஞேய ரூபஞ்
சத்தாதி பிரபாதி தானெ சொல்வோம் (காக.பு.சி.பா.83)

என்னும் பாடலிலும் 94, 142 ஆகிய பாடல்களிலும் மோனை பயின்று வந்துள்ளன.

## பொழிப்பு மோனை

இவர் பாடல்களில் பொழிப்பு மோனை பாடல்கள் அதிகம் பயின்று வந்துள்ளன. சில காட்டுகள்:

அறியலாம் மனந்தானே உயிர்தானாகும்
அண்டத்திற் சேர்ந்திடவே ஆகும் முத்தி
பரியேறிச் சவாரியுமே நடத்தலாகும்
பஞ்சமா பாதங்கள் பறந்தே போகும்
விரிவானான மனந்தனையும் அணிவதாக்கி
விட்டகுறை தொட்டகுறை விதியைப் பார்த்துக்
குறியான குண்டலியா மண்டவுச்சி
கூறுகிறேன் முக்கோண நிலையதாமே" (காக.பு.சி.பா.19)

மேலும் 1 லிருந்து 144 வரையுள்ள பாடல்களில் பொழிப்பு மோனை அமைந்துள்ளன.

**முரண்**

பரத்தினுடை அடிமுடியும் பகுத்து சொல்லும் (52)
சித்திமொன்றாய் அந்திசந்தி யுச்சிக்காலம் (62)
அப்பனே ரவிமதியுஞ் சுடர்மூன்றாகும் (63)
மேலுமில்லை கீழுமில்லை யாதுங் காணேன் (134)
வரமிடமாய் நின்ற மதிரவியை மாறி (147)

என்னும் பாடல்களில் முரண் அமைந்துள்ளன.

**அடிமுரண்**

அடிதோறும் முதற்சீரில் முரண் அமைவதால் அடிமுரண் என்பர். அதனை,

இருக்குமடா எங்குமொன்றாய் அக்கினிக் கம்பம்
என் மகனே கம்பத்தின் நடுவே மைந்தா
உருக்கமுடன் பெண்ணரசி யொன்றி நிற்பாள்
ஓகோகோ அவள் முகத்தைப் பார்க்கும் போது
பெருக்கமுடன் முன்பார்த்தாற் புருட ரூபம்
புத்திரனே பின்பார்த்தாற் பெண்போல் ரூபம்
மருக்கமுடன் யான்றானுங் கம்பத் தூடே
வத்தோட வந்தாக இருந்தேன் பாரே (காக.பு.சி.பா.37)

என்பதிலும் மேலும் பல பாடல்களில் அடி முரண் பயின்று வந்துள்ளது.

## இயைபுத் தொடை

செய்யுளில் அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், சொல்லானும் ஒன்றிவரத் கொடுப்பது “இயைபுத்தொடை”

மத்தியமம் வானதிலே வளர்ந்த லிங்கம்
மகாமேரு உச்சியிலே வளர்ந்த லிங்கம்
சத்தியும் ஆவியுடை மான லிங்கம்
சஞ்சாரச் சமாதியிலே நிறைந்த லிங்கம்

புத்தியால் மனமொன்றாய்ப் புகழ்ந்த லிங்கம்
பூவருந் தன்னில்தான் முளைத்த லிங்கம்
எத்திசையும் புகழ்ந்திடவே வந்த லிங்கம்
ஏகபர மானதொரு லிங்கந் தானே (காக.பு.சி.பா.44)

எனும் பாடலில் இறுதி அடியில் **லிங்கம்** என்னும் சொல் இயைபுத் தொடையாக பயின்று வந்துள்ளது. மேலும் **52, 80, 95, 101, 133** முதலான பாடலிலும் இயைபுத் தொடை அமைந்துள்ளது.

**உவமை**

வீறான அண்டவுச்சி முனைக்கப் பாலே
வெற்றியுடன் நரம்பதுதான் விழுதுபோல (காக.பு.சி.பா.8)

என்னும் பாடலில் அண்ட உச்சியில் மனத்தை நிறுத்தியவர்களுக்கு ஒளிகளே கண்ணில் நரம்பு போல் தோன்றிப் பின்னல் கொண்டு எல்லாவற்றையும் அங்கே கண்ணால் காணும் திறமை உண்டாகும் எனக் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

வெல்வதொரு பிரமநிலை யறியா மாற்றான்
வேரற்ற மரம் போல விழுவார் பாரே (காக.பு.சி.பா.15)

என்னும் பாடலில், யோக நெறியில் நில்லாமல், வெல்வதற்குரிய பிரமத்தின் நிலையை அறியாமல் வேரற்ற மரம் போல் ஒரு நாள் இவர்கள் விழுவர் எனத் தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

தோணுமயில் முட்டையின்மேல் வண்ணம் போலும் (காக.பு.சி.பா.95)

எனும் பாடலில் மயிலானது பல வண்ணத்தைப் பெற்று அழகுற விளங்கும், ஆனால் அதன் முட்டையில் மயிலின் வண்ணங்களைக் காண முடியாது. மயிலின் முட்டையில் இருக்கும் நீர் பல நிறங்களைத் தன்னுள் நுண்ணியதாய் ஒடுக்கிக் கொண்டு, தான் விளக்கம் பெற்று நிற்பது போல் இறைவனும் பல்வேறு தன்மையுடையதாய் இருந்தாலும் உடலினுள்

சூக்குமமாய் இருப்பார் என்பதை உபநிடதத்தில் உள்ள பாடல் மூலம் குறிப்பிட்டுள்ளார். மேலும் பல பாடல்களில் உவமைகள் அமைந்துள்ளன. அவை,

வீறான அண்டவுச்சி முளைக்கப் பாலே
வெற்றியுடன் நரம்பதுதான் விழுதுபோல்
நேராக இருகண்ணிற் பின்னலாகி
நிச்சயமா யொளிவாகி நிறைந்தார் பாரே (1)

வீணாகத் திரிந்து மிகப்பித்தர் போலே
வேரோடே கெட்டுழல்வான் விருதாமாடு
கோணாமல் அண்ணாக்கத்தின் நேரே மைந்தா
குறிப்பறிந்து பார்த்தவர்க்கே முத்தி தானே (7)

வீணல்லோ இருட்டறையிற் பொருளைக் காண
விளக்கதனை மறந்தவன் கைவிடுதல் போலும்
வீணல்லோ தியானதா ரணைக ளெல்லாம்
மெய்பிரகா சிக்கும் வரை வேணுந் தானே (94)

வேணுமென்றா லெள்ளுக்குள் எண்ணெய் போலும் ...
வித்தினிடத் தடங்கி விருட்சம் போலும்

காணுகின்ற பூவிலுறை வாசம் போலும்
கன்றாவின் பாலிலுள்ள நெய்யைப் போலும்
தோணுமயில் முட்டையின் மேல் வன்னம் போலும்
தூலமதிற் சூட்சுமந்தான் துலங்கி நிற்கும் (95)

இரையென்றால் வாய்திறந்து பட்சி போல்
எல்லோருமப்படியே இரந்திட்டார்கள் (128)

கோடியிலே உன்னப்போல ரிடியோ காணேன்
உள்ளாக ரிடியொருவரில்லா விட்டால் (129)

சமயமதி லக்கினிபோல் தம்பங் காணும்
சிவந்த வண்ணம் நீலவுருச் சுடர்விட்டேகும்

சிவசிவா அக்கினிபோல் கொழுந்து வீசும்
நவந்து அதனருகே நான்சென்று நிற்பேன் (132)

ஆலைப்போற் சுழன்றாடுங் கம்பத்துள்ளே
அரகரா சக்கரங்க ளாறுங் காணும்
வாலைப்போற் காணுமையா பின்னே பார்த்தால்
மகத்தான அண்டமதிற் சிவந்தான் வீசும் (137)

நேத்திரத்தைக் காகம் போல் நிச்சய மாம் நிற்க
ஆத்துமத்தி லானந்த மாம். (154)

என்னும் பாடல்களிலும் உவமைகள் பயின்று வந்துள்ளன.

## சொல்லாட்சிகள்

உபநிடதப் பகுதியில் ஆங்காங்கே பல பாடல்கள் பாமரர் வழக்காகவே அமைந்துள்ளன. பேச்சு வழக்குச் சொற்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. எதுகை, மோனை கருதி அமைக்கப் பெற்ற சொற்கள் பல பொருள் நிரம்பாதவையாக உள்ளன. வழக்குச் சொற்களான பாரப்பா, கேளப்பா, பாரடா, போமடா, தண்டுமுண்டு, பரியாசம், ரோசமற்று, வெகுபேர்கள், சமுசாரம், என்னவே, எட்டுவிசை என்னும் சொல்லாட்சிகள் பல இடங்களில் பயின்று வந்துள்ளன.

## பழமொழி

பண்ணிபன்றி பலகுட்டி போட்டாலென்ன
பதியானைக் குட்டியொரு குட்டியாமோ?

என்னும் பாடலில் காகபுசுண்டர், தமது காவியத்தின் பெருமையைத் தானே போற்றி குறிப்பிடும் போது, பல்வேறு காவியத்தைப் பன்றிக்கும் தமது காவியத்தை யானைக் கன்றிற்கும் உவமித்துப் பாடியுள்ளார்.

**அளபெடை**

செய்யுளில் அளபெடை அமைந்து வருவது ‘‘அளபெடைத் தொடை’’ எனப்படும்.

உரையென்றீர் எந்த மக்குப்புத்தி போச்சு (128)

என்னும் பாடலில் அளபெடை இடம்பெற்றுள்ளது.

**புராணச்செய்தி**

இவர் பாடல்களில் புராணச் செய்திகள் அதிகமாகக் காணப்படுகின்றன.

மங்கையிடப் பாகம் வைத்த மகுடத்தோனே (116)
கங்கைதனைப் பூண்டோனே (116)

பரமான பரமகயிலாச வாசா
பார்த்திருப்போ மாலிலைமேற் பள்ளியாகி (120)

அயன்மாலும் சிவன் மூவரடக்க மெங்க (127)

என்னும் பாடல்களில் புராணச் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## சட்டைமுனி

சட்டைமுனி பாடல்களில் எதுகை, மோனை, எளிய நடையின் அமைந்த சொற்கள், உவமை, பேச்சு மொழிச் சொற்கள் ஆகியவை காணப்படுகின்றன.

**நடை**

சட்டைமுனி முன்ஞானம், பின்ஞானம் என்னும் பாடலில் 204 பாடல்கள். அதில் பூசைமுறை, மெய்ஞ்ஞானகுரு, சதுரகிரி சிறப்பு,

கொங்கணவர் மகத்துவம், சாங்கத்தார், ரிஷிகள் பலகோடி, ஞானநிலை, இறைவன் நிலை தலைப்பில் பாடல்கள் அமைந்துள்ளன. எளிய நடையில் பாடல்கள் உள்ளன. உலகம் பகைமைப்பட்டுப் போனதற்கு பொய்யே காரணம்; மௌனத்தில் சித்தி காண வேண்டும்; மௌனத்தில் தீட்சை கொண்டால் மனம் அடங்கும். மனம் என்னும் மாடு அடங்கில் சினம் என்னும் பாம்பிருந்தால் அங்கே சிவம் தோன்றும். சித்தமெல்லாம் சிவமயமாயிருந்தால் சித்தி பெறமுடியும் என்று குறிப்பிட்டுள்ளார். சட்டைமுனி சித்தர் பாடல்கள் எண்சீர் கழி நெடிலடி கொண்டுள்ளன. கட்டளை கலிப்பா என்னும் அமைப்பில் பாடல் அமைந்துள்ளன. இது பிற்காலத்தில் தோன்றியனவாகும்.

### எதுகை

பாடல்கள் முழுவதும், எதுகை பயின்று வந்துள்ளன. அவற்றுள் சில:

தானென்ற மேருவைத்தான், தேனென்ற, வானென்ற, கோனென்ற (2)
கூறியதோர், மாறியதோர், தேறியதோர், ஆறியதோர் (3)
பண்ணிய, வண்ணிய, கண்ணிய, உண்ணிய (4)

### மோனை

தீக்குள்ளே, தீக்குள்ளே, தீக்குள்ளே, தீக்குள்ளே (22)
சமயமெலாம், சமயமெல்லாம், சமயமெல்லாம், சமயமெல்லாம் (25)
பாம்பையல்லோ, பாம்பையல்லோ, பாம்பையல்லோ, பாம்பையல்லோ (37)
மகாரமல்லோ, மகாரமல்லோ, மகாரமென்ன, மகாரமென்ன (40)
மௌனவித்தை, மௌனவித்தை, மௌனவித்தை, மௌனவித்தை (41)
எழும்பாமல், எழும்பாமல், எழும்பாமல், எழும்பாமல் (57)
அறிந்து கொள்ளு, அறிந்து கொள்ளு, அறிந்து கொள்ளு, அறிந்து கொள்ளு (73)
அறிந்து கொள், அறிந்து கொள், அறிந்து கொள், அறிந்து கொள் (79)

மேலும் 98, 99, 100, 103, பின்ஞானம் 1, 2, 10, 11, 13, 15, 23, 26, 30, 39, 86, 90, 94 ஆகிய பாடல்களிலும் மோனை அமைந்துள்ளன.

## முரண்

| | |
|---|---|
| பகலிரவு | (11) |
| நல்வினைக்கும், தீவினைக்கும் | (82) |
| பாவமென்ன, புண்ணியமென்ன | (83) |
| பாவம், புண்ணியம் | (83) |
| பிறப்பு இறப்பு | (91) |
| இருளாமோ வெளியாமோ | (பி.ஞா.102) |
| வானென்ற பூமியிதே | (பிஞா.3) |
| வளர்பிறையோ தேய்பிறையோ | (பி.ஞா.32) |
| நல்வினையும், தீவினையும் | (பி.ஞா.90) |

என்னும் பாடல்களில் முரண்தொடை அமைந்துள்ளன.

## அடி முரண்

பாடல் முழுவதும் அடி முரண் காணப்படுகின்றன. அவற்றுள் சில:

காணப்பா, பூணப்பா, நாளப்பா, ஓதப்பா (1)
தானென்ற, தேனென்ற, வானென்ற, கோனென்ற(2)
காட்டுவான், கிரியுன்னை, மேலேயேற்றிக்
கைவிட்டால் கிரியைத்தான் கீழே தள்ளுவான்
மூட்டுவாள் குளிகைவிட்டால், கணத்துக்குள்ளே
மூதண்ட புவிகடந்து தெளிவுங் காணும்
ஆட்டுவாள் அண்டரண்ட மாலை பூண்டாள்
ஆதிவத்து அனாதிவத்து இரண்டு மொன்ற
ஊட்டுவாள் நிர்க்குணத்தி னமுத வல்லி
உயர்ந்து நின்ற ஞானசக்தி யுறவு தானே (12)

## அந்தாதி

பாடல் முழுவதும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. சில பாடல்கள்:

காணப்பா ..............................

........................... சித்தர் தாமே (1)

தானென்ற..............................

........................... கூறினானே (2)

கூறியதோர் ...........................

............................. பண்ணே

(3)

பண்ணிய ............................

............................. காணே (4)

**உவமை**

இறைக்கவல்லோ ஊறினதோர் கேணி யைப்போல்
எடுக்கெடுக்க வெழும்பும் வாசனைத்தான் காணே (56)
விழுது கொண்ட ஆலைப்போல் நெட்டிட்டேறி
வெளிகடந்தே ஆறுகலங் கண்டு வாரேன் (59)
அள்ளுகிற கனிபோலே யமிழ்தம் வீழும்
அப்பொழுது காயசித்தி யறிந்து கொள்ளே (70)
போற்றுவே னென்றாலும் பொல்லாக் காமம்
பொறிவிட்ட நெய்போலப் பொங்கும் பாரே (86)
தோணப்பா ஞானமென்ன கண்டிப்பில்லைச்
சர்க்கோடி யொளிபோலத் தோன்றுந் தானே (பி.ஞா.5)

மேலும் பின்ஞானம் தலைப்பில் அமைந்த 20, 26, 59, 69, 70, 71, 79, 95, 98, 100 போன்ற பாடல்களிலும் உவமைகள் அமைந்துள்ளன.

## பேச்சு மொழி

காணப்பா, பூணப்பா, நாளப்பா, ஓதப்பா (1), பாரப்பா, நேரப்பா, சேரப்பா, ஆரப்பா, நீச்சப்பா, மூச்சப்பா, போச்சப்பா, ஆச்சப்பா, ஓச்சப்பா, ஆமப்பா, தாமப்பா, ஓமப்பா, காமப்பா (28), நாதமப்பா, வேதமப்பா, போதமப்பா, காதமப்பா மேலும் சில பாடல்களில் பேச்சு மொழிச் சொற்கள் அமைந்துள்ளன.

**புராணச் செய்தி**

ஆடினதோர் கூத்தெல்லாம் ஆத்தாள் மெச்சி (37)

இறைவன் கூத்தாடுவதைப் பராசக்தி பாராட்டினாள் என்னும் செய்தியும்,

வாறான குருவினுடை வாழ்க்கை கேளு
மகத்தான சடையின்மேல் மதியுஞ் சூட்டி (76)

என்று சிவனை வர்ணிக்கும் செய்தியும் புராணச் செய்தியாகக் காணப்படுகின்றன.

**சுப்பிரமணியர்**

இவருடைய பாடல்கள் அந்தாதி அமைப்பு, எதுகை, மோனை, முரண், அணி, புராணச் செய்தி ஆகியவை பயின்று வந்துள்ளன. அவை பின்வருமாறு

**அந்தாதி**

அந்தாதித் தொடையில் பாடல்கள் அமைந்துள்ளன.

ஆதியிலே பராபரத்திற் பிறந்த சந்தம்
அருவுருவாய் நின்றபர சிவமுமாகிச்
சோதியென்ற சிவனிடமாய்ச் சத்தி யாகித்
தொல்லுலகில் எழுவகையாந் தோற்றமாகி

................................................ உண்டாச்சே
உண்டான ...................................................

................................................ சென்றானே
சென்ற ......................................................

........................................... வாவென்றாரே
வாவென்று .................... இருந்து வாழே
இருந்து ................................ வாழே

சுப்பிரமணியரின் 32 பாடல்களும் அந்தாதியில் அமைந்துள்ளன.

**எதுகை**

ஆதியிலே, சோதியிலே, நீதியென்ற, சாதியென்ற(1)
உண்டான, குண்டான (2-2)
வாவென்று, ஆவென்று, கூவென்று, பூவென்று (4)
இருந்து, அருந்த, வருந்தியே, திருந்தியே (5)
வாழென்று, ஆவென்று, சூழென்றே (6)

மேலும் 7 இல் இருந்து 32 பாடல்களிலும் எதுகை அமைந்துள்ளன.

## பொழிப்பு மோனை

செய்யுளில் ஏதாவது ஓரடியில் முதற்சீரும், மூன்றாம் சீரும் ஒன்றி வருவது பொழிப்புமோனை.

உண்டான சக்திசிவம் ஏகமாகி
உளங்கனிந்து பூரணமாய் நிற்கும்போது
குண்டான மாங்கனியைக் கையில் வாங்கி
குமரனுடன் கணபதியைக் குணமாய்ப் பார்த்து
நன்றாகக் கிரிவலமாம் வந்த பேர்க்கு
நல்லகனி தானீவோம் என்று சொன்னார் (சுப்பி.ஞா.பா.2)

என்னும் பாடலில் பொழிப்பு மோனை அமைந்துள்ளது. மேலும் (3–2), (5–2), (6–2), (7–2), (8–2), (9–1, 2, 3), (10–2, 3), (11–1, 4), (12), (13–2) போன்று இன்னும் பல பாடல்களில் இம்மோனை பயின்று வந்துள்ளன.

**முரண்**

சக்தி சிவம் (1, 2)
சிவனுமையாள் (3-2, 3)
சிவசக்தி (6)

### அடிமுரண்

உண்டான, குண்டான, நன்றாக, பன்றான (2)
இருந்துவா, அருந்தவமாய், வருந்தியே, திருந்தியே (3)
நிலைக்காண், கலைகொண்டு, தலைகொண்டு, சிலைகொண்டு (10)
ஆமப்பா, தாமப்பா, ஆமப்பா, ஓமப்பா (18)
நில்லப்பா, கல்லப்பா, உள்ளப்பா, சொல்லப்பா (24)
சுருக்கமுடன், உருக்கமுடன், பெருக்கமுடன் (25)

ஆகியவற்றில் முரண் அமைந்துள்ளன. மேலும் 26, 28, 30, 31 என்னும் பாடலிலும் அடிமுரண் பயின்று வந்துள்ளன.

### பேச்சு மொழி

ஆமப்பா, தாமப்பா, ஓமப்பா, பாரப்பா, நேரப்பா,
காரப்பா, சாரப்பா, கொள்ளப்பா, சொல்லப்பா,
வில்லப்பா, உள்ளப்பா, செய்யப்பா, பொய்யப்பா,
பையப்பா, மெய்யப்பா, நில்லப்பா

என்னும் பேச்சுமொழி சொல்லாட்சி பயின்று வந்துள்ளன.

### உவமை

பரிதிமதி சுடரொளிபோல் பஞ்சகர்த்தாள்
பதியறிந்து பிராணாயம் பதிவாய்ச்செய்து (29)

என்னும் பாடலில் தியானம் செய்வதன் மூலமாக அனைத்தும் அறிந்து உனக்குள் ஒரு உன்னதமான ஒளியைப் பெறமுடியும் என்பதை உணர்த்தும் விதமாக பாடல் அமைந்துள்ளது.

### புராணச் செய்தி

குண்டான மாங்கனியைக் கையில் வாங்கிக்
குமரனுடன் கணபதியை ...................... (2)

சிவனுமையாள் (3)

சண்முகமாய் நின்ற வடிவேலன் தானும் (12, 13)

என்னும் பாடல்களில் புராணச் செய்தி காணப்படுகின்றன.

## காரைச்சித்தர்

கனகவைப்பு என்னும் தலைப்பினைக் கொண்டு இருபத்தெட்டுப் பாடல்கள் உள்ளன. அவர் எளியநடையில் பாடல்கள் அமைத்து அனைவருக்கும் புரியும் விதத்தில் கருத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார். மனித சக்தி மாளாத பெரியசக்தி என்றும், ஒரு கணம் உணர்வால் அதனை எளிதில் அடையலாம் என்றும்; மின்னல் போலும் பராசக்தி உள்ளேயே காணும் மார்க்கம் மீளாது, என்றும் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். இவை மட்டுமின்றி எதுகை, மோனை, முரண், அடுக்குத் தொடர், பிறமொழிச் சொற்கள் ஆகியவையும் வந்துள்ளன.

### எதுகை

மாளாத சக்தியடா மனிதன் சக்தி
மலிவாகக் கிடக்குதடா கணத்துக் குள்ளே
மீளாத மார்க்கமடா மின்னாத்தாளை
மேவியுனக் குட்காணும் வேதை மார்க்கம்
ஆளாக வென்றேனு மெப்போ தேனும்
அனைவருக்கும் கிட்டுமடா ஞானப்பேறு
தூளாகக் காமத்தைத் துரத்திவிட்டே
துணையாகக் கம்பத்தே தூங்குவாயே (காரை.சி.பா.1)

என்னும் பாடலில், மாளாத, மீளாத, ஆளாக, தூளாக என்னும் அடியில் எதுகை பயின்று வந்துள்ளன. மேலும் சில சான்றுகள் :

தூங்குவாய், நீங்காமல், ஆங்கார, பாங்காக (2)

சித்தர்மனம், துத்தியெனும், வித்திதெனும், துத்தமற (4)

பயனில்லா, நயனில்லா, அயனில்லா, இவையெல்லா (5)
சித்தரெலாம், சித்தர்மொழி, சித்தமுறும், சித்த நிறை (6)
தேவாரம், போவாரை, கோவாரம், பூபாரம் (7)
சிந்தித்தால், சந்தித்தால், வந்தித்தால், நிந்தித்தால் (9)
வருந்தித்தான், அருந்தித்தான், துருந்தித்தான், பொருந்தித்தான் (10)
இல்லறமே, தொல்லறமே, சொல்லறமே, கல்லறமே (12)

13 முதல் 28 வரையுள்ள பாடல்களிலும் எதுகை பயின்று வந்துள்ளன.

## மோனை

பொழிப்பு மோனையில் அமைந்ததாக பாடல் பயின்று வந்துள்ளன.

தூங்குவாய்ச் சாமேத்தே விழித்துக் கொள்ளு
தூங்காமல் தூங்கி வெறுந் தூக்கம் தள்ளு (2-1)
தர்ப்பையிலே சிவப்பான தழலைப் போல்வாள்
தனக்குள்ளே சர்ப்பந்தான் சரண்புக்காடும் (3-2)
அர்ப்பையடா, அனைத்தையுமே, கர்ப்பையிலே, கணவாதம் (3)
பயனில்லா, பயனதை, நயனில்லா, நாட்டமெலா, அயனில்லா,
அத்துவித, இவையெல்ல, இடர்நீக்கி (5)
போவாரை, போக்கற்றார், கோவாரம், கோலமுறச், பூபாரம் புகன்றிட்டே
(7)
வருந்தித்தான், வருந்துவதாற், அருந்தித்தான், அமுதப்பால் (10)
இல்லறமே, இன்பமென, தொல்லறமே, துறந்திட்டால்,
சொல்லறமே, சொர்ணமய, கல்லறமே, கமலத்தை (12)
காலநெறி, காணவரு, பாலமடா, பகனவெடி,
சீலமுறும், சீச்சீச்சி, கோலமுறு, கூறுமா (15)

மேலும் 16, 17, 18, 19, 22, 23, 24, 25, 26, 27, 28 போன்ற பாடல்களிலும் பொழிப்பு மோனை அமைந்துள்ளன.

### முரண்

| | |
|---|---|
| தூங்குவாய், தூங்காமல் | (2) |
| போவரைப் போகாரை | (7) |
| இல்லறம், துறவறமே | (12) |
| வெப்பம், தட்பம் | (21) |
| விஞ்ஞானத்தான், மெய்ஞ்ஞானந்தான் | (22) |
| வேரறியா, வேரறிந்தே, இருமையெலா, ஒருமையுறல் | (22) |
| நீர்மேல நெருப்பை | (24) |

### அடிமுரண்

அடிதோறும் முதற்சீர் முரணாக அமைவது அடிமுரண் எனப்படும்.

தூங்குவாய்ச் சாமத்தே விழித்துக் கொள்ளு
தூங்காமல் தூங்கிவெறுந் தூக்கம் தள்ளு (2)
வெத்தறிவாம் கனியறியான் மேற்றோ லுண்பான்
விஞ்ஞானி யவனறிவைப் பழிக்க வில்லை
சித்தறிவான் சத்தறிவான் சித்தன் சித்தன்
சித்தத் திலே சிட்டிச் சித்தங்க காண்பான் (19)

என்னும் பாடல்களில் அடிமுரண் பயின்று வந்துள்ளன.

## இயைபுத் தொடை

செய்யுளில் அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், சொல்லானும் ஒன்றி வரத் தொடுப்பது இயைபுத் தொடையாம்.

பெற்றவர்கள் தங்கடனைத் தீர்க்க வேண்டும்
உற்றவர்கள் உறுகதியைப் பார்க்க வேண்டும்
பற்றுவர வத்தனையு முடிக்க வேண்டும்,
பற்றில்லாப் பாமரரைக் காக்க வேண்டும்
செற்புலன் பொறியடக்கிச் சேர வேண்டும்
சித்தமுறச் சிவபூஜை செய்யத்தானே (13)

பாடலின் இறுதி அடியில் வேண்டும் என்னும் சொல் ஒன்றாக வந்துள்ளதால் இயைபுத் தொடையாகும்.

### பிறமொழிச் சொற்கள்

ஆகர்ஷண (19), ஷேத்திரமும், புஷ்கரணி (26), க்ஷீரம் (25) என்னும் சொற்கள் பயின்று வந்துள்ளன.

## தடங்கண் சித்தர்

தடங்கண் சித்தர் பாடல்கள் எளிய நடையில் அனைவரும் எளிதில் படித்துப் புரிந்துகொள்ளும் விதமாக அமைந்திருக்கின்றன. இவர் பாடல்கள் முழுவதும் சமயத்தை வெறுத்துப் பாடும் விதமாக அமைந்துள்ளன.

### எதுகை

அருவருப்பூட்டும் ஐந்தலை, நாற்கை ஆனைபோல்
வயிறு முன் துருத்தும்
உருவினை இறைவன் எனப்பெயர் கூறி
உருள் பெருந்தேரினில் அமர்த்தி
இருபது நூறு மூடர்கள் கூடி
இழுப்பதும் தரைவிழுந் தெழலும்
தெருவெலாம் நிகழும் அது கொலோ சமயம்
தீங்குகண் டுழலுமென் நெஞ்சே (2)

மேலும்,

எண்ணெயால், திண்ணிய, கண்ணினை, எண்ணிலா (3)
நீட்டிய, கூட்டமாய், ஆட்டினை, காட்டில் (5)
உடுக்கையை, எடுத்ததோர், நடுக்கொடும், கொடுத்த நீறு (6)
தாய்மொழி, தூய்நல் அன்பால், போய்மலை, ஏய்ந்த (8)
அன்பிலார், வன்பினால், முன் தொழுகையர், நன்றுகொல் (10)
மெய்யுணர்வு, பொய்மிகு, செய்கையால், உய்வரோ (11)

என்னும் பாடல்களில் எதுகை அமைந்துள்ளன.

## மோனை

கூழை. மோனை **1–1, 2, 3**

அதிவெடி முழக்கி முரசுகள் முடுக்கி
அலறிடும் உடுக்கைகள் துடிப்ப (1-1)

குதிகுதி என்று தெருவெலாம் குதிப்பார்
குனிந்து வீழ்ந்து உருகுவர் மாக்கள்

இணை. மோனை **1, 2**

| | |
|---|---|
| உருவினை, உருள்பெரும் | (2-2) |
| இருபது, இழுப்பதும் | (2-3) |
| கண்ணினை, கருமனம் | (3-3) |
| அழகிய, அருவருப்பு | (4-1) |
| மழலையர், மலையின் | (4-3) |
| ஆட்டினை, ஆங்கதன் | (5-3) |
| அன்பிலார், அகத்திலார் | (10-1) |
| வன்பினால், வகைபெற | (10-2) |
| முன்தொழுகையர், முழுகுவார் | (10-3) |
| நன்றுகொல், நடலையர் | (10-4) |
| மெய்யுணர்வு, மெய்ம்மைகள் | (11-1) |
| செய்கையால், செய் பொருள் | (11-3) |
| உய்வரோ, உணர்விலார் | (11-4) |

பொழிப்பு மோனை

இதுகொலோ சமயம் இதுகொலா சமயம்

சில பாடல்களில் பொழிப்பு மோனை அமைந்துள்ளது. பொழிப்பு மோனை என்பது பாடலில் ஏதாவது ஓரடியில் முதற்சீரும், மூன்றாம் சீரும் ஒன்றி வரல் **(1–3).** இது,

**முரண்**

எண்ணெயால் நீரால் பிசுபிசுக் கேறி (3)
பாலொடு தயிர் (9)

முரணாக அமைந்துள்ளது.

## சூரியானந்தர்

சூரியானந்தர் சூத்திரம் பதின்மூன்று பாடல்களைக் கொண்டமைந்துள்ளன. யோகம் எல்லாம் அடக்கிச் சொல்கிறார். சிவனாகிய தட்சிணாமூர்த்தி உமைக்குச் சொல்ல அவள் தனக்குச் சொன்னாள் என்கிறார். இவருடைய பாடல்கள் எதுகை, மோனை, அந்தாதி, புராணச் செய்தி ஆகியவற்றைக் கொண்டமைந்திருக்கின்றன.

**எதுகை**

சீர்கொண்ட, பேர்கொண்ட, நீர்கொண்ட, ஆர்கொண்ட (1)
அறைந்திட்ட, மறைந்திட்ட, கறைந்திட்ட, இறைந்திட்ட (2)
இருக்கின்ற, பெருக்கின்ற, கருக்கொண்ட, உருக்கொண்ட (3)
தானாக, வானாக, ஊனாக, கோனாக (4)
கொள்ளுவார், விள்ளுவார், விள்ளுவார், தள்ளுவார் (5)
ஆச்சப்பா, மூச்சப்பா, ஏச்சப்பா, பேச்சப்பா (6)
ஒண்ணான, கண்ணாகு, வண்ணானை, பெண்ணாடன் (8)
பெருமையென்ற, அருமையென்ற, புருவமை, தருமவித்தை (9)
நில்லாத, கொல்லாத, சொல்லாத, எல்லாரும் (10)
உப்பான, அப்பான, செப்பாத, தப்பாமல் (11)

என்னும் பாடல்களில் எதுகை அமைந்துள்ளன.

**பொழிப்பு மோனை**

ஆர்கொண்ட வேணியனா, ருமைக்குச்சொன்னார்
ஆத்தாள மடியேனுக் கறைந்திட்டாளே (1-4)

மறைந்திட்ட, மண்ணான (2-2)

கறைந்திட்ட, காணாமல் (2-3)

இறைந்திட்ட, இந்தவிரண்டோர் (2-4)

இருக்கின்ற, இந்துவொன்று (3-2)

கருக்கொண்ட, கருதையிலே (3-3)

உருக்கொண்ட, உற்றுப்பார் (3-4)

ஆச்சப்பா, ஆதியுப்பு, மூச்சப்பா, மூலகுரு, ஏச்சப்பா, ஏற்றிவிட்டால் (6)

பாஷையினாற், பாலனுக்கு (7-3)

கண்ணாகு கருவையொரு (8-2)

நில்லாத, நிஷ்டைமவுனம் (10-1)

**புராணச் செய்தி**

பெருமையென்ற காயசித்தி பண்ணா விட்டாற்
பேரான <u>அடியோடு</u> முடியும் போச்சு (9)

அடிமுடி என்னும் புராணச் சொல் இடம் பெற்றுள்ளது.

**அந்தாதி**

சூரியானந்தர் பாடலில் அந்தாதித் தொடை அமைந்துள்ளன.

சீர்கொண்ட ........................................
.................................. அறைந்திட்டாளே (1)

அறைந்திட்ட .......................................
.................................. இருக்கும் பாரே (2)

இருக்கின்ற .....................................
............................................ தானே (3)

தானாக ...........................................
...................................... கொள்வாயே (4)

அந்தாதித் தொடை பாடல் முழுவதும் அமைந்துள்ளன.

## மதுரை வாலைச்சாமி

இவரது தமிழ் நடை மிகவும் பிற்காலத்தது. வடசொற்கள் நிரம்பியது. இச்சொற்கள் பல இடங்களில் வந்துள்ளது. மொழிக்கு முதல் எழுத்துகளின் மரபை இவர் பல இடங்களில் பின்பற்றவில்லை. ரண்டு (8, 29) லாயம் (100), லோபன் (101), ரோசன் (103), ரசவாதம் (119), லிங்கம் (120), ரேசகம் (140) போன்ற எழுத்துக்கள் அமைந்துள்ளன. மேலும் சாதிப் பெயரைக் குறிக்கும் சொற்கள், பிற்கால வழக்குச் சொற்கள், ஊர்ப்பெயர்கள் ஆகியவை அமைந்து விளங்குகின்றன.

### பிற்காலச் சொற்கள்

இவரது நடையில் சீமை (58), கஞ்சா (136) முதலிய பிற்காலச் சொற்கள் பயின்று வந்துள்ளது. சர்தார் (96) என்ற உருதுச் சொல்லும் வந்துள்ளது.

### சாதிப் பெயர்கள்

சாதிப்பெயரைக் குறிக்கும் சொற்கள் பின்னொட்டுக்களாக வந்துள்ளன. சடையப்பிள்ளை (14), அப்புப்பிள்ளை (15), காத்தவராயக் கவுண்டர் (17) ஆகிய பெயர்கள் பின்னொடுடன் வருகின்றன. பார்ப்பான் (31), செட்டி (22), கோனான் (35) முதலிய சாதிப் பெயர்களும் வந்துள்ளன.

### ஊர்ப்பெயர்கள்

தலைமன்னார் (14), கும்பகோணம் (15), தெப்பக்குளம் (21), பாளையங்கோட்டை (24), வேளூர் (25) ஆகிய ஊர்பெயர்கள் வருகின்றன.

### சித்தர்கள்

இவர் பாடல்களில் இடம் பெற்றுள்ள சித்தர்கள் கொங்கணர் (137), திருமூலர், கும்பமுனி (138)

**யாப்பமைதி**

மதுரை வாலைச்சாமி சித்தரின் பாடல்கள் எழுசீர்கழி நெடிலடியில் அமைந்த கும்மிப்பாடல்கள் ஆகும். ஒவ்வொரு பாடலின் கண்ணியும் ஞானப் பெண்ணே என்று முடிகிறது. மிகச்சில கண்ணிகள் வேறு சொற்களால் முடிகின்றன. இதனை,

ஆதியும் அந்தமும் ஒன்றாகி - வளர்
அண்டபிண் டம்மும் இரண்டாகிச்
சாதி பலபல வேறாகி நின்று
தத்துவங் கேளடி ஞானப்பெண்ணே (5)

**அந்தாதி**

ஞானக் கும்மியில் ஆங்காங்கே அந்தாதித் தொடைகள் காணப்படுகின்றன. 49 ஆம் கண்ணியின் ஈற்றில் "கோணப் படியடி" என்று வருகின்றது. 50–ஆம் கண்ணி 'கோணத்தில் நின்று' என்று தொடங்குகிறது. இத்தகைய அந்தாதித் தொடை காணப்படும் இடங்கள்.

மாயன் அரண்மனை காணீரோ, வன்னி
..................................................................
கோணப் படியடி ஞானப்பெண்ணே (49)

கோணத்தில் நின்று மயங்காதே ............
.........................................ஞானப்பெண்ணே (50)

மேலும் அந்தாதித் தொடை 49–55, 73–78, 148–151, 168–177 போன்ற பாடல்களில் அமைந்துள்ளன,

**எதுகை**

சீர்மேவு, பார்மீதில் (1)
அம்பிகை, தும்பி முகன் (2)
நாலாம், மேலாய் (3)

ஆதியும், சாதி (5)

தேகமானதோர், யோக மெனும் (6)

எனவும், 8 முதல் 28, 30, 31, 32, 34, 35, 36, 39, 41, 43, 44, 46, 48, 49, 51, 54, 55 லிருந்து 62, 64 முதல் 69, 72 முதல் 78 முதலிய பாடல் முழுவதும் எதுகைகள் அமைந்துள்ளன.

## மோனை

நாதவிந்தல்லலோ நால்யோனி தச
நாதவிந் தல்லவோ ஏழுதோற்றம்
நாதவிந்தால் உடலும் உயிரும்பரம்
நந்தியைப் போற்றடி ஞானப்பெண்ணே! (56)

கட்டிக்கொள் விந்துவைத் தள்ளாதே சுழிக்
காற்றையடக்கிப் பெருக்காதே
கட்டி மனப்பொறா துறாதே காமச்
சோம்பலைத் தள்ளடி ஞானப்பெண்ணே (77)

என்ற பாடலிலும், (111, 125, பாடல்களிலும் மோனை அமைந்துள்ளது. பொழிப்பு மோனைகள் பாடல் முழுவதிலும் அமைந்துள்ளன. சில காட்டுகள்:

நாலாம், வேதமுமோராறும் - வெகு
நாளா பேதமாய் நின்றானை (3-1)

ஊமையன் என்றே அறிந்துகொண்டாள் அந்த
ஊமைபேச் செல்லாமே நாமென்கிறாள் (9-1)

பெண்ணர சானதி ரத்தின மாமதைப்
பெண்ணென்று சொல்லவுங் கேள்வியுண்டோ (10-1)

## முரண்

அந்தமும் ஆதியும் ஒன்றாக, அண்ட பிண்டம் போன்ற இன்னும் சில பாடல்களில் முரண் அமைந்துள்ளன.

ஆதியும் அந்தமும் (5)
அண்டமும் பிண்டமும் (5)
மண்ணையும் விண்ணையும் (10)
உடலும் உயிரும் (56)
நாடென்றும் காடென்றும் (117)

**அணிநலன் - உருவகம்**

காமத்தை அண்ணனாகவும், குரோதம், உலோபம் ஆகியவற்றைத் தம்பியராகவும் உருவகிக்கிறார் என்பதை,

காமம் எவருக்கும் மூத்தவனாம் அவன்
    கற்றிடும் வித்தைகள் மெத்த வுண்டாம்
தாமதமான குரோதனும் லோபனுந்
    தம்பியாம் கேளடி ஞானப் பெண்ணே (101)

என்னும் பாடலில் உருவகிக்கிறார். மேலும் பித்துப் பிடித்த மனதைக் குரங்கென்றும் அதற்குப் பேயும் பிடித்து விட்டால் அதை அடக்க மருந்து செய்து தந்து அடக்க வேண்டும். அப்போது தான் வாழ்வைச் செம்மையாக நடத்தலாம் என்பதை,

பித்துப் பிடித்த மனக்குரங்கு வெறிப்
    பேயும் பிடித்துக் கொண்டு ஆட்டமில்லாமல்
அத்தை யடக்க மருந்துசெய்தால் பரி
    அன்று நடத்தலாம் ஞானப்பெண்ணே (107)

என்னும் பாடலில் மனதை அடக்க வேண்டும் என்பதை மனமாகிய குரங்கு என உருவகித்துள்ளார்.

## பீரு முகம்மது

பீரு முகம்மதின் ஞானரத்தினக் குறவஞ்சி நாடகத் தமிழ் வகையைச் சேரும். இவ்வாறு சித்தர் பாடல்களில் முத்தமிழ்க்கும் உரிய பாடல்கள்

உள்ளன எனக் கொள்ளலாம். இசைத்தமிழ், நாடகத்தமிழ் வடிவங்களை இவர்கள் பயன்படுத்தினாலும், இவர்கள் நோக்கம் தத்துவத்தை உணர்த்துவதே ஆகும். குறவஞ்சி என்னும் நாடகத்தமிழ் இலக்கியம் சார்ந்த வகையில் குறத்தி ஆடிக் கொண்டும் குறி சொல்வதாகவும், அதற்கும் கணவன் குறவன் பதில் கூறுவதாகவும் இருவர் உரையாடல் போல் பாடல் அமைத்துப் பாடியுள்ளார். பேச்சு நடை இவர் பாடலில் கையாளப்பட்டுள்ளன.

### எதுகை

ஆதியாய் அந்த அரும்பொருள் ஏதடி சிங்கி
சோதியில் ஆதி சொரூபமா யெழுந்தது சிங்கா (பா.2)

முப்பொரு ளென்றுநீ முன் சொன்ன தாரடி சிங்கி - அவர்
அப்பனும் ஆயிர மாதியாம் நாமடா சிங்கா (4)

பராபரத்தினில் பஞ்சவன்னமேது சிங்கி - அது
வேராகி தூரான விந்து நிறமடா சிங்கா (6)

மேலும் எதுகைகள் 8, 11, 13, 14, 15, 16, 19, 24, 25, 26, 27, 29, 30–39, 41, 43, 56, 59, 62 என்னும் பாடல்களில் அமைந்துள்ளன.

### மோனை

ஒன்றுக்குள் ஐவர்கள் உண்டான தெப்படி சிங்கி - அது
ஒன்றோட ஒன்றாக ஓடி இணைந்தது சிங்கா (7)

முன்னே முளையாய் முளைத்திடம் எவ்விடம் சிங்கி - அது
முளை முனையிரு கண்ணிக ளல்லவோ சிங்கா (11)

இந்த உடலுக்கு வேரென்ன தூரென்ன சிங்கி - அது
இந்த உடலுக்கு உயிராதி மூலமே சிங்கா (13)

எந்த வழியினால் வந்தோ முலகினில் சிங்கி - அது
எல்லாம் முடிந்த பொருள்வழி யாமடா சிங்கா (18)

மேலும் 18, 19, 25, 26, 28, 32, 39, 47, 49, 55, 56, 63 முதலிய பாடல்களிலும் அமைந்துள்ளன.

### முரண்

பெண்ணானுமாகப் பிறந்த தலமடா சிங்கா (12)

ஒன்றாம் இரவும்பகலும் உதிப்பிடம் சிங்கா (47)

இரவு, பகல் என்னும் முரண் அமைந்த பாடல்கள் **48, 49, 50, 51, 52, 53, 54** என்னும் எண் அமைந்த பாடல்களில் அமைந்துள்ளன.

இடைகலை, பிங்கலை (56)

சந்திரன் சூரியன் (57)

சந்திரன் சூரியன் ஒன்றான (58)

முதலிய பாடல்களிலும் முரண் அமைந்திருக்கின்றன.

### பேச்சு நடை

பீருமுகம்மது பாடல்களில் பேச்சு நடையில் பாடல்கள் அமைந்துள்ளன. அடா, அடி என்றும், சொரூபம் என்பது சொரூப் எனவும், கொப்பூழ் என்பது தொப்பூழ் என்றும் வடிவம் பெற்றுள்ளன. ஆடுது **(59)** போன்ற மரூஉ வழக்குகளும் அமைந்திருக்கின்றன.

### யாப்பமைதி

காப்புச் செய்யுள் மட்டும், தரவு கொச்சகக் கலிப்பாவாக உள்ளது. இப்பாடல்களின் இசையமைப்பு மும்மை நடையில் அமைந்துள்ளன

## தொகுப்புரை

இலக்கிய நோக்கு என்னும் மூன்றாம் இயலில் இருந்து பெறப்பட்ட முடிவுகள் :

1. இலக்கிய நோக்கில் சித்தர் பாடல்களில் அமைந்துள்ள பாடலின் இயல்புகள், நடையமைப்பு ஆகியவை ஆராயப்பட்டுள்ளன.
2. பாடல்களில் அமைந்த யாப்பு, எதுகை, மோனை, முரண், உவமை, உருவகம், சொல்லாட்சிகள், பழமொழி, புராணச் செய்திகள், அந்தாதி ஆகியவை இலக்கிய நோக்கில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. **தொல்காப்பியம் தொல்காப்பிய செய்யுளியல்** நூற்.239.
2. சொ. பரமசிவம், **நற்றமிழ் இலக்கணம்**, ப.535.
3. மேற்படி, ப.535.
4. மேற்படி, ப.536.
5. மேற்படி, ப.537.
6. மேற்படி.
7. மேற்படி, ப.538.
8. மேற்படி, ப.546.
9. மேற்படி, ப.547.
10. மேற்படி, ப.546.
11. நன்னூல் (சூத். 395).
12. ஞா. மாணிக்கவாசகன், **தொல்காப்பியம் மூலமும் விளக்க உரையும்**, நூ.1193 ப.482.
13. சொ. பரமசிவம், **நற்றமிழ் இலக்கணம்**, ப.639.
14. மேற்படி, ப.617.
15. ஞா. மாணிக்கவாசகன், **தொல்காப்பியம் மூலமும் விளக்க உரையும்**, நூ.1218 ப.495.
16. சொ. பரமசிவம், **நற்றமிழ் இலக்கணம்**, ப.618.
17. மேற்படி, ப.627.
18. மேற்படி, ப.640.
19. மேற்படி, ப.616.
20. மேற்படி, ப.616.
21. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.177.

*இயல் - நான்கு*

# சமய நோக்கு மற்றும் சித்தர்களின் கடவுள் கோட்பாடுகள்

## முன்னுரை

மக்களிடம் இருக்கும் அறியாமை போக்கி மூட நம்பிக்கைகளைக் களைந்து, சித்தத்தை வென்றவர்களாக வாழ வழிகாட்டியவர்கள் சித்தர்கள். மேலும் குருட்டு நம்பிக்கைகள், வறட்டு சடங்குகள் ஆகியவற்றின் ஆதிக்கத்தில் புதைந்த பழைய உன்னதமான ஆன்மிக இலக்குகளை மீட்பது அவர்களின் கடமையாக இருந்தது. சித்தர் பாடல்கள் மூலம் அறியலாகும் சமய நோக்கு, உயிர், உருவ வழிபாடு, மூடநம்பிக்கை, நாடி இதன் அடிப்படையில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

## உயிர்

பதி, பசு, பாசம் எனப்படும் மூன்றனுள் நடுவனாக வைத்துச் சுட்டப்படுவதே உயிராகும். இவ்வுயிரே பாசங்களால் கட்டுற்ற நிலையில் உள்ள போது ''பசு'' என்ற சொல்லால் குறிக்கப்படுவர். சித்தாந்தச் சாத்திரங்கள் உயிரைச் சீவன், புருடன், ஆவி, சிற்றுயிர், உள்ளம், ஆன்மா, சதசத்து என அதன் வெவ்வேறு இயல்புகளை வெவ்வேறு பெயர்களால் பல இடங்களிலும் கூறுகின்றன.

## வாயு

மனித உடலில் பத்துவிதமான வாயுக்கள் இயங்குவதாக சித்தர்கள் கூறுகின்றனர்.

முறையாம் பிராணனபானன் வியானன்
　　மூர்க்கமா முதனானொடு சமானன்நாகன்
திறமையாங் வர்மமொனடு கிருகரன்றான்
　　தேவதத்த னோடுதனஞ் சயனுமாம்
பிறமையா மதின்பிரிவு பிராணவாயு
　　பெருமூலா தாரத்திற் றோன்றித்தானே
உறமையா மகவையானும் மந்திரத்தால்
　　ஓங்கார முதலெழுத்தை யுன்னித்தானே [1]

– யூகி முனி தத்துவ ஞானம் – 44

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்பவை உடலுள் இயங்கும் பத்து வாயுக்களின் பெயர்களாம். இவற்றில் பிராணவாயு மூலாதாரத்தில் தோன்றி, அகவையெனும் மந்திரத்தால் ஓம்காரம் பிரணவத்தின் முதலெழுத்தாகிய அகாரத்தைப் பிடித்துக் கொள்ளும்.

## வழிபாடு

விழிப்பு நிலையில் உணர்வடையாத மூளை நரம்புகள் மனத்தை ஒருமுகப்படுத்தும் போது புது மலர்ச்சியுற்று வலுவடைந்து கிளர்ச்சி ஊட்டப்பட்டு உள்ளுணர்வுகள் மாந்தன் எதிர் நோக்கம் உயர்வுகளை எய்துகின்றன. தான் எனும் எண்ணம் அற்று, தன்னை மறந்து எங்கும் பரந்துள்ள தன்னிலும் நிலை பெற்ற கடவுளை மனக்கண்ணால் கண்டு தொழுதலே வழிபாடு, பூசை ஆகும்.

எல்லா வழிபாடும் பருப்பொருள் சார்ந்தோ, இயற்கையைச் சார்ந்தோ அறநெறிப் பண்பைச் சார்ந்தோ ஆண்டவனை எண்ணி எண்ணி களி கூறும் முறையிலே தாம் இருக்கும். தனித்தொழுகையும் பொது வழிபாடும் அனைத்தும் தன்னலம், உலகநலம் இரண்டும் அடங்கியே இருக்கும்.

உள்ளுணர்வு நிலையில் சேமித்து வைக்கப்பட்டிருக்கும். வீரியத்தை வெளிப்படுத்துவதே வழிபாடு, வழிபாட்டின் ஆர்வத்தால், கிளர்ச்சியால் நன்மையும், உண்மையையும் அடைவதே குறிக்கோள்.

## வழிபாட்டில் எல்லை

சமயத்திற்கு நில எல்லைகள் இல்லை. வழிபாட்டிற்கும் எல்லை இல்லை, வழி முறைகள் உண்டு. வழிபாடு அனைத்தும் வாழ்க்கையைப் பற்றியது. வழிபாடு செய்தால் அனைத்து நன்மைகளையும் பெறலாம்.

வழிபாடு இறைவனைக் காணும் நிலையாகும். வழிபாடு செய்வதால் இறைவனுடன் ஒன்றும் நிலை ஏற்படுவதால் தொண்டு மனப்பான்மை தொடங்குகிறது.

## வழிபாட்டில் சித்தர்களின் கருத்து

சித்தர்கள் ஓரிறைக் கோட்பாட்டை போற்றியே பாடலை இயற்றியுள்ளனர். வழிபாட்டில் புறப்பூசையை விட்டு அகப்பூசையை முன் நிறுத்தி, விக்கிரக, உருவ வழிபாட்டைச் சித்தர்கள் பலர் எதிர்த்தே பாடல்களைப் பாடியுள்ளனர்.

## மூட நம்பிக்கை

“அறிவில்லாத நம்பிக்கை, அறிவில்லாத விருப்பம், அறிவில்லாததை ஏற்றுக்கொள்ளுதல் இவை மூட நம்பிக்கையாகும். எந்த ஒரு பொருளையும் ஆராய்ந்து அறியும் அறிவைச் செலுத்தாத கண்மூடித்தனமாக ஒன்றை அப்படியே ஏற்றுக் கொள்ளுதலும், அவ்வாறு கண்மூடித்தனமாக ஏற்று காலங்காலமாக மாற்றமின்றிப் பின்பற்றுதலே மூட நம்பிக்கையாகும்”[2] என்கிறார் மு, வரதராசனார்.

மூட நம்பிக்கைக்கு உதாரணமாக விளக்கை அவி அல்லது நிறுத்து என்று கூறுவது அமங்கலம் என்றும் விளக்கை அமர்த்து குளிரவை முதலான சொற்களால் குறிப்பர். விளக்கில் தோன்றும் ஒளி திருமகளின் பொலிவு என்று விளக்கினைப் போற்றும் நம்பிக்கை இருந்தன. விளக்கை அவி அல்லது நிறுத்து என்னும் சொற்களைக் கூறும் போது திருமகளின் அருள் நீங்குமோ அல்லது வறுமை வந்திடுமோ என்ற அச்சத்தின் காரணமாகவே விளக்கினை அமர்த்து, குளிரவை என்று கூறி இங்கு நம்பிக்கை மூட நம்பிக்கையாக அமைகின்றன.

பகுத்தறிவிற்கும் நல்ல நம்பிக்கைக்கும் எதிரானது மூட நம்பிக்கை ஆகும். தன்மையின் முனை முற்றாக மழுங்கிய நிலையே மூட நம்பிக்கையாகும். நல்ல நம்பிக்கை என்பது போதுமான ஆதாரத்தைக் கொண்டதாக இருக்க வேண்டும் இல்லையேல் அது வெறும் மூட நம்பிக்கைதான். சித்தர் பாடல்களில் இறைவன் மீது நம்பிக்கை கொண்டு இறைவனை அடையும் நிலைக்கும் யோகமும், அகப்பூசையும் செய்கிறார்கள். ஆனால் மக்கள் இறைவன் மீது புறப்பூசையைச் செய்கிறார்கள். மக்கள் புறப்பூசையைச் செய்வது அச்சம் பயம் பேராசையின் காரணமாகவே செய்கிறார்கள்.

சித்தர் பாடல்களில் மக்கள் செய்யும் பூசையை மூட நம்பிக்கை என்றும் அவர்கள் மூடர்கள் அறிவில்லாதவர் என்றும் வெளிப்படையாக கூறியுள்ளனர். சித்தர்கள் நம்பிக்கை உடையவர்கள் மூட நம்பிக்கைக்கு எதிரானவர்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## சடங்கு சாத்திரங்கள் முதலியவற்றை மறுத்தல்

சித்தர்கள் சமுதாயத்தில் நிலவிய சாதிப் பாகுபாடுகளைக் கண்டித்ததோடு, அவை வளருவதற்கும் வேரூன்றுவதற்கும் துணையாக இருக்கின்ற சாத்திரங்களையும் சடங்குகளையும் கண்டித்தனர்.

சாதியினால் தீமையேயன்றி அணுவளவும் நன்மை இல்லை ஆதல் போல, சாத்திரத்தாலும் சடங்குகளாலும் கூட நன்மை இல்லை என்பது சித்தர்கள் கருத்து[3] என இரா.மாணிக்கவாசகம் கூறுகிறார்.

'கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போக' என்று இராமலிங்க அடிகளார் கூறியது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

சடங்குகளையும், சாத்திரங்களை மறுத்தும் எள்ளி நகையாடியும் பாடியவர்களில் சிவவாக்கியர் முன்னோடியாக விளங்குகிறார்.

**'கோயிலாவது ஏதடா குளங்களாவது ஏதடா'**[4]

பல்வேறு சமயச் சடங்குகள் நிகழ்வதற்குக் களமாக அமைகின்ற கோயிலையும் குளத்தையுமே அவர் சாடத் துணிகின்றார். மனத்தூய்மையும் உடற்றூய்மையும் இன்றிச் செய்யப்படும் வழிபாட்டுச் சடங்குகளால் நன்மையேதும் இல்லையென்பதே அவர் கருத்தெனத் தெளியலாம்.

## பாம்பாட்டிச் சித்தர்

பாம்பாட்டிச் சித்தரும் பல்வேறு இடங்களுக்குப் புண்ணிய யாத்திரை செல்லுதல் முதலிய சடங்குகளையும் சாத்திரங்களையும் கண்டித்துப் பாடியுள்ளார்.

**காடுமலை நதி பதி காசி முதலாய்க்**
**கால்கடுக்க ஓடிற்பலன் காணலாகுமோ**[5] **(பாம்.பா.88)**

**ஏட்டுச் சுரைக்காய்க் கறிங்கிங் கெய்திடாது போல்**
**எண்டிசை திரிந்துங் கதியெய்தலில்லையே**[6]

எனத் தெளிவுபடுத்துகின்றார். பிறிதொரு பாடலிலும் இறைவனைக் குயவனாகவும், மனித உடலை மட்பாண்டமாகவும் அவர் உருவகிப்பது இங்கு குறிக்கத்தக்கது.

களிமண்ணினாலொரு கப்பல் சேர்த்தே
கனமான பாய்மரங் காண நாட்டி
அளிபுலந் தன்னையே சுக்கானாக்கி
அறிவென்னும் ஆதாரச் சீனி தூக்கி (பா.114)

என்பதாகும்.

## குதம்பைச் சித்தர்

குதம்பைச் சித்தரின் பாடல்கள் உருவ வணக்க மறுப்பு, பல தெய்வ வணக்க மறுப்பு, சடங்கு சாத்திர மறுப்பு போன்ற கருத்துக்களை மறுக்கும் விதமாக அமைந்துள்ளன.

## சித்தர் இலக்கியத்தில் சமுதாய நோக்கு

சித்தர் இலக்கியங்களை ஆழ்ந்து கற்பவர்களுக்கு அவர்கள் மனித சமுதாயத்தின் நலத்தையும் வளத்தையும் குறிக்கோளாகக் கொண்டு நிற்பதை உணர இயலும்.

உலகியல் வாழ்வை விட்டு ஒதுங்கித் தனித்து வாழ்பவர்கள் என்றும் தன் ஆன்ம விடுதலையையே குறிக்கோளாகக் கொண்டு முயல்வோர் சித்தர்கள் என்று சிலர் குறிப்பிடுவதுண்டு.

சித்தர் பாடல்கள் அனைத்தும் சமுதாயத்தின் இடர்களைத் துடைத்திடவும், மக்களின் அறியாமையை அகற்றி, அவர்தம் உள்ளங்களில் விழிப்புணர்வை விதைத்திடவும், பாடுபட்ட பெருமக்களாக அவர்கள் விளங்குகின்றனர். சாத்திரம் இல்லையடி சலனங் கடந்ததடி எனக் கடுவெளிச் சித்தர் பாடியுள்ளார். அவர்,

காசிக் கோடில் வினை போமோ - அந்தக்
கங்கையாடில் கதிதானு முண்டோ
பேசு முன் கன்மங்கள சாமோ பல
போற்றும் சடங்கை நண்ணாதே [7] (கடு.சி.பா.15)

என்று கூறுகின்றார்.

பாம்பாட்டிச் சித்தருடைய பாடல்களில் காணப்படும் உருவ வணக்க மறுப்பு, சடங்கு சாத்திர மறுப்பு, சாதிபேத எதிர்ப்பு முதலிய செய்திகள் இடம்பெற்றுள்ளதை,

மரப்பாவை போலவொரு மண்ணுருச் செய்து
வளமான சீவனென்னும் சூத்திரம் மாட்டித்
திரைக்குள் ளிருந்தசைப்போன் தீர்ந்த பொழுதே
தேகம் விழுமென்று தெளிந்தாடாய் பாம்பே[8] (பா.சி.பா.68)

என்னும் பாடல்வழி அறிய முடிகிறது.

## அகப்பேய்

தத்துவ வரலாறும் ஞான நெறியும் இவர் பாடலில் எளிமையாகக் கூறப்பட்டுள்ளன. மனதை அடக்கினால் அதன் மூலம் இறைவனைக் காணலாம் என்னும் கூற்று இவர் பாடல்களில் காணப்படுகின்றன. பூசை செய்தல், சடங்குகள் செய்தல், சமயத்தைப் போற்றுதல், போலி வேடங்கள் பூணுவோர் ஆகியோர்களை எதிர்த்துப் புரட்சிகரமான கருத்துக்களைத் தம் பாடலில் குறிப்பிடுகின்றார். மனம் தான் இறைவன்; அந்த மனதினைக் கட்டுப்படுத்தினால் இறைநிலையை அடைந்து முக்திப் பெறலாம் என்பது இவரின் கருத்து. இதனை

தன்னை யறியவேணும் அகப்பேய்
சாரமற் சாரவேணும்
பின்னை அறிவதெல்லாம் அகப்பேய்
பேயறிவாகுமடி (அக.சி.பா.78)

என்னும் பாடல் மூலம் அறியலாம்.

## சமயக் கொள்கைகள்

சத்தாதி யைந்தடியோ அகப்பேய்
சாத்திரமானதடி

மித்தையு மாகுமடி அகப்பேய்
மெய்யது சொன்னேனே (அக.சி.பா.7)

என்னும் பாடலில் சாத்திரங்கள் பொய் என்னும் கருத்தைக் குறிப்பிடுகின்றார். கூறப்படும் மாயை, சுவை, ஒளி, ஓசை, ஊறு, சத்தாதியாக நாற்றம் என்னும் நுண்பூதங்களாகும். இவை கண்ணால் பார்ப்பதற்கு முடியாதவை. ஆனால் அது உண்மையே என்று கூறுகின்றார். மேலும், பாடல் 17இல் ஆறாதாரத்துக்குக் கூறப்படுகின்ற ஐம்பத்தோரெழுத்துக்களும் பொய் என்றும், 25இல் சரியை, கிரியை, யோகம் ஆகியவை வேண்டாதவை, 33இல் சாத்திரம், சூத்திரம் பார்த்திடல் வேண்டா, எத்தனைக் காலம் யோகம் செய்தாலும் முத்தனாக முடியாது என்றும் 35இல் கடுந்தவம் செய்தாலும் வீடு பெற முடியாது 50 இல் சாதி வேறுபாடு என்பது இல்லை 68இல் ஈசன் என்பது மாயை 72 இல் தன்னை அறிய வேண்டும், ஆசை, அற்றிருப்பதே இறை நிலை 78இல் பிச்சையெடுத்து உண்பதனால் பிறவி தொலைந்து விடாது 79இல் பால் அறிவு வடிவானவர்கள் மோட்சம், முத்தி, தீட்சை இவற்றை வேண்டார் எனவும், 82இல் வேதம் ஓதியதால் மெய் கண்டோம் என்பது பொய் 90 போன்ற அமைந்த பாடல்கள் இவர் தம் கொள்கைகளை – புரட்சித் தன்மை வாய்ந்த கருத்துகளைக் கொண்டனவாகும்.

## தத்துவங்கள் ஆறு

ஆறு தத்துவமும் அகப்பேய்
ஆகமஞ் சொன்னதடி
மாறாத மண்டலமும் அகப்பேய்
வந்தது மூன்றடியே (அக.சி.பா.23)

அகப்பேயே! உடம்பில் ஆறு ஆதாரத் தத்துவங்களும் மூன்று மண்டலங்களும் வந்தன என்று ஆகமங்கள் சொல்கின்றன. அவற்றில்,

**ஆறு ஆதாரங்கள்**

1. மூலாதாரம் – முதுகு முன் அடி
2. சுவாதிட்டானம் – சிறுநீர்த்துளை
3. மணிப்பூரகம் – தொப்புள்
4. அநாகதம் – மார்பு நடு
5. விசுத்தி – தொண்டைக் குழி
6. ஆக்ஞை – புருவமத்தி என்பனவும்

**மூன்று மண்டலங்கள்**

1. சூரிய மண்டலம் – வலதுகண்
2. சந்திர மண்டலம் – இடதுகண்
3. அக்கினி மண்டலம் – புருவமத்தி என்பனவுமாகும்.

**ஆன்ம தத்துவம்**

ஆறாறும் ஆகுமடி அகப்பேய்
ஆகாது சொன்னேனே
வேறே யுண்டானால் அகப்பேய்
மெய்யது சொல்வாயே (அக.சி.பா.10)

அகப்பேய் தத்துவங்கள் முப்பத்தாறு (ஆறாறு) வகைப்படும். இவற்றுள் ஆன்ம தத்துவம் 24, வித்யாதத்துவம் 7, சிவதத்துவம் 5 ஆகும்; அவை தவிர பிற அவற்றில் சேரா. வேறு இருக்குமானால் அவற்றைச் சொல்வாய் எனக் குறிப்பிடுகிறார்.

**அழுகணி சித்தர் பாடல்கள்**

உயிர், உடலில் எவ்வாறு செயல்படுகின்றன என்பதை மூலாதாரத்தில் தொடங்கி ஆறு ஆதாரங்களாகிய வீடுகளிலும் சென்ற

சகஸ்ராரம் எனும் 1008 தாமரை இருக்கும் பதியில் குறுக்கும் நெடுக்குமாய் குழப்பம் தரும். அதன் தெருக்களில் குண்டலினி எனும் நெருப்பு தணலாய் எரிகிறது. தீக்கம்பமாகக் கீழிருந்து மேல் வரை வளர்ந்து நிற்கும் என்பதை

மூலப் பதியடியோ மூவிரண்டு வீடதிலே
கோலப் பதியடியோ குதர்க்கத் தெருநடுவே
சாலப் பதிதனிலே தணலாய் வளர்த்த கம்பம்
மேலப் பதிதனிலே என் கண்ணம்மா
விளையாட்டைப் பாரேனோ (அழு.சி.பா.1)

என்னும் பாடலில் உடம்பில் இருக்கக் கூடிய ஆறு ஆதாரங்களும் அது எவ்வாறு செயல்படுகின்றன என்பதை விளக்குகின்றது.

## யோகம், தியானம், வலிமை

யோகத்தின் தன்மையைக் காதல் மோகமாகப் பாடியுள்ளார். இதனை,

எண்சாண் உடம்படியோ ஏழிரண்டு வாயிலடி
பஞ்சாயக் காரர் ஐவர் பட்டணமுந் தானிரண்டு
அஞ்சாமற் பேசுகிறாய் ஆக்கினைக்குத் தான்பயந்து
நெஞ்சார நில்லாமல் என் கண்ணம்மா
நிலைகடந்து வாடுறண்டி (அழு.சி.பா.2)

உடல் எட்டு சாண் உயரமும், ஒன்பது வாசல்களும் உடையது. பஞ்சாயத்து செய்யும் புலன்கள் ஐந்தாகும். மூலாதாரத்தின் கீழ் உள்ள பட்டணம், தலையாகிய 1008 தாமரை மேல் உள்ள பட்டணம் என இரு பட்டணங்கள் உண்டு. இவர்கள் யாவரும் புருவமத்தியாகிய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு உள்ளது. இவ்வாறு கூறும் யோகத்தில் உன்னை நினைத்து என் நிலையைக் கடந்து உன்னிடம் வருகிறேன் என்று குறிப்பிடுகின்றார்.

ஆதாரத்தைத் தியானித்து, தனிமையில் அமர்ந்து மவுனம் சாதித்தால் குத்து விளக்குப்போல் குண்டலினி விரிந்து தோன்றும் என்பதை

குத்து விளக்கேற்றி என் கண்ணம்மா
கோலமிட்டுப் பாரேனோ (அழு.சி.பா.3)

யோகம் செய்வதால் என்ன நிலைகள் ஏற்படும் என்பதை கூறும் வேறு பல பாடல்களும் இருக்கின்றன. மேலும்,

அந்தரத்தை வில்லாக்கி ஐந்தெழுத்தை அம்பாக்கி
மந்திரத்தேர் ஏறியல்லோ மான்வேட்டை யாடுதற்குச்
சந்திரருஞ் சூரியருந் தான்போந்த காவணத்தே
வந்து விளையாடியல்லோ என் கண்ணம்மா
மனமகிந்து பார்ப்பதென்றோ (அழு.சி.பா.12)

புருவம் இரண்டையும் வில்லாக நினைத்து, நமசிவாய அல்லது சிவாய நம மந்திரத்தை அம்பாக்கித் தொப்புளில் தொடங்கி நெற்றி வரை நீளமாக நிறுத்தி, இம்மந்திரத் தேரில் ஏறி மானாகிய குண்டலினி பெண்ணை வேட்டை ஆட வேண்டும் என்று கூறுகின்றார். மேலும் 13 முதல் 40 வரையுள்ள பாடல்களில் யோகம் செய்வதைக் கூறுகின்றார்.

### மாயை உணர்வுகள்

அழுகணி சித்தர்,

பற்றற்ற நீரதிலே பாசி படர்ந்தது போல்
உற்று உற்றுப் பார்த்தாலும் உன்மயக்கந் தீரவில்லை (அழு.சி.பா.18)

மாய உணர்வுகளை நீக்க உற்று உற்றுப் பார்ப்பது என்பது தியானிப்பதாகும். இந்தத் தியான வலிமையால் மீண்டும் ஆத்மா சுத்தமாகும். மாயைகள் அந்நியமாகி நிற்கும் என்கின்றார். உடல் அருவருப்பானது, உடம்பெடுத்து பிறப்பதை ஒழித்து இறைமை எய்த வேண்டும். வேதாந்தத்தை விளங்கிக் கொள்ள வேண்டும். பொருளுக்காகப் பிறரிடம் பல்லை இளிப்பது இழிவு என்னும் கருத்துக்களும் வெளிப்படையான சொற்களும் குறிப்பான பொருள்களைக் கூறிச் செல்லும் இடங்களும், யோகத்தையும் தன் பாடல்களில் முன்நிறுத்திப் பாடியுள்ளார்.

## இடைக்காட்டுச் சித்தர்

இடைக்காட்டுச் சித்தர் பாடல்களில் இறைவனை மனதில் வைத்து எவ்வாறு வழிபடுதல் வேண்டும் எனவும் மதப் பொதுமை நோக்கும் திறம் பற்றிய கருத்துக்களையும் விளக்கமுறக் காணமுடிகிறது.

## இறைவனை மனதில் வழிபடுதல்

தொடக்கமும் முடிவும் இல்லாத பிரம்மத்தைக் காதலோடு கருத்தூன்றி நினைத்தால், பஞ்சில் படும் நெருப்புப் போல், தீயது தரும் நம் பிறவி மற்றும் மூன்று பொறிகள் வெளிப்படும் என்பதை,

ஆதி அந்தமில்லாத அனாதியைத்
தீது றும்பவம் தீப்படு பஞ்சுபோல
மோது, றும்படி முப்பொறி ஒத்துறக்
காதலாகக் கருத்திற் கருவோம் (கா.பா.)

என்று பாடியுள்ளார். உலகங்களையும், எல்லா உயிர்களையும், உயிரற்ற எல்லாப் பொருள்களையும், ஆதிப் பரமசிவனின் சொல்லால் இவையாவும் உண்டாகின என்பதை,

எல்லா வுலகமு மெல்லா வுயிர்களும்
எல்லாப் பொருள்களு மெண்ணரிய
வல்லாளன் ஆதி பரம சிவனது
சொல்லா லாகுமே கோனாரே (இடை.சி.பா.1)

என்னும் பாடலில் விளக்குகின்றார்.

முத்திக்கு வித்தான மூர்த்தியைத் தொழுது
முத்திக்கு உறுதிகள் செய்யாக்கால்
சித்தியும் பத்தியும் சத்தியும் முத்தியுஞ்
சேரா வாகுமே கோனாரே

என்ற பாடலில், முத்திக்குக் காரணமாக கடவுளைத் தொழுது முத்தி பெறுவதற்கு முன் ஏற்பாடுகள் செய்யாவிட்டால் சித்தி, புத்தி, சத்தி, முத்தி ஆகிய எவையும் சேராமல் போகும் என்கிறார். மேலும் பல பாடல்களில் இறைவனை நினைத்து வாழ்வதால் நற்கதி கிடைக்கும். இந்த உலகில் எதுவும் நிலையானது அல்ல மாடு, மனை, மக்கள், சுற்றம், பெரிய செல்வம், வீடு, மணிகள், வெள்ளி, தங்கம், வெண்கலம், காடு, கரை, கல் நகைகள், யானை, குதிரை, தேடக் கூடிய பல பண்டங்கள் முதலிய யாவும் நிலையற்றவை. எனவே சிவகதியை மட்டுமே நினைத்தால் அதுவே நிலையானது. அதனை முதலில் உணர்க என்று,

மாடும் மனைகளும் மக்களும் சுற்றமும் வன்பொருளும்
வீடும் மணிகளும் வெண்பொன்னும் செம்பொன்னும் (பா.25)

என்னும் பாடலில் விளக்குகின்றார் மற்றும்,

மனமென்னும் மாடுஅடங்கில் தாண்டவக்கோனே - முத்தி (பா.13)
சினமும் ஆசையும் தொலைய வேண்டும் (பா.14)
இந்த உடம்பு மலச்சால் போன்று அருவருப்பானது (பா.15)
உலகப் பொருள்கள் நிலையற்றவை (பா.16)
சிற்றின்பத்தை நீக்க வேண்டும் (பா.18)
யோகம் செய்ய வேண்டும் (பா.26)
ஆறாதாரத் தெய்வங்களை நாட வேண்டும் (பா.27)
சிவனை வழிபட வேண்டும் (பா.37)
சாகாக்கல்வி கற்க வேண்டும் (பா.61)
கரணங்கள் அடங்காதவை (பா.78)
உலகம் ஓக்காளத்தைத் தருவது (பா.79)
இல்லறம் துன்பமானது (பா.83)
துறவறமே நல்லறம் (பா.83)
மனத்திண்மை வேண்டும் (பா.84)
குண்டலிப்பால் பால்கறந்து உண்ணக் கற்க வேண்டும் (பா.105)

என்னும் கருத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார்.

**மதப்பொதுமை நோக்குதல்**

சந்திரசேகரன் தாள் தாழ்ந்து பணிவாயே (பா.37)
என்றும் நாரி இடப்பாகன் தாள் நெஞ்சில் போற்றி (பா.8)

என்று பாடுவதால் இவர் சைவரென்று தெரிகிறது. இவரது தாண்டவக்கோனே என்ற விளி சைவத்துக்குரியது. நாராயணக் கோனே என்ற விளி வைணவத்திற்குரியது. இவ்விரண்டையும் பயன்படுத்துவதால் இவர் மதப் பொதுமை நோக்கினார் என்பது தெளிவாகிறது. இதனை,

சூரியன் வாள்பட்ட துய்ய பனிகெடும்
தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரி இடப்பாகன் தாள்நெஞ்சிற் போற்றியே
நற்கதி சேர்ந்திடும் கோனாரே (பா.8)

என்னும் பாடல் உணர்த்துகிறது. மேலும்,

சந்திர சேகரன் தாள் - பசுவே
தாழ்ந்து பணிவாயேல்
இந்திரன் மால் முதலோர் - பசுவே
ஏவல் புரிவாரே (பா.37)

இப்பாடலில் சைவச் சமயக் கருத்து அமைந்து காணப்படுகின்றது. வைணத்திற்குச் சான்றாக

உலகம் ஓக்காளமாம் என்று ஓது குயிலே - எங்கள்
உத்தனைக் காண்பரிதென்று ஓது குயிலே
பலமதம் பொய்மெயென்று ஓது குயிலே - எழு
பவம் அகற்றிட்டோம் நாம் என்று ஓதுகுயிலே

என்னும் பாடலில் உலகை வெறுத்திடுக, எங்கள் உத்தமனைக் காண்பது அரிது என்றும், பல மதங்களும் பொய் என்றும், ஏழு பிறவிகளையும் கடந்து ஏறி விட்டோம் என்றும் கூவுக என்று மதங்கள் பொய் என்பதாக பாடல் அமைந்துள்ளன.

## கடுவெளி

கடுவெளிச் சித்தர் பாடல்களில் பெரும்பாலானவை சமூக உணர்வோடு பல அறிவுரைகளைக் கூறுகின்றன. இன்றைய இளையோர்க்கும் கூறத்தக்க அறிவுரைகள் மிகுதியாக உள்ளன. குருவின் சொற்படி நட, மனத்தை அடக்கு என்பதை,

மெய்க்குரு சொற்கடவாதே - நன்மை
மென்மேலுஞ் செய்கை மிக அடக்காதே

விதியைத் தடுக்க முடியாது எனவும், உடல் பொருள் நிலையற்றவை என்பதை தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

உலகத்தில் வாழ்ந்தாலும் எதிலும் பற்றுக் கொள்ளலாகாது
வைதோரைக் கூட வையாதே (பா.24)

பொய் சொல்லாதே.
வீணாய்ப் பறவைகள் மேல் கல்லை எறியாதே.
அறநெறி நூல்களைப் படி (பா.26)

கஞ்சாப்புகை பிடியாதே (பா.28)

கள்ள வேடம் போடாதே
கொள்ளையடிக்க நினையாதே (பா.29)

என அறிவுரை கூறுவதாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

## மூடநம்பிக்கை

காசிக்குப் போவதாலும் கங்கையில் மூழ்குவதாலும் வினை போகாது என்றும் குறிப்பிடுகின்றார். இதனை,

காசிக்கோ டில்வினை போமோ? அந்தக்
கங்கையா டில்கதி தானுமுண்டாமோ! (பா.15)

என்னும் பாடல் வரிகளால் அறியமுடிகிறது. மேலும் சமயங்கள் விலக்கத்தக்கவை என்பதை

பொய்வேதடந் தன்னைப் பாராதே (பா.24)

என்றும்,

போற்றுச் சடங்கை நண்ணாதே - உன்னைப்
புகழ்ந்து பலரிற் புகலவொண்ணாதே (பா.28)

என்னும் பாடல்களில் காண முடிகிறது.

### உருவ வழிபாடு

வேதவிதிப்படி நடந்து கொள். நல்லவர்கள் விரும்பத்தக்க வழியில் நீயும் செல் என்பதை

வேத விதிப்படி நில்லு (பா.8)

என்கின்றார்.

### சிவனை வணங்கு

எளிதில் பெற முடியாத வீடுபேற்றின் பெருமையை உணர்ந்து அதற்கான வழிகளை அறிந்துகொண்டு, சிறிதும் கோபம் இல்லாது, ஆதியாகிய சிவனுக்கே இடைவிடாது தொண்டு செய்தால், அவனே அந்த வீடாகிய முத்தியில் கொண்டு போய்ச் சேர்த்திடுவான். இதனை,

ஆற்றாரும் வீடேற்றங் கண்டு - அதற்
 கான வழியை யறிந்து நீ கொண்டு
சீற்றமில்லாமலே தொண்டு - ஆதி
 சிவனுக்குச் செய்திடிற் சேர்த்திடுங் கொண்டு (கடு.சி.பா.20)

என்றும், சமயங்கள் அனைத்தும் ஒன்றே என்றும், சடங்குகளை வெறுத்தும், பொய்யான பத்தி வேடம் புரிபவர்களைக் கடுமையாகச் சாடுகின்றார்.

இறைவன் நம் இதயத்தில் இருப்பவர். அவரை நினைத்து மனதுருகி வேண்டினால் இறைவன் அருள் கிடைக்கும். இதனை

துங்க அடியவர் தாசன்- தன்னைத்
துதிக்கிற் பதவி அருளுவன் ஈசன் (பா.34)

என்னும் பாடல் வரியால் அறிய முடிகிறது.

## குதம்பை

பரவெளியே மெய்யான இடம். அதில் மெய்ப்பொருள் என்பதை அகவிழியால் காணவேண்டும். இறைவனையே நினைத்து வாழ வேண்டும். உண்மையான தவத்தில் இருக்க வேண்டும். உடம்பினுக்குள்ளே உறுபொருள் காணவேண்டும். காமம் வெகுளிகளை அடக்கி யோகம் செய்ய வேண்டும் போன்ற கருத்துக்கள் இவரது பாடல்களில் காணப்படுகின்றன.

## மூட நம்பிக்கை

பொய்யான யோக நெறி, பக்தி நெறி, புறப்பூசை ஆகியவற்றை பழிப்பனவாக இவருடைய பாடல்கள் அமைந்துள்ளன. அதாவது உண்மையான முறையில் இறைவனைக் காணவேண்டும். அவ்வாறு இறைவனைக் கண்டவர்களுக்கு எந்தப் பதவியும் பட்டமும் தேவையில்லை என்கின்றார். இதனை

வெட்ட வெளிதன்னை மெய்யென் றிருப்போர்க்குப்
பட்டய மேதுக்கடி குதம்பாய்
பட்டய மேதுக்கடி (குத.சி.பா.1)

வெட்ட வெளியில் எங்கும் பரவியுள்ள இடங்களில் இறைவன் நிறைந்துள்ளார். இறைவனை மெய்யென்று யோகம் சாதிப்பவர்க்கு யோகி என்னும் பட்டயம் வழங்கத் தேவையில்லை என்று கூறுகின்றார்.

இவர் தம் பாடல்களினால் உயர்ந்த நிலைமை யோகத்தால் ஞானத்தால் அடைந்தவர்களுக்கு அதனை விளக்கிடவும், மெய்படுத்தவும் தேவையில்லை என்பதையும் குறிப்பிடுகின்றார்.

# பாம்பாட்டிச் சித்தர்

## கொள்கைகள்

பொய்மதங்கள் பல பொய்யான குருக்களைக் காட்டுகின்றன. உண்மைப் பொருளை உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்ட வல்லவரே உண்மைக்குரு. அவர் எக்காலமும் வாழ்பவர். கூடு விட்டுக் கூடுபாய வல்லவர். சித்தர்கள் பல மாயங்களைச் செய்யவல்லவர்கள். செல்வங்கள் அழியக் கூடியவை. பொருளாசை, பெண்ணாசைகளை விலக்க வேண்டும். உடல் அருவருப்பானது. நிலையற்றது. அகப்பற்றை நீக்க வேண்டும். தன்னையறிந்தவர் பின்னையொரு கடவுளைப் பேண நினையார் என்பன இவர்தம் கொள்கைகளில் குறிப்பிடத்தக்கவை.

### நாடி

அஞ்சான ஐந்து பத்து நாடித்தன்மை
அப்பனே சொல்லுகின்றேன் அறிவாய் கேளு
துஞ்சாத இடையான பின் சுழிமுனையாகி
துலங்குகின்ற காந்தாரி யத்தியோடு
பிஞ்சான சிங்குவையும் அலம்புருடன்
வேகமுள்ள குகுதனுடன் சங்கினி பத்தும்
நெஞ்சார நின்றதோர் நாடிபத்தும்
நேர்மையுள்ள பிரிதிவியின் கதிதான் பாரே [9]

(அகத்தியர் சௌமிய சாகரம் –42)

என்னும் பாடலில் நாடியின் வகைகள் அதன் தன்மைகளையும், அவை இருக்கும் இடங்கள் மற்றும் அதன் செயல்களையும் குறிப்பிட்டுள்ளார். பாம்பாட்டி சித்தர்.

நாடி பற்றியும் அவை எவ்வாறு செயல்படுகின்றன என்பதையும் அதனால் இறைவனை எவ்வாறு அடைய முடியும் என்பதையும்

குண்டலினியை எழுப்பி அதன் மூலம் இறைவனை அடையும் நிலைகளையும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

நாலு தெருவினிலே நாலு கம்பம்
நடுத்தெரு வினிலேயோடு பொன்னுக் கம்பம்
போலும் விளங்குபொன்னுக் கம்பத்தினுக்கே
பூமாலை சூட்டிநின் றாடாய் பாம்பே (பாம்.சி. பா.84)

நாலுதெரு கூடுமிடம் பொதுவான மூலாதாரம். அதில் நாலு கம்பம் என்பது நான்கு இதழ் கொண்ட தாமரை, அதன் நடுத்தெருவிலே ஓடும் பொன் கம்பம் என்பது சுழுமுனை நாடி என்று நாடி பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலும் நாடி பற்றி பாடல்கள் உள்ளன.

தசநாடி, தசவாயு சத்த தாது
சார்ந்த மரக் கப்பலது தத்தி விழுமே (பாம்.சி.பா.69)

பத்து நாடி, பத்து வாயு, ஏழு தாது ஆகியன கூறப்பட்டுள்ளன.

## உயிர் நிலையாமை

முக்கனிகள், சர்க்கரை, மோதகம் என மிகுந்த சுவைப் பண்டங்களை உண்ட வாய், உயிர் போன பிறகு மண்ணை விழுங்குவதை, மெய்யாகவே கண்டோம் என்பதை,

முக்கனியுஞ் சர்க்கரையும் மோதகங்களும்
முதிர்சுவைப் பண்டங்களும் முந்தி யுண்டவாய்
மிக்கவுயிர் போனபின்பு மண்ணை விழுங்க
மெய்யாகக் கண்டோமென் றாடாய் பாம்பே[10] (பா.46)

எனக் கூறுகின்றார்.

## உடலின் இழிவு

மக்கிய மண் குழியில் மண் எடுத்து, உதிரமாகிய நீரால் உண்டை சேர்த்து, குயவனார் பண்ணும், பாத்திரம் உடைந்த ஓட்டுக்குரிய மதிப்பைக் கூடப் பெறாது இவ்வுடல் என்பதை,

ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே
    உதிரப் புனலினிலே உண்டை சேர்த்தே
வாய்த்தகுய வனார் பண்ணும் பாண்டம்
    வறகோட்டுக்கும் ஆகாதென் றாடாய் பாம்பே (பா.60)

என்னும் பாடலில் மண் பாத்திரம் உடைந்தால் ஓடு பயன்படும், உடலை விட்டு உயிர் நீங்கினால் அந்த உடம்பு எதற்கும் பயன்படாது. கடவுளே இங்குக் குயவன், மாயையாகியது மனித உடல் என்கின்றார்.

## மூட நம்பிக்கை

பொய்யான மதங்களைப் போதனை செய்யும் பொய்க் குருமார்களைப் புத்தி சொல்லி மாற்றி நல்ல நெறியில் போகுமாறு செய்யும் மெய்யான மதம் இதுதான் என்று நாம் விரும்புமாறு சொல்லும் மெய்க்குருவின் பாதங்களைப் போற்றிப் பாம்பே ஆடுவாயாக என்பதை,

பொய்ம்மதங்களை போதனைசெய் பொய்க்கு ருக்களைப்
    புத்திசொல்லி நன்னெறியிற் போக விடுக்கும்[11] (பா.11)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாதது போலப் பல திசைகளிலும் திரிந்து நூல் கற்றாலும் சிவகதி எய்த இயலாது. நாட்டில் ஒரு கோயில் கட்டி நாளும் பூசிப்பவர்களும் கடவுள் பாதத்தைக் காணார்கள் என்பதை,

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கிங் கெய்திடாது போல்
    எண்திசை திரிந்துங் கதி எய்தல் இல்லையே!
நாட்டுக்கொரு கோயில்கட்டி நாளும் பூசித்தே
    நாதன் பாதம் காணார்கள் என்று ஆடுபாம்பே! (பாம்.சி.பா.94)

என்பதாலும்,

காடுமலை நதிபதி காசி முதலாய்க்
    கால்கடுக்க ஓடின் பலன் காணலாகுமோ

வீடுபெறும் வழிநிலை மேவிக் கொள்ளவே
    வேதாந்த துறையில் நின்று ஆடுபாம்பே (பாம்.சி. பா.88)

என்பதாலும் காட்டிலும், மலைகளிலும் தவம் செய்தும் நதியில் நீராடியும், காசி முதலான இடங்களில் தரிசனம் பெற கால்கடுக்க நடந்தும் ஓடியும் பயன் காண முடியாது எனக் குறிப்பிட்டுள்ளார்.

## உருவ வழிபாடு

உளியிட்ட கற்சிலையில் உண்டோ உணர்ச்சி!
    உலகத்தின் மூடர்களுக்குக் குண்டோ உணர்ச்சி!
புளியிட்ட செம்பிற்குற்றம் போமா? அஞ்ஞானம்
    போகாது மூடருக்கென்று ஆடுபாம்பே! (பாம்.சி. பா.92)

விக்கிரக வழிபாட்டு எதிர்ப்புக்கும் இவர் கூறும் பாடல். உளியில் செதுக்கிய கற்சிலைக்கு உணர்ச்சி இல்லாதது போல் மூடருக்கும் உணர்ச்சி இல்லை. செம்பின் களிம்பு புளியால் முழுதும் போகாது போல் மூடருக்கும் அஞ்ஞானம் போகாது என்று குறிப்பிடுகின்றார்.

சதுர்வேதம் ஆறுவகைச் சாத்திரம்பல
    தந்திரம் புராணங்கலை சாற்றும் ஆகமம்
விதம்வித மானவான வேறு நூல்களும்
    வீணான நூல்களே என்று ஆடுபாம்பே[12] (பாம்.சி. பா.98)

நான்கு வேதங்கள், ஆறு அங்கமான சாத்திரங்கள், பல ஆகமங்கள், புராணங்கள், கலைகள் சாற்றும் ஆகமங்கள், இப்படி பற்பல விதமான உயர்ந்த வேறு நூல்களும் பயனற்ற நூல்களே என்று இந்து மரபு வழிச் சமுதாயம் புனிதத்திலும் புனிதமானவை என்று போற்றுவனவற்றை வீணானவை என்று குறிப்பிடுகிறார். மேலும் **"பூசை செய்ததாலே சுத்த போதம் வருமோ"** (பா.100). பூசை செய்ததால் சுத்த ஞானம் உண்டாகாது என்கிறார்.

### சமயக் கருத்துக்கள்

சமயபேதம் பலவான சாதிபேதங்கள்
சகத்தோர்க்கே அல்லாதுசற் சாதுகளுக்கோ
சிமயத்தில் ஏறினபேர் சித்தம் மாறுமோ
சித்தர் சித் தாந்தத்தேர்ந்து ஆடுபாம்பே (பா.99)

சாதி சமயம் முதலிய வேற்றுமைகள் உலக மக்களுக்கே உண்டாகும். நல்ல சாதுக்களுக்கு உண்டாகாது. உயர்ந்த ஞானம் பெற்றவர்க்குச் சித்தம் மாறுபடுவதில்லை என்னும் கருத்தையும், சாதிப் பிரிவுகளை அழிப்போம், நாடிகள் சந்திக்கும் ஆதாரங்களில் தீயைக்கோல் மாதிரி நீள வைப்போம். வீதிப்பிரிவாகிய நாடிகளில் செய்கை செய்வோம். வேண்டாத குணங்களை உறவாக்க மாட்டோம் என்பதை,

சாதிப் பிரிவினிலே தீயை மூட்டுவோம்
சந்தை வெளியினிலே கோலை நாட்டுவோம்

எனச் சாதிப் பற்றிய பிரிவினையைத் தீவிரமாக எதிர்த்துத் தம் பாடலில் வெளிப்படுத்தியுள்ளார்.

## இராமதேவர்

### கொள்கைகள்

உள்ளம் என்னும் கோவிலில் இறைவியை இருத்தி அன்றாடம் சித்த சுத்தியுடன் வழிபட்டால் சித்தி எல்லாம் கைகூடும். சிவமயமாய்ப் பேரின்பத்தில் சுகம் பெற்றுத் திளைக்கலாம் என்பது இராமதேவர் பூசை முறையின் பொது கருத்துக் கொள்கைகளாகும்.

மனதை அடக்கவும், உள்ளத்தை ஒரு நிலைப்படுத்தவும் உலகின் முழுமுதற் பொருளை வணங்கி வாழ்த்தி வழிகாட்டுகிறார். சிந்தையை அடக்கியே சும்மா இருப்பது சுகம் என்றார் தவயோகி. ஆனால் சிந்தையை

அடக்குவது எளிதல்ல. எனவே பூசனைகளால் வழிபட்டால் அலைபாயும் மனதை வசமாக்கி வழிபடுத்தி நெறிப்பட வைக்கலாம் என்றும் முயன்றால் முக்தி கிடைக்கும் என்கிறார்.

### பூசைமுறை

சத்தான அதன்கருவும் சிலையும் வைத்துச்
சதுரான விதிவிவர மறியக் கேளே. (இராம.பா.4)

முதுகுத்தண்டை வில் என்பர். இதன் வழியாகவே நாம் கூறும் மந்திரம் தலைக்குச் செல்லும். மனமொன்றிச் சொல்லப்படும் ஐம், க்லீம், ஸௌ என்ற பால மந்திரம் ஆகும். இம்மந்திரம் தடைசெய்யும். எதையும் எதிர்க்கும். ஆதலால் இலட்சம் உரு இதைச் செபிக்க வேண்டும். விதவிதமான, விளைவுகளை இந்த மந்திரம் செய்யும் என்றும் பூஜை முறைகளைக் குறிப்பிடுகின்றார். மேலும் எவ்வாறு அவற்றைச் செய்ய வேண்டும் என்று மற்ற பாடல்களிலும் விளக்குகின்றார்.

### உரோமரிஷி

### சமயம் - உடலில் கடவுள் நிலை உணர்தல்

ஏறும் குண்டலினி நெருப்பு அறுகோணமாகிய அநாகதம், விசுத்தி ஆகியவற்றில் ஏறிச் சதாசிவபீடமாகிய கடவுள் நிலையைப் புருவ மத்தியில் உணரலாம் என்பதை,

தணலாகும், விசுத்தியறு கோண வட்டஞ்
சதாசிவனார் வட்டமல்லோ குருபீடந்தான்[13] (பா.9)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். பொல்லாத, ஒழுக்கமற்ற, தீயருக்கு இது பொய்யாகி விடும். மேலும்

மூட்டுவிக்கு மாதார மாறுந் தானே
மூலவட்டக் கணபதி நான் முகத்தோன் மாயன்

தாட்டிகமா மணிப்பூரங் கையன் வட்டந்

தணலான ருத்திரனுந் தணலுமாமே (உரோம.பா.8)

என்ற ஆறு ஆதாரங்களான மூலவட்டத்தில் உள்ள கணபதி, பிரமன், சுவாதிட்டானத்துத் திருமால், மணிப்பூரகத்து உருத்திரன் ஆகியோரின் உதவியால் குண்டலினி நெருப்பு வெளிப்படும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

## மூட நம்பிக்கை கொண்டவர்கள் நிலை

யோகத்தை முறையாகச் செய்யாமல் மனத்தில் கடவுளின் திருவடிகளையும் நினையாமல் அவர் வடிவத்தையும் தானே வந்தது போல் பாவனை செய்து வீடுபேறு, உடலில் கோயில், யோகம் முதலியன வீண்பேச்சே என்று கூறி, காட்டில் சென்று, மலையில் ஏறி, நதிகளில் மூழ்கி, காய், கிழங்கு, சருகு தின்று, காமத்தீயில் சூடேறி மாண்டவர்கள் கோடிக் கணக்கினர் கடவுள் நிலையை அடைந்தவர் சிலரே என்னும் கருத்தை,

மூடாமல் சிறுமனப் பாடம் பண்ணி

முழுவதுமவன் வந்தது போல் பிரசங்கித்து

வீடேதிங்கு உடலேது யோக மேது

வீண்பேச்சாச் சொல்லியல்லோ மாண்டு போனார்

காடேறி மலையேறி நதிகளாடிக்

காய்கிழங்கு சருகுதின்று காமத்தீயால்

சூடேறி மாண்டவர்கள் கோடா கோடி

சொருபமுத்தி பெற்றவர்கள் சுருக்கமாச்சே (பா.11)

என்ற பாடலில் கூறுகின்றார்.

## கணபதிச்சித்தர்

இறைவன் ஒருவனே அவனே வெவ்வேறு வடிவங்களாகக் காட்சியளிக்கிறார். தாய் தந்தை, மனைவி மக்கள், உடல், வாழ்க்கை எல்லாம் பொய் நாகைநாதரே உண்மை, நாமே தெய்வம், வேடங்களால் பயனில்லை.

கல்லிலும், செம்பிலும் மட்டும் கடவுள் இல்லை. நம்மை நாம் அறிய வேண்டும் முதலியன இவர்தம் கொள்கைகள், நாகைநாதரை மனத்தில் நினைத்துத் தொழவேண்டும் என்பதே இவர் தம் பாடல் கருத்துக்களாகும்.

## உருவ வழிபாட்டை மறுத்தல்

புல்லினுள் வாழுகின்ற ஒருவகைப்பூச்சி தன்னுடலாலே வெண்மையான நுரையை உண்டாக்கி, அதனையே கூடாகக் கொண்டு வெயில்படாத வண்ணம் வாழும். அதுபோல இறைவனானவன் கல் முதலான பொருட்களில் இருப்பதில்லை. நீரில் இருந்தாலும் நீர்க்கூட்டில் வாழுகின்ற பூச்சிப்போல, சிந்திக்க வைக்கும் கல்லினைவிடக் கருத்தில் தான் இறைவன் இருப்பான். இதனை,

புல்லினுள் இருக்கும்பூச்சி பொருத்த வெண்ணுரையுண்டாக்கி
மெல்லிய தண்ணீர்வீட்டில் வெயிற்படாதிருக்கு மாபோல்
சொல்லிலே நாகைநாதர் தோய்ந்திடச் சூட்சங் கண்டாற்
கல்லிலே தெய்வமில்லை கருத்திலே தெய்வம் நெஞ்சே[14] (பா.15)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

உருப்படுங்கல்லும் செப்பும் உண்மையாய்த் தெய்வமென்றே
மருப்புணை மலரைச் சூட்டி மணியாட்டித் தூபங்காட்டி
விருப்பமுற் றலைந்தாய் அந்த வினைமயல் விட்டு நின்னுள்
இருப்பவர் நாகைநாதர் இணையடி பூசிநெஞ்சே (பா.62)

என்றும் உரைத்துள்ளார்.

## போலி குருவைச் சாடுதல்

குருக்கள் அனைவருமே இறைவனைக் காட்டும் தகவினைப் பெற்றிருப்பார் என்றில்லை. குருமார்களிலும் போலியானவர்கள் இருப்பர். இவர்கள் பொருள் மீது உள்ள ஆசையால் குரு வேடம் தாங்கி நிற்பவர்கள்

ஆவர். அவர்களால் தூய பேரறிவான இறைவனைக் காட்ட இயலாது என்பதால் அக்காரிய குருக்களை விட்டுவிடுக என்று விளக்குகிறார்.

பொருளுக்காக உபதேசம் செய்கின்ற குருக்களை விட்டு, எந்த ஆதாயமும் எதிர்பார்க்காத ஞானகுருவை நாட வேண்டும் என்பதை

மோரிலே நீரைவிட்டால் முறிந்திடுங் கொள்கைபோல
காரிய குருவை விட்டுக் காரண குருவைக் கண்டு
சீரிய பாலு நீர்போற் சேர்ந்திரு வருமொன்றாகி (பா.28)

மேலும்,

வேடத்தைத் தரித்தாலென்ன, வெண்பொடி அணிந்தாலென்ன (பா.30)

என்னும் பாடலில் போலி குருவைச் சாடுகிறார்.

## உடலில் மெய்யொளி காணுதல்

மின்மினிப் பூச்சியானது தனது உடலில் உள்ளே உள்ள வெளிச்சத்தையே ஆதாரமாகக் கொண்டு வாழ்கிறது. அதுபோல ஒவ்வொரு வரும் தன் உடலில் உள்ள உண்மையான மெய்யொளியைக் காண வேண்டும். பிறவி நோய் தீர உள்ளம் ஒடுங்கி உள்ளொளி காணுதல் அவசியம் என்பதை,

மின்மினிப்பூச்சி தன்னுள் மெய்யொளி கண்டாற்போல்
உன்மனம் ஒடுங்கியே உள்ளொளி கண்டால் பின்னை
சென்மமுமில்லை. அந்தச் சிவத்துள்ளே சேர்வாய், நாளும் (பா.41)

என்னும் பாடலில் உள்ளொளியினை அறிந்தால் சிவத்துள்ளே சேர்வாய் என்னும் கருத்தை வெளிப்படுத்துகின்றார். மேலும்,

செம்பினிற் களிம்பு போல சீவனஞ் சடமுங்கூடி
நம்பின உடலைக் கண்டு நல்லுயிர் வடிவங்காணாய்,
வெம்பிய காம மாயை விட்டு மெய்ப் பொருளைத் தேடிக்
கும்பிய நாகை நாதர் கூத்தாடல் காண்பாய் நெஞ்சே[15] (பா.42)

உடம்பினுள் ஆத்மா ஒட்டியிருப்பது, செம்பினில் களிம்பு சேர்ந்திருப்பதற்குச் சமமாகும். செம்பை விளக்கினால் களிம்பு போய் விடும். அதுபோல் உடம்பிலிருந்து எளிதாக ஆன்மாவைக் காலன் விளக்கிடுவான். செம்பு போன்ற சீவன் தான் முக்கியமானதாகும். மக்கள் களிம்பு போன்ற உடலையே உண்மையென எண்ணி வாழ்கின்றனர் என்று தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

### காகபுசுண்டர்

யோகத்தைப் பின்பற்றி பிரமத்தை அடைய வேண்டும் என்றும், யோகம் செய்யாமல் இருந்தால் ஏற்படும் தீமைகளைத் தம் பாடலில் குறிப்பிடுகின்றார். தம் பாடல்கள் அனைத்திலும் தவத்தை வலியுறுத்தி அதன் மூலம் பயனடைய வழிவகைகளைக் கூறியுள்ளார்.

உலகத்து மனிதர் வழியில் கடந்திடாது தனித்திரு, உணவை மிகுதியாக உண்ணாதே, வழக்குரைக்கும் போது ஒரு பக்கம் சாய்ந்து பொய் சாட்சி சொல்லாதே, 'ஓம்' என்னும் மந்திரத்தை மறவாதே, மனம் கலங்கி திரியாதே, காமந்தகனோடு சேர்ந்திடாதே என்பதை,

தாமென்ற உலகத்தின் மனிதரோடே
 சஞ்சாரம் செய்யாமல் தனித்து நில்லே
ஓமென்ற ஊண் மிகுந்த உண்டிடாதே
 ஓரமாய் வழக்கதனை உரைத்திடாதே (காக.பு.பா.20)

என்று மனிதர்களுக்கு அறிவுரை கூறும் விதமாகப் பாடல் அமைந்துள்ளன.

### உருவ வழிபாடு

பாரப்பா மலரெடுத்து லிங்கம் வைத்துப்
 பார்த்தீப லிங்கத்தைப் பணியா மற்றான்
வீரப்பா நீராட்டிப் பூசை செய்து
 வீணர்கள்தாம் கத்தபம் போற் கதறுவார்கள்

தேரப்பா மலரதனைக் கிள்ளும் போது
செத்தசனம் போலாச்சு தெளிந்து பாடு
காரப்பா மனங்கொண்டு பரத்தினூடே
கண்டவரே கயிலாசத் தேகத்தானே[16] (காக.சி.பா.16)

என்னும் பாடலில் லிங்கம் வைத்து பூவினால் கோயிலில் பூசை செய்வர். உடலில் உள்ள லிங்கத்தைப் பூசிக்க மாட்டார். வீம்புக்காகப் பிற லிங்கத்தை நீராட்டிப் பூசை செய்து வீணர்கள் கழுதை போல் கத்துவர். மலரைப் பறிக்கும் போதே தம் உடலில் உணர்வற்று நிற்பதை அவர்கள் உணரார் என்றும் பரம்பொருளின் மீது மனத்தைச் செலுத்தியவர்களின் உடலில் தான் கயிலாயம் உள்ளது. மற்றபடி வேறெங்கும் இல்லை கடவுள் என்கின்றார்.

## சமயம் (கடவுள்)

தானென்ற பிரமத்தை யடுத்தி டாமல்
தாரணியில் தெய்வமடா அனந்த மென்றும்
ஊனென்ற குருவென்றுஞ் சீடனென்றும்
உதயகிரி பாராத உலுத்த மாடு
வேனென்ற பொய்களவு கொலைகள் செய்து
வேசையர்மே லாசைவைத்து வீணாகிக்
கோனென்ற குருபாதம் அடைய மாட்டான்
கூடுவான் நகரமதில் வீழ்வான் பாரே (கா.பு.பா.17)

என்னும் பாடலில் தான் என்னும் உணர்வைத் தரும் பிரம்மத்தை நெருங்காமல் உலகில் பல தெய்வங்கள் உண்டு என்று கூறுவர். ஊனுடைய மனிதர்களே குரு என்றும் சீடர் என்றும் சொல்லுவர். இவர்கள் யாவரும் குண்டலினி உதயம் ஆகும் மூலாதாரத்தைக் காணாதவரேயாவர். வேண்டுமென்றே பொய், களவு, கொலை, காமம் முதலியன செய்து அரசன் போல் நம் உடலில் உள்ள குருபாதத்தை அடையாமல் நரகத்தில் வீழ்வார்கள் பலர் என்கின்றார். மேலும், சித்தமும் புத்தியும் ஒன்றி நிற்க காலை மாலை நண்பகல் காலங்களில் தேவனுக்குப் பூசை செய்து, மனத்தில் அன்பை

வைத்து, குருபரனை நோக்கித் தவம் செய்தால், இவ்வாறு மூன்று வேளையும் பூசை செய்தால் சூரிய சந்திர, அக்கினி, (இடா பிங்களா சுழுமுனை) ஆகிய மூன்றும் வசமாகும். இப்படிப் பின்னல் நடுவே இருப்பதே பிரம்மாண்ட நிலையாகும். நீ செய்த கர்மமெல்லாம் உணர்வாய் மாறி புவனேஸ்வரி, திரிசூலி ஆகிய தெய்வங்களின் அருளாய் மாறும் என்பதை,

ஆகுவா ளந்திசந்தி யுச்சி யென்றால்
அப்பனே ரவிமதியுஞ் சுடர்மூன்றாகும்
ஏகுவாய் மூன்றுமொன்றாய்ப் பின்ன லாகி
இருந்திடமே பிரமாண்ட நிலையதாகும்
போகுமே நீ செய்த கர்மமெல்லாம்
புவனை திரிசூலிகையுடைக் கிருபையாலே
வாகுமே தழியோட சேர்த்தா யானால்
வாணியுந்தான் நாவில்நடஞ் செய்வாள் பாரே (காக.பு.பா.63)

என்னும் பாடலால் அறியமுடிகிறது.

## சாத்திரத்தை மறுத்தல்

எண்ணியெண்ணிக் காவியத்தை எடுத்துப் பாராய்
எந்நேரங் காமசிந்தை யிதுவே நோக்கும்
பண்ணிபன்றி பல குட்டி போட்டா லென்ன
பதியானைக் குட்டியொரு குட்டியாமோ
சண்ணியுண்ணி யிந்நூலை நன்றாய்ப் பாரு
சக்கரமும் அக்கரமும் நன்றாய்த் தோணும்
தண்ணி தண்ணி யென்றலைந்தால் தாகம் போமோ
சாத்திரத்திலே புகட்டித் தள்ளியேறே (காக.பு.பா.112)

என்னும் பாடலில் எண்ணி எண்ணி என் காவியத்தைப் படி, எப்பொழுதும் இதில் விருப்பம் கொள். இச்சிறுகாவியத்தைச் சிந்தித்தால் சக்கரங்கள் அவற்றில் உள்ள மந்திர எழுத்துக்கள் யாவும் அறிந்துகொள்ள முடியும்.

தண்ணீர் என்று சொல்லி அலைந்தால் தாகம் போகாது அதுபோலவே சாத்திரங்களைப் படிப்பதும் வீணானது என்கின்றார். மேலும்

நாட்டுவார் சித்தரெல்லாம் பேதமாக
நலம் போலே சாத்திரங்கள் கட்டினார்கள்
பூட்டியே மனிதரெல்லாம் நூலைப் பார்த்துப்
பூரணமாய் அண்டமதைப் பாராமல் தான்
காட்டிலே திரிந்தலைந்த மானைப் போலே
கபடமாய் வாய்ஞானம் பேசுவார்கள்
கூட்டிலே அடைந்திருக்கும் குயிலைப் பாரார்
கூறாத மந்திரத்தின் குறியைப் பாரே (காக.பு.பா.26)

என்பதில் பிரம்மம் ஒன்று தான் உலகில் அதன் சக்திகள் பலவாகப் பிரிந்துள்ளன. சிலர் சித்தர் போல் பிரம்மம் வேறு என்று வேறுபடுத்திக் கூறுவார்கள். சாத்திரங்கள் பல கட்டினார்கள். மனிதர்களின் மனதைப் பூட்டி பூரணமாய் அண்டத்தில் சேராமல் காட்டில் திரியும் மான் போலக் கபடத்தோடு வாய் ஞானம் பேசுவர். உடலுக்குள் உள்ள உயிரைப் பார்க்க மாட்டார்கள் சாத்திரம் பேசுவோர்கள். மேலும்

வல்லவர்போல் வேதபுராணங்காவ்யங்கள்
மந்திரங்கள் கோடானு கோடி யென்றும்
சொல்லுவார் கோவிலென்றுந் தீர்ந்த மென்றுந்
திருடர்கள்தாம் அலைந்து அலைந்து திரிவார் மட்டை
வெல்வதொரு பிரமநிலை யறியாமல் தான்
வேரற்ற மரம்போலே விழுவார் பாரே (காக.பு. பா.15)

எல்லாம் வல்லவர் போல் வேதம், புராணம், காவியம், மந்திரம் எனக் கோடிக்கணக்கில் கூறுவர். யோக நெறியில் நில்லாமல், பிரமத்தின் நிலையை அறியாமல் கோவில் தீர்த்தம் என்று திருடர்கள் போல் அலைந்து திரிவர். ஒரு நாள் வேரற்ற மரம் போல் இவர்கள் வீழ்வர் எனக் குறிப்பிடுகின்றார்.

## போலிக் குருமார்களைச் சாடுதல்

போலியான குருமார்கள் வேதம் கற்று உலகில் பிரம்மத்தை அறியாமல் போயினர். பெரியோரிடம் அகந்தையாய் வீண்பேச்சுகளைப் பேசுவர்; விரிவாகப் பல வேடமிட்டுக் காவி கட்டி, வெறுமையால் ஆடம்பரம் செய்து நாய் போல் அலைவர் என்பதை,

குறியென்ற உலகத்திற் குருக்கள் தாமும்
கொடியமறை வேதமெல்லாங் கூர்ந்து பார்த்தே
அறியாமற் பிரமத்தைப் பாரா மற்றான்
அகந்தையாய்ப் பெரியோரை அழும்பு பேசி
விரிவான வேடமிட்டுக் காவி பூண்டு
வெறும்பிலுக்காய் அலைந்திடுவான் நாயைப் போலே
பாரியாச மாகவுந்தான் தண்டு மேந்திப்
பார்தனிலே குறடிட்டு நடப்பான் பாரே (காக.பு.பா.27)

என்ற பாடலாலும்,

பாரப்பா சீடர்களை அழைப்பான் பாவி
பணம் பறிக்க வுபதேசம் பகர்வோ மென்பான்
ஆரப்பா பிரமநிலை காட்டா மற்றான்
ஆகாசப் பொய்களையு மவன்தான் சொல்வான்
நேரப்பா சீடனுக்குப் பாவமாச்சு
நிட்டை சொல்லுங் குருக்களுக்குந் தோடமாச்சு
வீரப்பா அடங்குகின்ற இடத்தைப் பாரான்
விதிபோலே முடிந்ததென்று விளம்புவானே (காக.பு.பா.28)

அப்பாவிகள் தம்மிடம் வருமாறு சீடர்களை அழைத்து உபதேசம் செய்வதாகக் கூறி பணம் பறித்துக் கொள்வர். பிரமத்தைப் பிறர்க்குக் காட்டாமலே அதிகமான பொய்யைப் பேசுவர். இதனால் சீடனும் பாவியாகிறான். நிட்டை சொல்லும் குருவுக்கும் இது குறையாக அமையும். யோகத்தின் மூலம் உயிர் அடங்கும் இடத்தினைக் கூறாமல் விதியினால்

நாம் இறப்பதாகக் கூறுவர் என்ற பாடலாலும் போலியான குருமார்கள் பற்றி உரைத்துள்ளார்.

## யோகத்தின் மூலம் கடவுளைக் காணுதல்

மனத்தை அண்டத்தில் செலுத்தினால் மூலாதாரம் நான்கும், கபால எட்டி தழும் ஒன்றாகச் சேரும். தவறுகள் செய்து மனத்தை வேறுபடுத்தாதே இதனால் கடவுளை உடலில் காண்பது தவறிப் போகும் என்பதை,

கண்டுகண்டு மனந்தானே அண்டஞ் செல்லக்
 கலைநாலும் எட்டிலையுஞ் சேர்ந்து போகும்
தண்டுமுண்டு செய்யாதே மனம்வே றானால்
 தற்பரத்தை எப்போதும் அறிய மாட்டாய்
தொண்டுசெய்து பெரியோரை அடுத்து மைந்தா
 தொழுதுநீ என்னூலை யன்பாய்க் கேளு (காக.பு.பா.29)

லீலைபோற் காணுமுகம் போலே காணும்
 நிலைபார்த்தால் புருடரைப் போற்றிருப்பிக் காணும்
ஆலைப்போற் சுழன்றாடுங் கம்பத்துள்ளே
 அரகரா சக்கரங்களாறுங் காணும்
வாலைப்போற் காணுமையா பின்னே பார்த்தால்
 மகத்தான அண்டமது கோவை காணுஞ்
சோலையா அண்டமதிற் சிவந்தான் வீசும்
 சிவத்திலே அரகரா பரமுங் காணே (காக.பு.பா.137)

என்னும் பாடல்களிலும், மேலும் சிலப் பாடல்களில் யோகத்தின் மூலம் கடவுள் நிலையைக் காணலாம் என்கின்றார்.

## சட்டைமுனி

இவர் யோகத்தையும், மவுனத்தையும் கைக்கொண்டால் ஞானம் உண்டாகும். பிராணாயாமத்தைச் செய்யும் போது தலையுச்சியை நினைத்துச் சிந்தை செய்ய வேண்டும். இது முதிர்ந்தால் விண்ணில் உள்ள உணர்வு

காவலுக்கு வரும். இரண்டையும் கூட்டும் போது புருவ மத்தியை நினைத்துக் கூட்ட வேண்டும். நாதத்தின் உணர்வு 'கும்' என்று ஏறும். வேறு ஒன்றில் இணைத்தால் மனத்தையும் சேர்ந்து மாட்டி நாதத்தை மறுபடியும் உற்று நோக்குக. தலை உச்சியில் உள்ள சிறுதுளை வழியே நாதம் ஓடுவது உணர்வுக்கு வருமானால், அதுவே முக்திக்கு அறிகுறியாக அமையும் எனக் குறிப்பிட்டுள்ளார். இதனை,

மூட்டையிலே யுலககிரி கொண்டு மூட்டு
முதிர்ந்தபின்பு விண்ணுள்கிரி வந்து காக்கும் (43)

என்னும் பாடலில் விளக்கியுள்ளார்.

## கடவுள் வணக்கம்

எங்கும் பரவிய உமாதேவியின் பாதம், அதையடுத்து நிற்கும் சிவனார் பாதம், கணேசர் பாதம், கலைவாணி, குரு சொரூபத்தில் நின்றோர், சின்மயம் ஆகியோர் பாதங்கள் என் நூலைப் புகழும்படி காப்பாராக, என்று,

அகண்டபரி பூரணமாம் உமையாள் பாதம்
அப்புறத்தே நின்றதோர் ஐயர் பாதம் (1)

என்பதில் குறிப்பிட்டுள்ளார்.

## சமயத்தைப் பிரித்தவர்களைச் சாடுதல்

எல்லாச் சமயத்திலும் சக்தியும், சிவமும் உண்டு சண்டாளர்கள் இதைப் பிரித்தனர். எல்லாச் சமயத்திலும் வேதாந்த சித்தாந்தம் உண்டு. இவற்றில் எது சாதகமாகும் என அறியாது தயங்கினர். எல்லாச் சமயத்திலும் நாதமும் விந்தும் உண்டு. அவற்றைக் கலக்காமல் கெட்டனர் உலகினர். எல்லா சமயத்திலும் மேல் உயர்வாக ஞானம் உண்டு. ஆனால் தாயான வாலையைக் கைவிட்டதால் தவறிப் போயினர் என்பதை,

சமயமெல்லாஞ் சக்தியுண்டு சிவமும் உண்டு
சண்டாளர் பிரித்தல்லோ தள்ளினார்கள்
சமயமெல்லாம் வேதாந்த சிந் தாந்த முண்டு
சாதகத்தைப் பாராமல் தயங்கினார்கள் (24)

என்னும் பாடலில் விளக்கியுள்ளார்.

## மனதையடக்கி உலகத்தில் உயர்ந்தோர்

நரகம் எனப்படும் பெண்ணாசை விட்டு நாதாந்த, வேதாந்த, சித்தாந்த, முடிவுகளைப் பார். உலகம் எல்லாம் மனத்தில் அடக்கி தேவி பூசையைச் செய்து, உடல் முதலிய அழிவன எல்லாம் நான் அல்ல என்று உணர்ந்து, பத்துவித தீட்சையும் கடந்து, சிவன் சொத்தை அனுபவிக்காது, வாதமெல்லாம் செய்ய முன் வராது நிற்பவரே உயாந்தோர் என அறிக என்பதை,

நரகமென்ற பெண்மேல் ஆசைவிட்டு
நாதாந்த வேதாந்த சித்தாந்த தம்பார்
நரகமென்ன உலகமெலா மனத்தில் வைத்து
நலமான தேவகிரி யையிலே நின்று
நரகமென்ன சடமுதல்நா மல்லவென்று
நாட்டினுள்ளே தசதீட்சை கடந்த பின்பு
நரகமென்ற சிவசொத்தை வறுமை தின்று
நாமறியோம் வாதமென்றே யிருப்பார்கானே (98)

என்பதால் அறியலாகின்றது.

முத்தியிந்த வாதிக்கு வருகுமென்று
மூச்சுமுதற் சிவன் சொன்னாரென்று சொல்லி
பத்தியிந்த சிவசொத்தை பெண்ணுக்கீந்து
பாழான விடயமெல்லாம் பண்ணிப் பண்ணி (101)

என்னும் பாடலில், சிவன் சொத்தான விந்துவைப் பெண்ணிடம் விட்டு பலவித பாழான செய்கைகள் செய்து, பஞ்சம யாசகமும் செய்து,

அகங்காரத்தில் அலைந்து திரிந்தவர்கள் நரகத்தில் சென்று கோடிக்கணக்கான பிறவிகளைக் கொள்வர் என்று சட்டைமுனி கூறியுள்ளார்.

### மவுன சமாதி நிலை

என்னை ஈன்ற கைலாய பரம்பரைக் குருவே, சமாதியுள் பல நெடுங்காலம் வாழ்ந்தேன். சிவாலயங்களில் பிச்சை ஏற்றுண்டேன்; உம்மைத் தவிர வேறு சிவமுண்டு என நான் அறியவில்லை. முக்குளிகையாகிய மவுனம், வாசியாகிய பயிற்சி, காயசித்தி ஆகியவற்றால் பெற்றேன். மனம் தெளிந்து இருக்கிறேன். யோகத்தில் துரிய மூலையை அடிக்கடி உணர்கிறேன். திரும்பவும் இதே உடம்புடன் நான் மீள்வேன் என்பதை,

மார்க்கமென்ன எனையீன் கைலாய மூர்த்தி
மகத்தான சமாதியுள்ளே கற்பம் வாழ்ந்தேன்
சேர்க்கமென்ன சிவாலயங்கள் பலியேற் றுண்டேன்
சிவமேது நீரன்றி வேறு காணேன் (31)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

### ஆத்மாவில் ஒன்றியிருப்பது தான் சமயம்

வேதாந்தமாகிய யோகம் தவிர பிற சாத்திரம், கரையில்லாத சமயம் ஆகிய இவை பொய்யென்று தள்ளுக. இன்ப துன்பத்தால் மட்டுமே எதிர்ப்பு, மறுப்பு, ஒன்றுபடல் முதலியன உண்டாகும். பற்று ஆகியவற்றை எல்லாம் கனவு என்று தள்ளுக. அகண்டமாகிய ஆத்மாவுக்குள்ளே ஒன்றி இயங்குவது மட்டுமே சமயம் என்று சொல்லலாம் என்பதை,

காணப்பா வேதாந்த சாத்திரம் செம்மை
கரைகற்ற சமயம்பொய் யென்று தள்ளி
ஆணப்பா திடப்பட்டாட் சேப மென்பார்
வீட்சணமுஞ் சீதளமுஞ் சுகதுக் கத்தால்

வீணப்பா மானாபி மானம் வந்து
    வெறும் வெளிபோற் சொப்பனமா மென்று தள்ளித்
தோணப்பா தாங்காட் லகண்டத் துள்ளே
    சொக்குவது சமயமென்று சொல்லாமே (பா.50)

என்னும் கருத்தை வெளிப்படையாகக் கூறுகின்றார்.

தன்னைப் பூரணமாக எண்ணுவது கைகடந்த சிவபூசை என்று சொல்வார்கள். எல்லா நூல்களும் வீணானது என்று தள்ளுவீராக. எல்லாத் துன்பத்தையும் நீக்குக. குருவை நிழலாகப் பின்பற்றினால் சச்சிதானந்தம் ஆவாய். தேவியை உபசரித்து மறவாது அவள் நாமம் சொல்லி வந்தால், இந்த உணர்வால் வெற்றியாகலாம் என்பதை,

காணப்பா இப்படியே தீர்த்தி யானால்
    கைகடந்த சிவபூசை யென்று சொல்வார்
வீணப்பா சகலநூ லென்று தள்ளு
    விரைந்து நின்ற விதியெல்லாம் விட்டே யோடி (பா.56)

என்னும் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

## மாயை புத்தி

ஆச்சப்பா மாயையுத்தி சொல்ல வென்றால்
    அனேகமுண்டு சூட்சுமமாய்ச் சொல்லக் கேளு
வாச்சப்பா தேசத்திற் பேதா பேதம்
    மருவியதோர் கிராமத்தில் கிராம பேதம்
ஓச்சப்பா திறங்களிலே திறங்கள் பேதம் ஓகோகோ
    சனங்களிலே யனேக பேதம்
வீச்சப்பா புத்திகளிற் பேதா பேதம்
    வெகுமோக மாயத்தால் தோன்றுங் காணே (74)

மாயை என்னும் உத்தி பற்றி சொல்வது என்றால் நிறைய உள்ளது. அந்தச் சூக்குமத்தை கேட்பாயாக. தேசத்தில் பல தேசபேதங்கள் உண்டு.

கிராமங்களில் இப்படிப்பட்ட கிராம பேதங்கள் உண்டு. திறமைகளிலும், மக்களிலும், அறிவுகளிலும் பல பேதங்கள் உள்ளன. இவையனைத்தும் மாயத்தால் உண்டானவேயாகும் என்கிறார்.

## சமய பேதத்தைப் பேசுவர் நிலை

வீறான சிலபேய்கள் சாங்கம் பேசி
விழித்திறந்து விழித்திறந்து திரிவர் தானே (77)

பேத உணர்வு வந்தால் மனத்தோடு பேத உணர்வில் போராடும் சுத்த வீரன் உருவின்றி மாய்வான். சில பேய் மனிதர்கள் விரிவாகப் பேதத்தையே பேசுவர், பிறந்து இறந்து திரிவர் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

## போலி குருமார்கள்

பல வீணர் பலர் உலகில் தாமே குரு என்று வேடம் போட்டு, வித்தைகள் செய்து, பணம் பறித்து பிழைப்பார். வேதாந்தம் ஏதுமில்லை. சாத்திரங்கள் யோகம் என்பார். வீணாக இப்படிப் பேசி உலகைக் கெடுத்து விட்டார்கள். வேடத்தால் பிறரை மயக்கி விட்டனர் என்பதை,

விருதன்றோ வுலகத்தில் ஆசா னென்று
வேடமிட்டு வேடமிஞ்சி மோடி யேற்றி
விருதன்றோ பணம்பறித்துப் பிழைப்பார் ஐயோ
வேதாந்த மொன்றுமில்லை சாங்க மென்பார்
விருதன்றோ கொடுத்துவிட்டா ருலகத் தோரை
வேடமென்று மயக்காலே மயங்கிப் போனார் [17] (196)

எனக் கூறுகின்றார்.

சட்டைமுனி அருளால் தன்னை ஆட்கொண்ட தட்சிணாமூர்த்தியே, மவுனத்தால் தான் தன்னை ஆட்கொண்டதாகவும் அவர் பாதத்தில் மலர் தூவியே நூறு பாடல்களில் ஞானம் சொன்னதாகவும் பிற குருவினர்களின்

பாதங்கள் போற்றி, பெரிய வாதங்கள் சொன்னதாகவும் ஞானத்தையும் பொய் எனும்படி மவுனத்தை உயர்த்திக் கூறியதாகவும் தம் சீடர்களுக்குத் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

**சுப்பிரமணியர்**

சுவாசத்தை இழுத்து விடுகின்ற மூச்சுப் பயிற்சி அதை முறையாகச் செய்து வந்தால் உடல் நோயின்றி நூறாண்டு வாழலாம் என்பதை இன்றைய மருத்துவ விஞ்ஞானம் ஏற்றுக்கொண்டு அதனைச் செயல்படுத்த மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகின்றன. ஆனால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே இறை தவயோகிகள் தமிழகத்தில் இருந்து மூச்சுப்பயிற்சியை விவரித்துள்ளனர். சுப்பிரமணியர் சுவாச மகிமையைத் தம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**சதுரகிரி பெருமை**

சதுரகிரி பெருமை கூறும் விதமாக அமைந்த பாடல் வழி

வாழென்று சொன்னவுடன் மயில்வீரன்தான்
மகத்தான சிவசத்திபத மேற்கொண்டே
ஆவென்று மயிலேறிக் கயிலாயத்தை
ஆவலுடன் சுற்றிவரும் போதிலே தான்
சூழென்றே இமயகிரி வடபால் சுத்த
சித்தமான தபோதனர்கள் கண்டு
தாள்பணிந்து வணக்கமதாய் நிற்கும்போது
தாபோதனர்கள் ரிடிகளுமே தாம்வந்தாரே (6)

சுந்தரமாயிருந்து 'தவங்காவாய் என்று
சுத்தசித்த மாய்த்தவத்தை தொடங்கினாரே (7)

நில்லப்பா சதுரகிரி முடியிற் சென்று
நிலையான பொதிகையிலே வாசமாகி (31)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

## இறை வழிபாடு

யோகத்தின் மூலம் இறைநிலையை அடையலாம் என்றும் உடலில் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு தெய்வம் உண்டு எனவும் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். நமசிவாயம், ஓம் நமசிவாய என்னும் மந்திரத்தினால் தியானம் மேற்கொள்ளும் போது மெய்யுணர்வினால் இறைவனைக் காணும் நிலையை,

உண்மையுடன் சுழுமுனையில் விண்ணென்றூணி
உறுதியுடன் ஆராத தீட்சை கேளு
நன்மையுடன் ஓங்-ரீங்-அங்-உங்கென் றோதி
நாட்டமுடன் பதினாறாம் உருவே செய்தால்
தண்மையுடன் கணபதியும் பிரகாசிப்பார்
தானமென்ற சுழுமுனையில் தன்னைப் பார்த்து
நுண்மையுடன் ஓம்நமசிவாய மென்றால்
நோக்கமுன்னே பிரமந்திரி சனமுமாமே (சுப்பிர.பா.17)

மேலும் 18 முதல் 32 வரையிலுள்ள பாடல்களில் இறைவனைச் சுவாசப் பயிற்சி மூலம் எவ்வாறு அடையலாம் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

## காரைச் சித்தர்

### தியானம்

மாளாத பெரிய சக்தி மனித சக்தி. ஒரு கணம் உணர்வால் எளிதில் அதை அடையலாம். மின்னல் போலும் பராசக்தி உள்ளேயே காணும் மார்க்கம் மீளாதது ஆளாக வேண்டும் என்று எப்போதாவது நினைப்பவர்க்கு ஞானப்பேறு கிடைக்கும். காமத்தைத் தூளாகத் தூக்கி எறிந்து சுழு முனையாகிய தீப கம்பத்தை உணர்ந்து தியானம் செய்யும் பொழுது,

மாளாத சக்தியடா மனித சக்தி
    மலிவாகக் கிடைக்குதடா கணத்துக் குள்ளே
மீளாத மார்க்கமடா மின்னாத் தாளை
    மேவியுனக் குட்காணும் வேதை மார்க்கம்
ஆளாக வென்றேனு மெப்போ தேனும்
    அனைவர்க்கும் கிட்டுமடா ஞானப் பேறு
தூளாகக் கம்பத்தைத் துரத்தி விட்டே
    துணையாகக் கம்பத்தே தூங்கு வாயே (காரை.சி.பா.1)

என்னும் பாடலில் அறியமுடிகிறது. மேலும்,

தூங்குவாய்ச் சாமத்தே விழித்துக் கொள்ளு
    தூங்காமல் தூங்கி வெறுந் தூக்கம் தள்ளு
நீங்காமல் நியமத்தே நிறைந்து நில்லு
    நிலமான சாமத்தைச் சுத்தம் செய்தே
ஆங்காரச் சாதியெலா மகற்றிப்போடு
    அன்பாக வாதித்தே விரட்டிப்போடு
பாங்காக ஆதித்தன் துணையாய் நிற்பான்
    பண்பாகப் போதித்தேன் சாதிப்பாயே (காரை.சி.பா.2)

என்னும் பாடலில் தூங்காமல் தூங்குதலாகிய வெறும் தூக்கத்தைத் தள்ளுக. வழிபாட்டு முறைகளில் சிறிதும் விலகாது நிற்பாயாக, அகங்காரத்துடன் சேர்ந்த எல்லாவற்றையும் நீக்கி அன்பாக வாதம் செய்து அப்புறப்படுத்துக. ஆதித்தன் துணையிருப்பான் என்று பிராணாயாமம் செய்வதைக் குறிப்பிட்டுள்ளார்.

## யோக சமாதி

ஊறுசுவை யொளிநாற்றம் ஒளியே யென்ன
    உலகத்திலே திரிந்து கடலிற்புக்கு
.......................................................
ஆறுவரக் குருவருளை யணைந்து பொங்கி
    அண்டாண்ட சாரத்தை யறிந்து கொண்டே

சாறுகொளச் சிந்தனையுங் குவிந்து நிற்கும்
சகஜநிலை யேயோக சமாதி கண்டீர் (காரை.சி.பா.8)

என்னும் பாடலில் சுவை, ஒளி, ஊறு, நாற்றம், ஒலி எனும் ஐந்து புலன்களும் உடலில் பதிந்து சம்சாரக் கடலில் மூழ்குவதால் பாதிப்படைக்கின்றன. இந்த ஆறு ஆதாரம் அறியக் குருவருளை எண்ணி, அண்டங்களின் சாரத்தையும் அறிந்துகொண்டு, சகஜமான நிலையில் யோக சமாதி காண்க என்று குறிப்பிட்டுள்ளார். யோகம் பற்றி 20, 11, 23, 24 ஆகிய பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளார்.

## மாயை

வேண்டும் என்கின்ற எண்ணத்தை விட்டு விடுக; தயங்கினால், சங்கடங்கள், பாவங்கள், காமம், வீண்விவாதம் மோகம் இவைகள் பெருகிவிடும். மாயையால் மயக்கமே உண்டாகும் என்பதை,

நிந்தித்தால் நாசமடா நினைவுப் புந்தி
நிலையமடா மாயைதான் மயக்குந்தானை (காரை.சி.பா.9)

என்னும் பாடலில் அறியமுடிகிறது.

## உடல்

சாரைக் கோட்டைக்குள்ள சாரம் சாரம்
சார்ந்தநவி சாரக்கற் பூரம் பூரம்
கூரைக்கோட் டைக்குள்ளே கோரம் கோரம்
கொள்ளாமற் சிவயோனிக் குள்ளாம் வீரம் (காரை.சி.பா.27)

என்னும் பாடலில் இந்த உடல் சாரமும் தலைமயிர் கொண்டுள்ள கோட்டை. அவற்றுள் பல கோரங்கள் உண்டு; அதனை ஏற்காமல் சிவயோனியில் வேதாந்தத்தை வைத்து முப்பூவினைக் காண வேண்டும். அவ்வாறு செய்பவர்கள் காரைக் கோட்டை எனும் பகுதியில் வந்த சித்தன் கரை கடந்த அண்டங்கள் பல கண்ட பக்தனாவான் என்கிறார். மேலும்

பத்தனடா சித்தனடா பரமயோகி
பார்பிழைக்க வேயிந்நூல் பகருகிறேன்
பித்தனடா பிந்தியவள் சித்தத்தாலே
பேயன்யாள் பேத்தலிவைப் பேணிப் பார்ப்பீர் (காரை.சி.பா.28)

என்னும் பாடலில் பரம யோகியே சித்தனுமாவான். சிவனும், உமையும் சேர்ந்து சித்தத்தைக் கவர்வர் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

## சித்தர் வேதாந்தம்

குண்டலினி யோகம் என்பது சாத்தியம் எனவும் இவ்வுடலில் குற்றம் அனைத்தையும் நீக்கி விட்டு, யோகம் செய்பவர்களுக்குச் சோதியாக இருப்பாள். சித்தர்கள் பலர் கணநேரமும் பிரியாது மனத்தில் இருக்கச் செய்து வணங்கினார்கள் என்பதை,

கர்ப்பையிலே தான் பிரித்துக் கண்ணி வைத்தே
கணவாதம் செய்திட்டார் சித்தர் பல்லோர் (காரை.சி.பா.3)

சித்தர் மனம் மகிழ்ந்தால் வெறும் விளையாட்டுக் கூட சித்தியாகி விடும். மனதை ஒருநிலைப்படுத்தி குற்றங்களை நீக்கி தவம் செய்வர். அதன் மூலம் சித்தியும் பெறுவர் என்பதை,

துத்தமறத் தானொடுங்கத் தூய்மை பெற்ற
துப்புறவே சித்திக்கு ஆம் துறவு கோலே (காரை.சி.பா.4)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

## சித்தத்தினைப் பேணல்

பயனற்ற சொற்களை மாற்றிப் பயனையே கூறல், பயனையும் இனிதாய்ப் பழமாகக் கூறல், கடுவழிகளை விட்டு நீங்கி, பார்வையில் அருளையே கொள்ளல், படைக்கப்படாத எதையும் தானாகக் காணல், பரம்பொருளும் ஆன்மாவும் பிரிக்க முடியாத ஒன்றே எனக் கூறி சித்தத்தைப்

பேணுதல் ஆகியவை இறைவனுக்குப் பிடித்த குணங்களாகும். இவை வந்தால் உள் ஒளியாகிய சுடர் காட்டும் துன்பம் விலகும். இதனை,

பயனில்லாச் சொல்லகற்றிப் பயனே கூறல்
பயனதையு மினிதான பழமாய்ச் செப்பல் (காரை.சி.பா.5)

என்னும் பாடலால் அறியமுடிகிறது. மேலும் சித்தர்கள் எல்லோரும் உண்மையை மறைத்தார் என்று கற்பித்துக் கூற வேண்டாம். சித்தர்களின் நூல்களைக் கற்கக் கையால் எடுத்ததுமே சித்தர் எல்லாரும் ஏற்றர் போல் உம்மைச் சுற்றி நிற்பர். சித்தம் தொடர்பு உடைய குணம் நிறைவதில் நாட்டம் கொள்வர். சிறிது மன அழுக்கைக் கண்டாலும் விலகிப் போவர். சித்தம் நிறைவானவர்க்கே சித்திகள் தோன்றும், சித்தம் ஒன்றாதவரின் மந்திரம் சிரிப்புக்கே உரியதாம் என்பதை,

சித்தரெலாம் உண்மைதனை மறைத்தாரென்றே
செப்பிமனப் பால்குடிக்க வேண்டாம் .............
சித்த நிறை வுள்ளவர்க்கே சித்தி தோன்றும்
சித்தமில்லார் வித்தையெலாம் சிரிப்பே கண்டீர்! (காரை.சி.பா.6)

என்னும் பாடல் வழி அறிய முடிகிறது.

## உருவ வழிபாடு எதிர்த்தல்

தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி எல்லாம் உருச் செய்து வழிபடுபவரை அவ்வழியில் மட்டும் போகச் செய்யாது வேறுபோக்கு காட்டிடுவர். பலவித வழிபாடுகள் செய்தாலும் உலகில் பூபாரம் குறைந்திடாது என்பதை,

தேவாரம் வாசகந்தான் திகழக் கூட்டித்
திருவாயின் மொழியெல்லாம் உருவாய்ச் சேர்த்து (காரை.சி.பா.7)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

கலியுகத்தில் யோகநிலைகள் மாறின. எல்லோரும் பொருளாசையால் மாறிப்போயினர். காமம், கோபம் முதலிய தீய குணங்கள் அதிகமாயின. மனிதனுக்குள்ள பூரணமான கடவுள் சக்திகள் மறைந்துள்ளன என்பதை,

யுகமாறிப் போச்சுதடா கலியுகத்தில்
யோகியவன் நிலைமாறிப் புரண்டு போவான் (பா.14)

என்னும் பாடலில் கடவுளைப் பூசைகளால் மட்டும் அறியக் கூடாது என்கிறார்.

## சமயத்தை வெறுத்தல்

கால நெறியைச் சொல்லக் கேள், ஆயிரமாம் ஆண்டில் வெடிகளால் வானத்தைப் பிளப்பர். வர்ணாசிரம தருமம் சிதையும், வரன்முறைகள் மாறும், சட்ட திட்டம் மாறி கோபதாபம் மிகும் என்பதை,

காலநெறி யாதுதுரைப்பேன் கேளாய் கேளாய்
காணவரு மாயிரமாம் வருடத்துள்ளே
...............................................................
சீலமுறும் வர்ணதர்மம் சிதைந்து போகும்
சீச்சீச்சி வரன்முறைகள் மாறிப்போகும்
........................................................................... (காரை.சி.பா.15)

என்னும் பாடல்களில் சமயப் பிரிவினை எதிர்க்கின்றார். மேலும்,

தீராத புயல்களெல்லாம் தினமுண் டாகும்
தீக்கங்கு எரிமலைகள் சிரிப்புக்கூடும்
தேராத நோய்களெலாம் தினமுண்டாகும்
திசைகலங்கம் பூகம்பத் திறமே சாடும் (காரை.சி.பா.16)

தெய்வமெலாம் விண்ணாடிப்போகும் போகும்
தீமையெலாம் மண்ணகத்தின் தெருக்கூத்தாகும்
........................................................................... (காரை.சி.பா.16)

என்னும் பாடல்களில் கடவுளை மனத்தினால் நினையாமல் வேறு வழிகளில் வெளிப்படுத்தினால் அதனால் ஏற்படும் அழிவினைப் பாடல்களில் விளக்கியுள்ளார்.

## தியானத்தில் தெய்வ நிலையறிதல்

தியானம் மேற்கொள்ளும் போது ஏற்படும் நன்மையின் நிலைகள், வெப்பு நோய் நீக்கும் மந்திரம் காண முடியும். வினைகளைப் போக்கும் ஆற்றலைக் காண முடியும். ஒன்பது கோடி லிங்கம் தோன்றும் அவற்றின் மேல் பராசக்தி ஆடுவாள். மாசுகள் யாவும் விலகிச் சுத்தமாகும். கைலாசத்தில் உள்ள சிவனை மயங்கச் செய்ய முடியும். கற்பங்கள் பல கழியும், காமதேனுவும் கறக்கும். காயத்திரியின் கனிவான அமுதம் கிட்டும் என்பதை

வெப்பெல்லாம் தீர்ந்துவிடும் வித்தை கண்டாய்
  வினையெல்லாம் போக்கிவிடும் விரலை கண்டாய்
அப்பப்பா நவகோடி லிங்கம் தோன்றும்
  அவற்றின் மேல் ஆடுகின்றாள் அன்னை யன்னை (காரை.சி.பா.25)

என்னும் பாடலில் தியானத்தின் சிறப்பினைக் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

பத்தனடா சித்தனடா பரமயோகி
  பார்பிழைக்க வேயிந்நூல் பகருகிறேன்
பித்தனடா பிந்தியவள் சித்தத்தாலே
  பேயன்யான் பேத்தலிவைப் பேணிப் பார்ப்பீர் (பா.28)

என்பதில் பித்தனாகிய சிவனும், பித்தியாகிய உமையும் சேர்ந்து சித்தத்தைக் கவர்வர் எனவும், பரமயோகியே பக்தனும் சித்தனுமாவான் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**தடங்கண்**

சித்தர் சமயத்தை நினைத்து வருந்துகிறது என் நெஞ்சம் என்று தம் பாடல்களில் சமயத்தை வெறுத்துப் பாடியுள்ளார். மூட நம்பிக்கையால் மனிதர்கள் செய்யும் செயல்களைக் கண்டித்துத் தன் நெஞ்சத்திடம் கூறி புலம்புவதாகப் பாடல் அமைந்துள்ளது.

## உருவ வழிபாடுகளை வெறுத்தல்

வெடிகளை முழக்கி, முரசுகள் முடுக்கி, உடுக்கைகளை இயக்கி, விதிர்ப்புறும் குரலால் வெற்றுரை சொல்லி, வீணாக ஒரு கற்சிலையைத் தூக்கிக் கொண்டு, 'குதிகுதி' என்று குதித்து, தெருவெல்லாம் இப்படிக்குக் குதித்து குனிந்து வீழ்வர் உருகுவர். இது சமயமா, இது தான் வழிபாடா என்று நினைத்தாலே என் மனம் வெட்கம் அடைகிறது என்பதை,

அதிர்வெடி முழக்கி முரசுகள் முடுக்கி
அலறிடும் உடுக்கைகள் துடிப்ப
விதிர்விதிர் குரலால் வெற்றுரை அலப்பி
வீணிலோர் கல்லினைச் சுமந்தே (1)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். மேலும்

அருவருப்பூட்டும் ஐந்தலை, நாற்கை
ஆனைபோல் வயிறுமுன் துருத்தும்
உருவினை இறைவன் எனப்பெயர் கூறி
உருள் பெருந் தேரினில் அமர்த்தி (2)

எண்ணெயால், நீரால், பிசுபிசுக் கேறி
இருண்டு புன்னாற்றமே விளைக்கும்
திண்ணிய கற்குத் திகழ்நகை பூட்டித்
தெரியல்கள் பலப்பல சார்த்திக் (3)

போய் மலை ஏறி வெறுங்கருங் கற்கே
    பொன்முடி, முத்தணி புனைவார் (8)
பாலொடு தயிர், நெய், கனி, சுவைப்பாகு
    பருப்பு நல் அடிசிலின் திரளை
நூலணி வார்தம் நொய்யையே நிரப்ப
    நுழைத்த கல் உருவின் முன் படைத்தே (9)

என்னும் பாடல்களில் ஐந்து தலையும், நான்கு கையும், ஆனை வயிறுமாக அருவருப்பாக இருக்கும் உருவங்களை இறைவன் என்று பெயர் சொல்லி, தமது தோள்களில் தெய்வ உருவங்களை அமர்த்தி வழிபடுகின்றனர். இத்தீய முறைகள் கண்டு என் நெஞ்சம் வருந்துகிறது.

எண்ணெயாலும், நீராலும் மஞ்சனம் செய்து, கற்சிலைக்கு நகைகள் அணிவித்து, மாலைகள் பலவும் தொடுத்து, கடும்புகை கிளப்பி, பார்ப்பனர் செய்யும் இச்செயலைப் பார்ப்பதற்குப் பலரும் கூடி மிதிப்படுவதும், அடிப்படுவதுமாக நிற்பர். இதுவா சமயம் என்கின்றார்.

மலையேறி கற்சிலைக்குப் பொன்முடி சூடுவர், முத்தணி பூட்டுவார்கள். இதுவா சமயம் எனவும் கற்சிலையின் முன் பால், தயிர், நெய், கனி, சுவைப்பாகு, பருப்பு, நல்ல பொங்கல் முதலிய குவியல்களைப் பார்ப்பனர் படைத்து மகிழ்வர். இந்தத் தீயசெயலைக் கண்டு என் நெஞ்சம் வருத்தமடைகின்றது என்று உருவ வழிபாடுகளை எதிர்த்தும் அதற்குச் செய்யும் சடங்குகளையும் வெளிப்படுத்துகிறார்.

**மூட நம்பிக்கை**

அழகிய உடல்மேல் சாம்பலைப் பூசி
    அருவருப் பாக்கலும், மகளிர்
கொழுவிய குழலை மொட்டையாய் மழித்துக்
    குரங்கெனத் தோன்றலும், அறியா
மழலையர் கையிலுட் காவடி கொடுத்து
    மலையின் மேல் ஏற்றலும் (4)

என்னும் பாடலில் உடல்கள் மேல் சாம்பலைப் பூசி அருவருக்கச் செய்வதும், மகளிர் கூந்தலை மொட்டையடித்தும், மழலைப் பிள்ளைகள் கையில் காவடி கொடுத்து மலைமேல் ஏறச் செய்தலும் மடமையான செயல் என்கின்றார்.

உடுக்கையை அடித்தே ஒருவன் முன் செல்வான்
ஒருவன்தீச் சட்டியும் கொள்வான்
எடுத்ததோர் தட்டில் பாம்புருத் தாங்கி
இல்தொறும் சென்று முன் நிற்பார் (6)

சமயம் என்னும் பெயரில் உடுக்கையை அடித்துக் கொண்டு ஒருவர் முன் செல்லவும் பின் ஒருவர் தீச்சட்டியை எடுத்துப் போவான். அதனைப் பார்த்து பெண்களும் மற்றவர்களும் தொழுவார்கள் என்றும்,

வேப்பிலைக் கொத்தும், விரிதலை மயிரும்
வெவ்விதின் மடித்திடு வாயும்
கூப்பிய கையும் கொண்டவள் ஒருத்தி
குரங்கென ஆடுவள் குதிப்பாள்
நாற்புறம் நின்றே வணங்குவர் மாக்கள்
நற்குறி கேட்டிட நிற்பார் [18] (7)

என்னும் பாடலில் சாமியாடும் பெண்களைக் குறிப்பிட்டுள்ளார். இதுவா சமயம் என்றும் வருத்தமடைகின்றார்.

தாய்மொழி பேணார், நாட்டினை நினையார்,
தம்கிளை, நண்பருங் கிரங்கார்.
தூய்நல் அன்பால் உயிர்க்கெலாம் நெகிழார்,
துடிப்புறும் ஏழையர்க் கருளார்,
போய் மலை ஏறி வெறுங்கருங் கற்கே
பொன்முடி, முத்தணி புனைவார் (8)

தாய்மொழியைக் கைக் கொள்ளார், நாட்டை நினைத்துப் பாரார், தம் உறவுக்கும், நட்புக்கும் இரங்க மாட்டார்கள். பிற உயிர்களிடத்தில் அன்பு கொண்டு நெகிழ மாட்டார். ஏழைகளுக்கு அருள் செய்ய மாட்டார்கள்.

ஆனால் கற்சிலைக்குப் பொன்முடி சூடுவர் என்றும் மூட நம்பிக்கைகளையும், அறியாமைகளையும் குறிப்பிட்டுள்ளார்.

**பலியிடுதல்**

நீண்டு காட்சி தரும் பல்லும், சினத்தோடு மடித்த வாயும் கொண்ட ஒரு கற்சிலையின் முன்னர் குடிவெறி கொண்டவர் போல் கூடிக் குதிப்பர். தீ வளர்த்து அதில் மிதிப்பர். ஆட்டைத் துடிதுடிக்க வெட்டி பலியிடுவர். அதன் இரத்தத்தைக் குடிப்பர். நாகரிகமற்ற இச்செயல் சமயமா என்பதை,

நீட்டிய பல்லும் சினமடி வாயும்
　　நிலைத்தவோர் கல்லுரு முன்னே
கூட்டமாய் மோதிக் குடிவெறித் தவர்போல்
　　குதிப்பர் தீ வளர்த்ததில் மிதிப்பார்
ஆட்டினைத் துடிக்க வெட்டி வீழ்த்திடுவார்
　　ஆங்கதன் உதிரமும் குடிப்பார் (5)

என்னும் பாடலில் பலியிடுதல் பற்றியும் நாகரிகமற்ற செயல் என்றும் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு அறியாமல் மூட நம்பிக்கையில் இருப்பவரை அன்பில்லாதவர்; இரக்கம் இல்லாதவர் வலிமையினால் பிறரை வருத்துபவர் என்றும் இவ்வாறு இருப்பவருக்காக என் மனம் வருந்துகிறது எனக் கூறுகின்றார்.

**இறைவனை அடைதல்**

மெய் உணர்வால் முதலில் தன்னை உணர்ந்து மெய்ம்மையெல்லாம் விளங்கிக் கொள்ள வேண்டும். பொய்யான புலன்களைக் கடந்து பேருண்மையைப் புரிந்துகொள்வதே இறையுணர்வாம். இதனை,

மெய்யுணர்வு எய்தித் தனைமுதல் உணர்ந்து
　　மெய்ம்மைகள் விளங்குதல் வேண்டும்

பொய்மிகு புலன்கள் கடந்து பேருண்மை
புரிதலே இறையுணர்வு அன்றோ (பா.11)

என்னும் பாடலில் உண்மையான மெய்உணர்வால் முதலில் தன்னை உணர்ந்து கொள்வதே இறையுணர்வாகும் என்கிறார்.

**மதுரை வாலைசாமி**

மக்களின் உடம்பு மலக்கூடு என்றும் (37), பெண்ணாசை கூடாது (46), கள் உண்ணலாகாது, கஞ்சா பயன்படுத்தக் கூடாது (73), சோம்பல் தூக்கம் ஆகாது (78), மனதைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும் (107), வாசியோகத்தால் பயன் பெறலாம் (95) போன்ற பாடல்களில் மக்களுக்கு அறிவுரை கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளன.

**பொய்க்குரு பற்றிய பாடல்கள்**

பொய்க்குருவைச் சாடும் விதமாக இவர் பாடல்கள் அமைந்திருக்கின்றன.

துருசு சுன்ன முடிந்தாச்சே அதைச்
சோதிக்க எட்டரை மாற்றாச்சு
பொருளைச் சொல்லிப் பணம்பறிப்பார் இவர்
பொய்க்குரு அல்லவோ ஞானப்பெண்ணே (பா.127)

என்று பொய்க்குருவைச் சாடுகின்றார். மேலும்,

தாடிவளர்த்துச் சடை வளர்த்து நல்ல
சந்யாசி என்றொரு வேடமிட்டே
ஓடித்திரிந்த விளையாட்டை அங்கே (பா.114)

தாடி வளர்த்தும், சடை வளர்த்தும் நல்ல சன்னியாசி என்று வேடமிட்டு அலையும் போலி குருமார்கள் என்கிறார். குகைகளில் வாழ்ந்தாலும் மெய்ப்பொருளைக் கண்டறியாதவர்கள் போலியாக வேடமிடுபவர் என்றும் குறிப்பிடுகின்றார்.

## உருவ வழிபாடு மறுத்தல்

சொல்லினும் கல்லினும் நில்லாதே பிரம சோதியை ஆதியைத் தூவெளியை என்பதை, கல்லில் தெய்வமில்லை என்னும் கருத்தை,

சொல்லினுங் கல்லினும் நில்லாதே பிரம
சோதியை ஆதியைத் தூவெளியை (பா.182)

என்னும் பாடலில் குறிப்பிட்டுள்ளார். மேலும்

தத்துவக் குப்பையைத் தள்ளுங்கடி வேத
சாத்திரப் பொத்தலை மூடுங்கடி
முத்திதரு ஞானவத்துவை வாவென்று
மூட்டிக் கும்மி யடியுங்கடி (பா.146)

என்னும் பாடலில் தத்துவம் என்பது குப்பை என்றும், சாத்திரம் என்னும் பொத்தலை மூடுங்கடி என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் தேசங்கள் போவதும், தெய்வமுண்டு என்பதும் ஆசையில் விளைந்ததே **(143)** என்னும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

## ஞானம்

கண்ணாலே மனக்கண்ணாலே யதைக்
கண்டாலே வழி யுண்டாகும் (பா.46)

என்னும் பாடலில் மனக்கண்ணால் இறைவனைக் காண முடியும் என்கிறார். இறைவனைப் பிரம்மஞான சோதியில் சேர்ந்து அடைவதே என்பதை,

நேசமெம் பிரம்மஞான சோதியைச்
சேர்ந்து கும்மி யடியுங்கடி (பா.143)

என்னும் பாடலில் விளக்கியுள்ளார்.

## பீரு முகம்மது

பீருமுகம்மது பாடல்களில் அமைந்த கருத்துகள் சிந்தனையைத் தூண்டும் பண்ணிசை சிறு சிறு கண்ணிகளாக அமைந்துள்ளன. செறிவான வகையில் சித்தம் குறித்த உணர்வூட்டும் செய்யுள் கருத்துகள் பாடல்களில் அமைந்துள்ளன. குறவன் – குறத்தி, வினா – விடை உருவில் வேதாந்த சித்தாந்த விளக்கங்கள் பல இவர் பாடல்களில் விதைக்கப்பட்டுள்ளன.

இவர் பாடல்கள் நாடு இன மத எல்லைகளை எல்லாம் கடந்து, தத்துவங்கள், அறிவு விளக்கங்கள், ஞான வெளிப்பாடுகள் ஒன்றாகி ஒத்த சிந்தனையுடன் இருக்கின்றன என்பதைக் காணமுடிகின்றன. காப்புச் செய்யுளில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல் எந்த மதத்தையும் சாராததாக உள்ளதால் கடவுள் ஒருவரே என்னும் கருத்து புலப்படுகின்றது.

## இறைவனை அறிவது

இறைவனை அறிவது எவ்வாறு என்று கேட்கும் கேள்விக்கு, இறைவன் எங்கும் இருப்பவன் தம் நினைவிலும் இருப்பவன் என்று பதில் கூறுவதாக அமைந்துள்ளது. அதனை,

> இறைவனை அறிவதிங் கெப்படிச் சொல்லடி சிங்கி - அது
> இறையெங்கு நின்றாடுந் தன் நினை வாகுமே சிங்கா (பா.25)

என்றும், தன்னுள் இறைவனை விளக்கும் தவம் என்ன சொல்லடி என்னும் கேள்விக்கு, தன்னை மறந்து தவத்தில் இருப்பது என்று பதில் கூறுவதை,

> தன்னுள் விளங்குந் தவமென்ன சொல்லடி சிங்கி - அது
> தன்னை மறந்து தவத்திலிருப்பது சிங்கா (பா.26)

ஒன்றையே நினைத்து ஒடுங்கியிருந்தால் தன்னை மறந்து இறைவனை அடையலாம் என்பதை,

என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி - அது
ஒன்றைப் பொருத்தி ஒடுங்கியிருப்பது சிங்கா (பா.27)

எங்கும் பரந்த பெரும் பொருளென்னடி சிங்கி - அது
அங்குமிங்கு மெங்குமாய்க் கண்ட பெருவெளி சிங்கா (பா.31)

எங்கும் நிறைந்திருக்கும் இறைவனை மெய்யால் அறியலாம் என்னும் பாடலால் அறிய முடிகின்றது. இவர் பாடல்கள் இறைவனை எவ்வாறு நம் உடலில் மெய்யுணர்வினால் அறிவது என்பதை விளக்கும் விதமாக அமைந்துள்ளன.

## சூரியானந்தர்

சூரியானந்தர் **13** பாடல்களிலும் யோகத்தினை வலியுறுத்தியுள்ளார். யோகம் எவ்வாறு மேற்கொள்ள வேண்டும் என்பதை பதின்மூன்று சூத்திரங்களுக்குள் அடக்கிச் சொல்வேன் மற்றையோர் உண்மைகளைச் சொல்ல மறந்ததாகவும், சிவன் ஆகிய தட்சிணாமூர்த்தி, உமைக்குச் சொல்ல அவள் எனக்குச் சொன்னால் என்று முதல் பாடலில் பாடியுள்ளார்.

## உயிர் பிறப்பு

ஆதியில் உப்பே ஆகாசம் முதலிய ஐம்பூதங்களாய் நின்றது. அந்த விந்துவினால் தான் எல்லாம் உண்டானது எல்லாவற்றுக்கும் மூலமான அந்த உப்பு மிகுந்த காரம் உடையது. அதிலிருந்து பிரிந்த மண்ணாகிய பூதமே எல்லாம் வளரும் சாரமாகியது. அந்த மூலமான உப்பைக் காண முடியாததால் தான் கலக்கமானது மலம், சலம் ஆகிய இவை மூலமாக அந்த மூலமும் கரைந்து வெளியேறக் காணலாம் என்பதை,

அறைந்திட்ட வகையேது வுப்பே ஆதி
    ஆகாச விந்துவினால் ஜெனித்தபிண்டம்
மறைந்திட்ட வுப்பதுவே காரங்காரம்
    மண்ணான வுப்பதுவே சாரஞ்சாரம்

கறைந்திட்ட வூசரத்துங் கேற்றவுப்பைக்
காணமற் போனதினாற் கலக்கமாச்சு
இறைந்திட்ட மலஜலமாய்க் காணலாகும்
இந்த விரண் டோரிடத்தி லிருக்கும்பாரே (சூரி. பா.2)

என்ற பாடலால் அறியமுடிகிறது. உடம்பிலுள்ள மூலாதாரமான உப்புக்கு இட பிங்களம், குண்டலினி ஏறும் சுழுமுனை என்பன சூக்குமமாக இருக்கும். அதற்கும் சூக்குமம் ஈசன் இருப்பதாம் என்கிறார். மேலும் உடல்களில் உண்டாகும் யோனிகளை நான்கு வகையாகக் கருதும் போது எழுவகைத் தோற்றங்கள் உண்டாகும். பிரபஞ்சமாகிய அண்டமும் உடல்களாகிய பிண்டமும் ஒன்றாகும் உண்மைகளை அறியலாம் எனக் குறிப்பிடுகின்றார். இதனை,

இருக்கின்ற வுப்பினுக்கு மூலாதாரம்
இந்துவொன்று இரவியொன்று வன்னியொன்று
பெருக்கின்ற வீசனுக்குச் சூட்சமுந்தான்
பிரிதிவியே தூலமெனப் பேசலாகும்
கருக்கொண்ட யோனியிலே நாலுபேதம்
கருதையிலே யெழுதோற்றங் காணலாகும்
உருக்கொண்ட ஜீவஜெந்து அனேக முண்டாம்
உற்றுப்பார் அண்டபிண்ட முண்மைதானே (சூரி.பா.3)

என்ற பாடல் வழி விளக்கியுள்ளார்.

### சித்திகளின் நிலை

காயத்தைச் சித்தி பண்ணி அழியாது காக்காவிட்டால், அடி முடியாக நமக்குள் இருக்கும் யோக ஆதாரங்களின் பயன் வீணாகும். எனவே குண்டலினி முதல் மூச்சுப் பயிற்சி செய்து, தொண்டையில் அம் என்று மூச்சை நிறுத்தி, மவுன யோகத்துடன் 1008 இதழ் கொண்ட தாமரை ஆகிய தலை உச்சியை நினைத்து உறவு கொள்க என்பதை,

பெருமையென்ற காயசித்தி பண்ணாவிட்டாற்
பேரான அடியோடு முடியும் போச்சு
அருமையென்ற குண்டலிக்குள் வராகிபூசை
அப்பனே கண்டமதி லங்கென் றூணு
புருவமையத் துள்ளேவு மென்று கும்பி
போதமென்ற மவுனத்தை கைக்குள்ளாச்சி
தருமவித்தை பிரகிருதி மூச்சாடாது
சகஸ்திரத்தெண் மலர்பதத்திற் சார்ந்து நில்லே (சூரி.பா.9)

என்னும் பாடலடியில் உணர்த்தியுள்ளார். மேலும்,

நில்லாத மூலிகையாற் காயசித்தி
நிஷ்டைமவு னத்தாலே யோக சித்தி
கொல்லாத மூலமதில் அபானசுத்தி
கூடாம லிருந்து விட்டாலேத முத்தி
சொல்லாத வீசனுப்பு மதிசூதத்திற்
சூட்டினேன் வெள்ளையென்ற சூடன்வித்தை
எல்லாரு மிந்தவிதம் பாடமாட்டார்
இதமான சூதகத்தின் வெடியுப்பாச்சே[19] (சூரி.பா.10)

என்னும் பாடல்களின் மூலிகைப் பயனால் காயசித்தியும், மவுனத்தால் யோக சித்தியும், மூலாதாரத்தில் அபான வாயுசுத்தி செய்வதன் மூலம் முக்தியடையலாம். சூதமே ஈசனாகிய உப்பு என அறிக. யாரும் இவ்வளவு வெளிப்படையாகக் கூறியதில்லை என்பதை அறிக எனச் சித்திகளின் நிலையைக் குறிப்பிட்டுள்ளார்.

## யோகப் பயிற்சி

மூச்சைக் கட்டி தினமும் உள்ளுக்குள் பயிற்சி செய்தால் வாயு கட்டுப்படும். மூலாதாரத்தில் ஓம் என்று தொடங்கி, நமசிவாய என்று பிராணாயாமம் செபிப்பவர்க்கு இது உணர்வாகும். உள்ளிழுத்த காற்றை அலையாது அடக்கி வைத்து மெல்ல மெல்ல வெளியேறுமாறு செய்க.

இவ்வாறு செய்யும் பொழுது காலப்பொழுதாகிய மாத்திரையை மறந்து விடாதே. அப்பொழுது தான் காய கற்பமாகும். செந்தூரம் ஆகிய குண்டலினி நெருப்பு சேரும் போது மனம் கலங்கிடாதே. அப்பொழுது தான் அமிர்தம் உண்டாகும் என்பதை,

செல்வதென்ன ரேசகத்தை வெளிவிடாதே
துடியான பூரகத்தைப் பின்னிடாதே
வெல்வதென்ன கும்பகத்தை யடிவிடாதே
மேலேற்று மாத்திரையை மறந்திடாதே
செல்வதென்ன கற்பத்தை மறந்திடாதே
செந்தூரஞ் சேர்க்கையிலே சிதறிடாதே
சொல்வதென்ன அமுதமதிலே பிறக்குமிந்தக்
குளிகைக்குச் சாரணைசெய் குணமுமாற்றே (சூரி.பா.13)

என்னும் பாடலில் மூச்சுப் பயிற்சிகளின் பிரிவுகளைக் குறிப்பிட்டுள்ளார். பூரகம் உள்மூச்சு, ரேசகம் வெளிமூச்சு, கும்பகம் அடக்கும் மூச்சு ஆகும். மாத்திரை என்பது மூச்சை ஒரு மடங்கு இழுத்து நான்கு மடங்கு அடக்கி இரு மடங்கு விடுவதாம், ஒரு மடங்கு என்பது பதினாறு வினாடி என்பது இலட்சிய எண். அவரவர் முயற்சியே அளவாகக் கொள்ள வேண்டும் என்கிறார்.

## தொகுப்புரை

சமய நோக்கு என்னும் நான்காம் இயலிலிருந்து பெறப்பட்ட முடிவுகள்:

1. உயிர், நாடி, உருவ வழிபாடு போன்றவை சித்தர் பாடல்களில் எவ்வாறு அமைந்துள்ளன என்பது ஆராயப்பட்டுள்ளது.
2. மக்களின் அறியாமையைப் போக்கிட சித்தர் பாடல்கள் உணர்த்தும் செய்திகள் மற்றும் மூட நம்பிக்கை, சமயச் சடங்குகளை மறுத்து கூறிய கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன.
3. சமயக் கொள்கைகள், மாயை உணர்வுகள் இறைவனை மனதில் வைத்து வழிபடுதல், உயிர் நிலையாமை, உடலின் இழிவு, உருவ வழிபாடுகளைச் சாடுதல், போலிக் குருமார்களைச் சாடுதல், யோகத்தின் மூலம் கடவுளைக் காணுதல் ஆகியன இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. எஸ்.பி. இராமச்சந்திரன், **சித்தர் உடல் தத்துவம்**, பக்.84–86.
2. மு. வரதராசனார், **மொழி வரலாறு**, ப.
3. இரா. மாணிக்கவாசகம், **சித்தர் பாடல்கள், தமிழ் இலக்கியக் கொள்கைகள்**, தொகுதி II, ப.222.
4. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.7.
5. மேற்படி, ப.233.
6. மேற்படி, ப.217.
8. மேற்படி, ப.226.
9. எஸ்.பி. இராமச்சந்திரன், **சித்தர் உடல் தத்துவம்**, பக்.122–123.
10. த. கோவேந்தன், **சித்தர் பாடல்கள்**, ப.228.
11. மேற்படி, ப.223.
12. மேற்படி, ப.234.
13. மேற்படி, ப.389.
14. மேற்படி, ப.367.
15. மேற்படி, ப.370.
16. மேற்படி, ப.406.
17. மேற்படி, ப.363.
18. மேற்படி, ப.457.
19. மேற்படி, ப.435.

# பொருளகராதி

| | |
|---|---|
| அக்கினி(1)அக.சி-48:1 | - நெருப்பு |
| அசித்தும்(1)அக.சி-21:2 | - சடப்பொருள் |
| அஞ்சார் கள்(1)அக.சி-31:1 | - பயமில்லாதவர்கள் |
| அத்தி(1)அக.சி-17:1 | - நாடிகளில் ஒன்று.அஸ்தி-யானை.(ஆறு ஆதாரத்தாமரை இதழ்கள் தோறும் ஒவ்வொரு வடமொழி இருக்கும்) |
| அப்பு(1)அக.சி-81:2 | - நீர் |
| அறைய(1)அக.சி-28:2 | - சொல்ல |
| ஆகமம்(1)அக.சி-10:1 | - நூல் |
| ஆறாரும்(1)அக.சி-23:1 | - ஆறாறு முப்பத்தாறு தத்துவங்கள் (ஆன்மதத்துவம்-24-வித்யா தத்துவம்-7-சிவதத்துவம்-5-(36) |
| ஆறு(1)அக.சி-34:1 | - ஆறுஆதாரங்களில் யோகம் பயில்வதும் தீர்த்தச் சிறப்பேயாகும்.வழி |
| ஆறு தத்துவம்(1)அக.சி-10:1 | - ஆறு ஆதாரங்கள் 1.மூலாதாரம் ( முதுகுமுன் அடி)<br>2.சுவாதிட்டானம்(சிறுநீர்த்துளை)<br>3.மணிப்பூரகம்(தொப்பூள்)<br>4.அநாகதம்(மார்புநடு)<br>5.விசுத்தி(தொண்டைக்குழி)<br>6.ஆக்ஞை(புருவமத்தி) |
| இச்சை(1)அக.சி-79:2 | - விருப்பம் |
| இந்து(2)அக.சி-47:1,47:2 | - சந்திரன் |
| இரவி(2)அக.சி-47:1,47:2 | - சூரியன் |
| இறை(3)அக.சி-19:1,27:2,79:2 | - கடவுள் |
| ஊனம்(2)அக.சி-13:2,54:2 | - குறைபாடு |
| ஊனுன்(1)அக.சி-39:1 | - உடல் |
| எண்பத்தொருபதம்(1)அக.சி-66:1 | - முப்பத்து முக்கோடி தேவர்கள்-நாற்பத்து எண்ணாயிரம் ரிசிகள் (33+44=81) இரண்டும் சேர்ந்தால் 81 வகைப் பகுதியாகும். |
| ஐந்து பெரும்பூதம்(1)அக.சி-4:2 | - நிலம்,நீர்,தீ,வளி,வான் |
| ஐம்பத்தோரட்சரம்(1)அக.சி-17:1 | - ஆறாதாரங்களுக்கும் உரிய ஐம்பத்தோர் எழுத்துக்கள். |
| ஒப்பனை(1)அக.சி-81:1 | - அழகு செய்து கொள்ளல் |
| ஓக்கம்(1)அக.சி-6:2 | - உயர்ச்சி |
| கிரியை(1)அக.சி-25:2 | - கடவுளை ஆகம விதிப்படி வழிப்படல் |

| | |
|---|---|
| குஞ்சிதபாதம்(1)அக.சி-52:2 | - நாட்டியத்துக்காகத் தூக்கி வளைந்தகால் |
| குதர்க்கம்(1)அக.சி-80:1 | - வீண் உரையாடல் |
| கோலம்(1)அக.சி-80:1 | - வேடம் |
| சகலமாய்(1)அக.சி-18:1 | - உருவுள்ளது |
| சங்கற்பம்(1)அக.சி-33:1 | - மனஉறுதி |
| சரியை(1)அக.சி-25:1 | - கடவுளைக் கோயிலில் வழிபடல் |
| சலம்வரும்(1)அக.சி-41:2 | - தந்திரம் |
| சாலோகம்(1)அக.சி-25:1 | - கடவுளுடன் ஓர் இடத்தில் வாழ்தல் |
| சித்து(1)அக.சி-21:2 | - அறிவுள்ளது.(பேரறிவுப்பொருள்) |
| சின்மயம்(1)அக.சி-82:2 | - அறிவு வடிவான நிலை |
| சூத்திரம்(2)அக.சி-33:1,38:1 | - தந்திரம் |
| சூதானம்(1)அக.சி-86:2 | - விழிப்புடைமை |
| தராதலம்(1)அக.சி-2:2 | - பூமி |
| தாணு(1)அக.சி-48:2 | - சிவன் |
| தாள்(1)அக.சி-1:1 | - பாதம் |
| தேயு(1)அக.சி-12:1 | - தீ-நெருப்பு |
| தேன்(1)அக.சி-58:1 | - யோக சித்தியால் வரும் அமிர்தம் |
| தோடம்(1)அக.சி-73:1 | - குற்றம் |
| நஞ்சு(1)அக.சி-1:1 | - விடம் |
| நடம்(1)அக.சி-3:1 | - கூத்து |
| நாதம்(2)அக.சி-3:2,4:1 | - ஒலி |
| நாயகன்(1)அக.சி-1:1 | - தலைவன் |
| நாலுபாதம்(1)அக.சி-5:1 | - சரியை,கிரியை,யோகம்,ஞானம்(நான்கு இதழ்த் தாமரையின் மூலதாரம்) |
| நிட்டை(1)அக.சி-85:2 | - சிவயோகம் |
| பசாசம்(1)அக.சி-72:1 | - பிசாசு |
| பசுக்கள்(1)அக.சி-36:2 | - ஆன்மா |
| பரம்(3)அக.சி-3:2,32:2,51:1 | - சுமை |
| பரவை(1)அக.சி-2:1 | - கடல் |
| பராபரம்(1)அக.சி-2:1 | - கடவுள் |
| பாசம்(5)அக.சி-32:1,32:2,36:2,42:2,60:2 | - ஆன்மாவைப் பந்தித்து நிற்கும் பலங்கள் |
| பாவிக்க(1)அக.சி-20:1 | - நினைக்க |
| பிருதிவி(1)அக.சி-11:1 | - மண்(மண்பாங்கான மூலாதாரம்) |
| புவனம்(1)அக.சி-16:1 | - உலகம் |
| மண்டலம்(1)அக.சி-10:2 | - மூன்று மண்டலங்கள் 1.சூரியமண்டலம்(வலதுகண்)<br>2.சந்திர மண்டலம்(இடதுகண்)<br>3.அக்கினிமண்டலம்(புருவமத்தி) |

மரக்காவில்(1)அக.சி-69:1 - மரங்கள் உள்ள சோலை
மலம்(1)அக.சி-15:1 - மாசு
மலையாதே(1)அக.சி-1:2 - மயங்காதே
மன்னும்(1)அக.சி-60:1 - விளங்கும்
மித்தை(2)அக.சி-7:2,17:2 - மாயை(நுண்பூதங்கள் கண்ணால் பார்பாதற்கு முடியாதவை எனவே மித்தை என்றார்.
முத்தன்(1)அக.சி-35:2 - முக்திபெற்றவன்
வாக்காதி ஐந்து(1)அக.சி-6:1 - வாக்கு,பாதம்,பாணி,பாயுரு,உபத்தம் என்னும்ஐந்து கன்மேந்திரியங்கள்
வாசா மகோசரம்(1)அக.சி-75:1 - சொல்லுக்கு எட்டாதது (முற்பிறவி வாசனைகள் குழுமிய தொகுப்பு)
வான்பொருள்(2)அக.சி-12:2,61:1 - தெய்வம்
விண்டேனே(1)அக.சி-29:1 - சொன்னேனே
வேழம்(1)அக.சி-69:2 - விளாம்பழத்தைக் கெடுக்கும் ஒரு நோய்
அறுகோணவீதி(1)அழு.சி-5:3 - நான்காம் யோக ஆதாரமாகிய அநாகதம் (மார்பின் நடுப்பகுதி)
ஆக்கினை(1)அழு.சி-2:3 - தண்டனை
ஆயத்துறை(1)அழு.சி-29:3 - ஆய்வுக்குரிய இடம்
உத்திரத்தை(2)அழு.சி-30:2,30:3 - உத்திரமாகிய தலைப்பகுதி
உழுவை(1)அழு.சி-21:2 - புலி
கஞ்சாவெறியனடி(1)அழு.சி-27:3 - கஞ்சாப் பழக்கமுள்ள வெறியன்
கடைத்தெரு(1)அழு.சி-13:1 - கடைசி ஆதாரம்(ஆறாம்ஆதாரம்)
கந்தமூலம்(1)அழு.சி-29:1 - கிழங்கு-குண்டலினியைத் தொடர்பு கொண்டு
கள்ளர்(2)அழு.சி-23:1,23:4 - ஐம்புலன்கள்
கள்ளனடி(1)அழு.சி-27:1 - கள்ளத்தனம் செய்பவன்
காட்டானை(2)அழு.சி-13:1,13:4 - விசுத்தி என்ற ஐந்தாம் ஆதாரம்
காமகலத்தியானம்(2)அழு.சி-16:1 - சக்தி வழிபாட்டில் எல்லாச் சித்திகளும் தருவதாகும்.
காயப்பதிதனிலே(1)அழு.சி-29:1 - மூலாதாரம்
காவனம்(1)அழு.சி-12:3 - சோலை(பந்தல்)
குதர்க்கம்(1)அழு.சி-1:2 - வீண் உரையாடல்
கைசேதமாகும்(1)அழு.சி-27:3 - வீணே அழிவதற்குள் அஞசாதே
சாகாத்தலை(1)அழு.சி-25:2 - சாகாததலை எனும் ஆத்மா(இறந்து போகாத ஆத்மா)
சாதிலிங்கம்(1)அழு.சி-21:1 - லிங்கம்
சாயச்சரக்கு(1)அழு.சி-21:1 - அவுரி
சுற்றாரும்(1)அழு.சி-19:4 - சுற்றத்தார்
செந்தூரம்(1)அழு.சி-22:3 - சுழுமுனை என்பதாகும்
தணல்(1)அழு.சி-25:2 - நெருப்பு

தன்னை மறந்தார்(2)அழு.சி-28:2,28:3 - ஆத்மாவை அறியாதவர்

தாய்தந்தை(1)அழு.சி-28:2 - சிவம்-சக்தி

தாழைப்பழம்(2)அழு.சி-9:2,9:3 - தாழ்வான வழியில் செல்வது(யோகம் தவிர மற்ற செய்வதாம்)

நாட்டார்(2)அழுகணி-13:2,13:3 - உடம்பில் உள்ள பிறநாடிகள்

நிட்டூரன்(1)அழு.சி-27:2 - கொடியவன்

நெய்வார்த்து(1)அழுகணி-4:2 - பசுநெய்

நேயமில்லா(1)அழு.சி-27:2 - நேசமில்லாத

பஞ்சாயக்காரர்(1)அழு.சி-2:2 - நடுவர்கள் ஐவர்

பற்றற்றநீர்(1)அழுகணி-18:4 - தூய ஆத்மா

பாசி(1)அழு.சி-18:1 - மாயஉணர்வுகள்

பாடககால்(1)அழு.சி-5:1 - ஒருவகைக்கால் ஆணி

பாடாணம்(1)அழு.சி-22:1 - நஞ்சு-விசம்

பாதாளமூலி(1)அழு.சி-22:1 - கொடிவகை-மூலிகை

பாமம்(2)அழு.சி-16:2,16:3 - கோபம்

பாவியடி(1)அழு.சி-27:1 - திருத்துவதற்கு யாரும் முன்வராத பாவி

பாமூரிலே(1)அழு.சி-10:1 - நஞ்சுக்கொடி

புரவி(1)அழு.சி-6:1 - குதிரை

பொட்டு(1)அழு.சி-21:3 - சாந்துப்பொட்டு

போகாப்புனல்(1)அழு.சி-25:3 - விந்து

மாயப்பிணி(1)அழு.சி-29:2 - யோகமுயற்சி

மாயச்சுருளோலை(1)அழு.சி-29:4 - மரணஓலை

மாயப்பொடி(1)அழு.சி-21:2 - மஞ்சள் பொடி

மூக்கால் அரும்பு எடுத்தல்(1)அழு.சி-15:1 - மூச்சை உள்ளுக்கு இழுத்தல்

வாலுழுவை(1)அழு.சி-21:2 - அரிசி

வாழும்சரக்கெடுத்தே(1)அழு.சி-29:2 - பிராணாயாமம்

வாழைப்பழம்(2)அழு.சி-9:1,9:4 - வாழைப்பழம் என்பது யோகமுயற்சி

வெங்காயநாற்று(1)அழு.சி-17:3 - தீச்சுடர்

வெட்டுண்டசக்கரம்(1)அழு.சி-32:1 - பெண் உறுப்பைக் கூறியது(இடக்கர்அடக்கலாய்)

வெண்டாரை(1)அழு.சி-22:2 - பிங்களநாடி

வேகாதகால்(1)அழு.சி-25:3 - பிராணன் எனும் காற்று உடலில் தோன்றுவது (உடல் தீயால் மாறுதல்அடையாத பிராணன்)

வேணதனம்(1)அழு.சி-32:1 - வேண்டிய செல்வம்

வேதாந்தவீடு(1)அழு.சி-10:2 - யோகவழி

அட்டசித்தி(1)கடு.சி -19:2 - அணிமா,மகிமா,இலகிமா,பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம்,வசித்துவம் என்னும் எண்வகைச் சித்திகள். (அணிமா:அணுவைப்போல் சிறிதாதல். மகிமா:இமயம் போன்று உயர்தல்.இலகிமா:உடல் எடையே இல்லாமல் லேசாகுதல்.கரிமா:உடல் தங்கம் போல்வலுவாகுதல்.பிராத்தி:அனைத்தையும் வலுவாக்குல்.பிராகாமியம்: கூடுவிட்டு கூடுபாய்தல். வசித்துவம்:அனைத்தையும் தன் வயப்படுத்துதல். ஈசத்துவம்:நினைத்ததையெல்லாம் படைத்து அனுபவித்தல்.

அறம்(1)கடு.சி-8:1 - அறங்கள் முப்பத்திரெண்டு

ஆண்டி(1)கடு.சி -5:1 - பக்தன்

உள்ளு(1)கடு.சி -24:1 - எண்ணிபார்

எங்கும்சுயப்பிரகாசன்(2)கடு.சி-18:2,35:1 - எங்கும் பிரகாசிக்கும் வெற்றியுள்ள கடவுள்

ஏடணைமூன்று(1)கடு.சி-6:2 - மண்,பெண்,பொன்,ஆசைகள் மூன்று.(விருப்பம்)

ஐவர்(1)கடு.சி-14:1 - மெய்,வாய்,கண்,மூக்கு,செவி என்னும் ஐம்பொறிகள்.

ஓர்ந்தறிவாய்(1)கடு. -32:2 - ஆழ எண்ணி

கடம்(1)கடு.சி -34:1 - உடம்பு

கலை(1)கடு.சி-12:2 - உணர்வு

களிகூர்ந்து(1)கடு.சி -23:2 - மகிழ்ச்சி மிகுந்து

இக்காயம்(1)கடுவெளி -4:1 - இவ்வுடம்பு

குயவன்(1)கடு.ச-5:1 - படைக்கும் கடவுள்

கெண்டு(1)கடு.சி-8:2 - செல்வம்

சம்போகம்(1)கடு.சி-32:2 - கூடல் அனுபவம்

சன்மார்க்கம்(1)கடு.சி-27:2 - தூய்மையான நன்னெறிகள்

சாதநிலைமை(1)கடு.சி-9:2 - உண்மை நிலை

துங்கம்(1)கடு.சி-18:2 - பெருமை

தூடணம்(1)கடு.சி-6:1 - இகழ்ந்து பேசுதல்

தூறு(1)கடு.சி-11:2 - இகழ்ச்சி

தோண்டி(1)கடு.சி -5:2 - உடம்பு

நந்தவனம்(1)கடு.சி-5:1 - பிரபஞ்சம்-நிழலற்றவெளி

நால்வகைக்கோட்டைகள்(1)கடு.சி-15:1 - நான்கு மனத்தின் பகுதிகள்- மூலாதாரத்தின் நான்கு இதழ்ப்பகுதிகள்

நாலாறுமாதம்(1)கடு.சி-5:1 - பத்து மாதத்தில் ஓர் உடல் பிறக்கும் என்பதற்கு நாலாறு என்ற சொல் பயன்தந்தது. (24-ஆன்ம தத்துவங்களைக் கொண்டு ஓர் உடல் கொடுக்குமாறு படைப்புக்கடவுளைக் கேட்டல்)

பத்தி(5)கடு.சி-3:2,19:1,19:2,30:2,31:1 - இறையன்பு
பலரிற்புகல(1)கடு.சி-29:1 - பலர்முன்னே சொல்ல
பாம்பு(1)கடு.சி-28:1 - ஆண் குறியைக் குறித்தது
புங்கம்(1)கடு.சி-18:2 - உயர்வு
பொங்கம்(1)கடு.சி-18:1 - மகிழ்ச்சி
மைவிழியார்(1)கடு.சி-25:2 - விலைமகளிர்
இந்திரனை(1)காளை.சி-3:2 - இந்திரதெய்வம்
உழுதுமிட(1)காளை.சி-2:2 - உழுதல்
எடுத்தேன்(1)காளை.சி-3:2 - எடுத்தல்
எல்லோரும்(1)காளை.சி-1:1 - அனைவரும்
ஓரணைதான்(1)காளை.சி-2:1 - ஓர் அணைத்தல்
சந்திரரும்(1)காளை.சி-3:1 - சந்திரன்
சூரியரும்(1)காளை.சி-3:1 - சூரியன்
தோழா(6)காளை.சி-1:1,1:2,2:1,2:2,3:1,3:2 - தோழமை
நோக்கியடா(1)காளை.சி-3:2 - பார்த்தல்
பழுத்தது(1)காளை.சி-1:2 - கனிந்தது
பள்ளம்(1)காளை.சி-1:2 - குழி
பள்ளம்உழ(1)காளை.சி-1:1 - குழியை உழுதல்
பார்த்துவர(1)காளை.சி-1:2 - பார்த்து வருதல்
பொய்கையிலே(1)காளை.சி-3:1 - பொய்கை
மூவணையும்(1)காளை.சி-2:1 - மூன்றுஅணைத்தல்
வெள்ளை(1)காளை-2:2 - வெண்மைநிறம்
அந்தரம்(1)குதம்பை.சி -14:1 - ஞானவெளி
இச்சிப்பு(2)குதம்பை.சி -11:1,11:1 - விருப்பம்
உண்காயம்(2)குதம்பை.சி -27:1,27:1 - உண்ணப்படும் மருந்துகள்
உத்தாரம்(2)குதம்பை.சி -32:1,32:1 - வினாவுக்குரிய விடை
உத்தியம்(2)குதம்பை.சி -8:1,8:1 - உத்தியோகம்-யாகவகை
ஏகாந்தகம்(2)குதம்பை.சி -13:1,13:1 - தனியிடத்திருந்து தவம் செய்தல் (தனிமை-தனியிடம்)
கண்டாரை(1)குதம்பை.சி -25:1 - கடவுளை
கற்பங்கள்(2)குதம்பை.சி -2:1,2:1 - வாழ்நாளை நீடிக்கச் செய்யும் மருந்துகள்
காணாமல்கண்டு(1)குதம்பை.சி -3:1 - புறக்கண்ணால் காணமல் அறிவால் அறிந்து
குதம்பாய்(32)குதம்பை.சி 1:1,2:1முதல்32:1 - காதணி அணிந்தவள்
கோலங்கள்(2)குதம்பை.சி -26:1,26:1 - துறவிவேடம்
சஞ்சலம்(2)குதம்பை.சி -4:1,4:1 - மனஅலைவு
சட்கோணம்(2)குதம்பை.சி -17:1,17:1 - அறுங்கோணச்சக்கரம்
தூசத்தங்கள்(2)குதம்பை.சி -10:1,10:1 - இலக்கணநூல்கள்
ஞானம்(2)குதம்பை.சி -15:1,15:1 - அறிவு தரும் நுல்கள்

| | |
|---|---|
| தேங்காய்ப்பால்(2)குதம்பை.சி -28:1,28:1 | - தென்னங்கள் |
| தேவாரம்(2)குதம்பை.சி -30:1,30:1 | - தெய்வ வழிப்பாட்டுக்குரிய சிலை |
| நட்டணை(2)குதம்பை.சி -18:1,18:1 | - நடமாடும் கதைகள் |
| நடுவணை(1)குதம்பை.சி -9:1 | - புருவநடு-புருவமத்தி |
| நாட்டம்(1)குதம்பை.சி -9:1 | - பார்வை |
| பட்டயம்(2)குதம்பை.சி -1:1,1:1 | - உறுதிச்சான்றாகத் தரும் செப்புப்பட்டயம்(விருதுகள்) |
| பத்தாவும்(1)குதம்பை.சி -32:1 | - தலைவன் |
| பத்தியம்(2)குதம்பை.சி -19:1,19:1 | - செய்யுள் |
| பத்திரம்(2)குதம்பை.சி -16:1,16:1 | - உரிமைப்பத்திரம் |
| பூத்தானம்(2)குதம்பை.சி -23:1,23:1 | - உலகில் வழிபடும் இடங்கள் |
| மாங்காய்ப்பால்(1)குதம்பை.சி -28:1 | - தலையிலிருந்து வரும் குண்டலிப்பால் |
| மாத்தானை(1)குதம்பை.சி -23:1 | - பெரியபகைவர்(ஐம்புலன்கள்) |
| முட்டாங்கம்(2)குதம்பை.சி -21:1,21:1 | - உடம்பின் இடங்களைத்தொடும் செயல் |
| முத்திரை(2)குதம்பை.சி -6:1,6:1 | - யோகமுத்திரை |
| மோகாந்தம்(2)குதம்பை.சி -12:1,12:1 | - மோகத்தை விளைவிக்கும் அழகு |
| வாதாட்டம்(2)குதம்பை.சி -5:1,5:1 | - சொற்போர் |
| வெட்டவெளி(1)குதம்பை.சி -1:1 | - பரவெளி |
| வெண்காயம்(1)குதம்பை.சி -27:1 | - சத்துவகுணம் |
| வேகாமல்வெந்து(1)குதம்பை.சி -12:1 | - உலக நெருப்பில் வேகாமல் அறிவு நெருப்பில் வெந்து |
| அக்கரம் (104:2) பாம். சி | - எழுத்து |
| அக்கட்செவி (30:1) பாம். சி | - அங்கண்செவி |
| அங்குசத்தால் (76:2) பாம். சி | - யானையைச் செலுத்தும் குத்துக்கோல் |
| அங்கை (14:1) பாம். சி | - உள்ளங்கை |
| அட்டதிக்கும் (17:1,37:1,38:1) பாம். சி | - எட்டுத்திசையும் |
| அட்டநாகபந்தம் (39:1) பாம். சி | - எட்டுத்திசை நாகங்களின் தொடர்பு |
| அண்டம் (103:2) பாம். சி | - உலகம் |
| அந்தரம் (113:3) பாம். சி | - ஆகாயம் |
| அமைந்து(120:2) பாம். சி | - தடுமாறி |
| அரண்கோலிக்கொள்ளு (106:2) பாம். சி | - பாதுகாப்பை உண்டாக்கிக் கொள் |
| அரு (7:1) பாம். சி | - உருவில்லாதது |
| அளி (114:2) பாம். சி | - அன்பு |
| அனந்தனை (36:1) பாம். சி | - பாம்பு வகைகள்(அட்டமாநாகங்கள்- அனந்தன், குளிகன்,வாசுகி,பதுமன், தக்கன்,கார்கோடன். |
| அனாதியார்(102:1) பாம். சி | - தோற்றம் அறியமுடியாத பரம்பொருள் |
| ஆங்காரம்(79:2,116:2) பாம். சி | - செருக்கு |

| | |
|---|---|
| ஆணிக்குடம் (42:3,126:1) பாம். சி | - ஆதாரமானஇடம்(சித்திரம்எழுதிய அரசன்குடம்) திருமணவீடுகளில் அரசன் ஆணைக்குப் பரிசு தரும் குடம்அரசன்ஆணைக்குடம்அரசாணிக்குடம்எனவந்தது. |
| ஆயத்துறை(118:4) பாம். சி | - சுங்கம் |
| ஆலம் (119:2) பாம். சி | - விசம் |
| ஆலச்சயனத்துமால்(119:4) பாம். சி | - ஆலிலைமேல் பள்ளிகொண்ட திருமால் |
| ஆழி (85:1) பாம். சி | - கடல் |
| ஆறுகலைக்குஞ்சு (98:1,106:1) பாம். சி | - அறுகோணம் கொண்ட அநாகதச்சக்கரம் |
| உண்டை (60:1,113:3,121:2) பாம். சி | - குறுக்குஇழை |
| உளவன் (128:3) பாம். சி | - உளவாளி |
| ஊத்தை (60:1,128:3) பாம். சி | - அழுக்கு |
| ஊழி (85:3) பாம். சி | - உலக முடிவுக்காலம் |
| எல்லாவார்க்கும்(111:2) பாம். சி | - எல்லோர்க்கும் |
| ஐம்புலன்கள் (111:1) பாம். சி | - ஐம்பொறி உணர்வுகளைகுறிப்பது |
| ஒறுத்தோம் (51:2) பாம். சி | - தண்டித்தோம் |
| ஓக்காளம் (97:3) பாம். சி | - வாந்திக்குணம் |
| ஓகை (97:3) பாம். சி | - மகிழ்ச்சி |
| ஓங்கார(116:1) பாம். சி | - பிரணவத்துக்குக் காரணமான நாதம் |
| கங்கனம் (22:3) பாம். சி | - காப்பு |
| கட்செவி (39:3) பாம். சி | - பாம்பு |
| கடகம் (42:3) பாம். சி | - காப்பு |
| கடம் (18:2,19:3) பாம். சி | - உடல் |
| கடம் அழியாது (18:2,19:3) | - தன் உணர்வு அழியாது |
| கடிந்தோம் (57:4) பாம். சி | - துறந்தோம் |
| கண்டனை (73:2) பாம். சி | - தடை |
| கந்தமூலங்கள் (75:1) பாம். சி | - கிழங்குகள் |
| காத்தன் (108:4) பாம். சி | - தலைவன் |
| கரண (117:2) பாம். சி | - இந்திரியம் |
| கரவாமல் (22:4) பாம். சி | - ஒளியாமல் |
| கழறாமல் (57:4) பாம். சி | - சொல்லாமல் |
| கள்ளமனம் (13:3,89:3,115:3) பாம். சி | - வஞ்சமனம்(அவநம்பிக்கைகொண்ட மனம்) |
| கற்பம் (80:2) பாம். சி | - வாழ்நாளை நீடிக்கும் காயகற்பம் |
| கற்பகாலம் (18:1,102:3) பாம். சி | - ஊழிக்காலம் (பல யுகங்கள் சேர்ந்த காலப்பகுதி) |
| கற்புநிலை (15:2) பாம். சி | - முன்னோர் கற்பித்த ஒழுக்கநிலை |
| கன்னல் (57:3) பாம். சி | - கரும்பு |
| காசில் (91:1) பாம். சி | - குற்றமற்ற |
| காசினி(49:2) பாம். சி | - பூமி |

காசை (79:3) பாம். சி - நாணற்புல்
காயம் (118:1) பாம். சி - உடம்பு
காலம் (18:1,79:4) பாம். சி - மரணகாலம்
காலகாலனை (89:3) பாம். சி - காலத்தை நீக்கியவன்,காலத்திற்கு எமனாகியவன், காலத்தால் கட்டுப்படுத்த முடியாதவன்
காவிக்கை (47:1) பாம். சி - குடை
கான் (122:2) பாம். சி - வாசனை
குடக்கு (127:3) பாம். சி - மேற்க்குத்திசை
குண்டலம் (22:1) பாம். சி - காதணி
குவை (44:1) பாம். சி - குவியல்
கும்பிக்கே (53:4) பாம். சி - வயிறு,ஒறு நரகம்
குளிகை (17:2) பாம். சி - மாத்திரை
கூகைமாந்தார் (53:3,55:3) பாம். சி - கோட்டான் போன்ற குருடர்கள்
கூத்தன் (40:4) பாம். சி - சிவன்
கோகிலம் (58:3) பாம். சி - குயில்,கிளி
கோதை (58:3) பாம். சி - மாலை
கோவை (58:3) பாம். சி - கோவைப்பழம்
கோன் (55:4,105:3) பாம். சி - தலைவன்
சகத்தன் (102:1) பாம். சி - நடுநிலையானவன்
சகம் (75:3) பாம். சி - உலகம்
சகத்தோர் (99:2) பாம். சி - உலகோர்
சங்கை (14:3) பாம். சி - சந்தேகம்,ஐயம்
சத்தாது (69:1) பாம். சி - இரசம்,இரத்தம்,எலும்பு,நிணம்,இறைச்சி மூளை,சுக்கிலம் என்னும் 7பொருட் கூறுகள்.
சந்தமும் (14:3,77:4) பாம். சி - என்றும்
சாங்காலம் (116:3) பாம். சி - சாகும் நேரம்
சித்தப்பால்(51:2) பாம். சி - துறவுநெறி
சிமயத்தில்(99:3) பாம். சி - உச்சி
சிருட்டிகள்(32:1) பாம். சி - படைப்பு
சிற்சொரூபம் (76:3,81:2) பாம். சி - மெய்யறிவு,அறிவின் வடிவமாக இருக்கும் இறைவன்
சீயுமல (63:1) பாம். சி - சீழ்
ஆதாரச்சீனி (57:3,114:2) பாம். சி - மரநங்கூரம்
சுக்கன் (114:2) பாம். சி - கப்பலை நடத்தும் கருவி
சுருதி (122:2) பாம். சி - வேதம்
சுழுமுனை (96:3,118:2) பாம். சி - இடைகலை,பிங்கலைகளின் இடைநாடி
சூட்சுமம் (8:2) பாம். சி - நுட்பமான பொருள்
சூத்திரம் (128:1) பாம். சி - பொம்மையை ஆட்டக்கட்டிய கயிறு

சூத்திரம் (68:2) பாம். சி - நூற்கயிறு,தந்திரம்

சூதவான்மணி (81:3) பாம். சி - இரசக்குளிகை(பாதரசம் இதன் மூலம் செய்யப்படும் ஒரு மணியைவாயில்போட்டுவான்வழிப்பறக்கும்சித்துசெய்வர்

செங்கதிரை(31:2) பாம். சி - சூரியன்

செண்டு (51:1) பாம். சி - பூச்செண்டு போன்ற

செந்நீரும் (63:1) பாம். சி - இரத்தம்

செப்பு (54:2) பாம். சி - பொற்கலசம்

தக்கன் (35:3) பாம். சி - பாம்பு வகைகள்

தசநாடி (69:1,4) பாம். சி - இடைகலை,பிங்கலை,சுழுமுனை, காந்தாரி,அத்தி, சிங்குவை,சங்கினி, புருடன்,குகு,கன்னி,அலம்புடை உயிர்காற்று இயங்கும் 10 நாடிகள்.

தசநாடி (17:4,18:3) பாம். சி - பிராணன்,அபானன்,உதானன், வியானன் ,சமானன், நாகன்,கூர்மன், இருகரன்,தேவதத்தன்,தனஞ்சயன், என்னும் பத்து வாயுக்கள்.

தமனியம் (14:4) பாம். சி - பொன்

தளைக்கு (21:3) பாம். சி - கட்டு

தற்பரம் (80:4) பாம். சி - பரம்பொருள்

தார் (30:3) பாம். சி - அடையாளமாலை

தாணு (116:3) பாம். சி - சிவன்

தாலம் (80:3) பாம். சி - உலகம்

துணையடி (15:4,41:2) பாம். சி - இரண்டு அடிகள்

துரகம் (117:3) பாம். சி - குதிரை

தூமணி (70:3) பாம். சி - தூய மாணிக்க மணி

தெள்ளு (115:4) பாம். சி - தெளிந்த

தேக்கெடுத்து(97:1) பாம். சி - தெவிட்டுமளவு

தொம் (6:2) பாம். சி - ஒலிக்குறிப்பு

தொந்தோம்(116:4) பாம். சி - தொடர்பு,சம்பந்தம்

தோகையை(51:1) பாம். சி - பெண்ணை

தோடு (72:1) பாம். சி - மேல்ஓடு

நடுவன் (40:2) பாம். சி - எமன்

நவவாயில்(67:1) பாம். சி - உடம்பில் உள்ள ஒன்பது வழிகள்

நாதன் (32:3,94:4,126:3) பாம். சி - தலைவனாகிய சிவபெருமான்

நாப்பண்(104:1) பாம். சி - நடுவில்

நிணமும் (63:1) பாம். சி - கொழுப்பு

நிமலனை (54:4) பாம். சி - குற்றமற்ற இறைவன்

நீற்றினை (39:2) பாம். சி - திருநீறு

நெக்கு நெக்கு (54:3(2)) பாம். சி - மிக நெகிழ்ந்து

| | |
|---|---|
| பதனம் (28:4) பாம். சி | - பாதுகாப்பு,பக்குவம் |
| பாரி (6:1,15:4,41:1,90:2) பாம். சி | - குதிரை |
| பாரியாரம் (62:3) பாம். சி | - மருத்துவம் |
| பலியிரப்போர் (128:2,129:3) பாம். சி | - பிச்சைஎடுப்போர் |
| பன்னாதே (122:4(2)) பாம். சி | - சொல்லாதே |
| பன்னிப்பன்னி (2:4(2),124:3) பாம். சி | - மீண்டும் மீண்டும் |
| பாதப்புயம் (108:1) பாம். சி | - திருவத்தாமரை |
| பாவு (127:1) பாம். சி | - நெடுக்கு இழை(நரம்புக்கரியது) |
| பாவை (58:1) பாம். சி | - சிலை |
| பாழ் (8:1,45:2,72:4,107:4) பாம். சி | - வெட்டவெளி,வெற்றுவெளி |
| பிடாரனார் (112:3) பாம். சி | - பாம்பாட்டி |
| பிண்டம் (5:1) பாம். சி | - உடல் |
| பீழை (39:1) பாம். சி | - மலம் |
| பீற்றல் (67:1) பாம். சி | - கிழியல்,பிய்ந்த துவாரம் |
| புரவி(120:1) பாம். சி | - குதிரை |
| பூந்திருவே (58:2) பாம். சி | - இலக்குமி |
| பூவை (58:1) பாம். சி | - நாகண வாய்ப்புள் (மைனா) |
| பெட்பு (110:2) பாம். சி | - விருப்பம் |
| பை (8:1) பாம். சி | - படம் |
| பொக்கிசம் (58:2) பாம். சி | - கருவூலம் |
| பொற்பு (3:2) பாம். சி | - அழகு |
| போதப்பொருள் (12:3) பாம். சி | - அறிவுச்செல்வம் |
| போதம்(100:1,112:3) பாம். சி | - ஞானம் |
| போரில் (93:3) பாம். சி | - வைக்கோற்போர் |
| மண்டலமிட்டு(21:2,24:3,29:1,87:1) பாம். சி | - வட்டமிட்டு |
| மதித்துவிடுவோம் (28:3) பாம். சி | - கணக்கிட்டு விடுவோம் |
| மறலி (44:2) பாம். சி | - எமன் |
| மன்ன (35:1) பாம். சி | - நிலைபெற்ற வாசுகி,பசுமன் |
| மாயனுக்கு (23:2) பாம். சி | - திருமால் |
| மும்மூர்த்திகள்(106:2,4) பாம். சி | - பிரமன்,திருமால்,சிவன்(அயன், அரி,அரன்) |
| மெய்யன் (49:4) பாம். சி | - கடவுள் |
| மெல்லி(57:2) பாம். சி | - மென்மையானவன் |
| மேரு (85:1) பாம். சி | - ஒருமலை |
| மோதகங்களும்(46:1) பாம். சி | - கொழுக்கட்டை |
| யாளி (34:1,120:1) பாம். சி | - சிங்கத்தைவிட வலிமையான விலங்கு |
| வச்சிரத்திற்கு(19:1) பாம். சி | - உறுதியான ஆயுதம்(இந்திரனின் ஆயுதம் இடியினால் செய்யப்பட்டது) |

வத்துவை (6:1,66:1) பாம். சி - பரம்பொருள்
வல்லபம் (16:2,31:4) பாம். சி - திறமை,ஆற்றல்,சாமர்த்தியம்
வல்லி (57:2) பாம். சி - கொடிபோன்றவள்
வாகுவலயம் (42:1) பாம். சி - தோள்வாளை
வறையோடு (60:4) பாம். சி - வறுக்கும் சட்டி
வாசியை (129:1) பாம். சி - உயிர்காற்று,பிராணவாயு
விண்டவர்கள் (105:2) பாம். சி - சொன்னவர்கள்
விண்டிடார்களே (105:1) பாம். சி - கூறமாட்டார்
விரகம்(117:1) பாம். சி - காமநோய்
வையாளி (43:2,120:1) பாம். சி - குதிரைச்சவாரி
அழற்சி(1)கண.சி-81:2 - வெப்பம்
ஆரணம்(1)கணபதி.சி-27:4 - மறை
ஆரிய(2)கணபதி.சி-18:4,28:4 - அரிய
இணையடி(5)கணபதி.சி-35:4,62:4,68:4,71:4,81:4- இரண்டடி
இரவி(1)கணபதி.சி-20:3 - கதிரவன்
ககனம்(1)கணபதி.சி-38:2 - வானம்
கஞ்சமாமலர்(1)கணபதி.சி-0:2 - தாமரைப்பூ
கடமதில்(1)கணபதி.சி-68:1 - குடம்
காலியை(1)கணபதி.சி-65:1 - நாற்கால் விலங்கு(பசு)
குஞ்சரம்(1)கணபதி.சி-0:4 - யானை
குக்குடங்கள்(1)கணபதி.சி-49:2 - கோழிகள்
குண்டலி(2)கணபதி.சி-5:3,18:2 - மூலாதார ஆற்றல்
குணக்கு(2)கணபதி.சி-25:2,35:3 - கோணல்
குருபரன்(2)கணபதி.சி-34:4,77:4 - பிள்ளையார்
கூட்டினில்(2)கணபதி.சி-10:3,24:4 - உடலுக்கு
சிற்பரம்(1)கணபதி.சி-29:4 - கடவுள்
சுணங்கன்(1)கணபதி.சி-25:2 - ஆண்நாய்
சுந்தர(1)கணபதி.சி-2:4 - அழகிய
செடமதில்(1)கணபதி.சி-68:2 - உடல்
தச்சிலாவீடு(1)கணபதி.சி-59:4 - மோட்சவீடு
தபனன்(1)கணபதி.சி-56:1 - சூரியன்
தற்போதம்(3)கணபதி.சி-7:2,11:3,27:1 - ஆணவம்
நஞ்சமுதருந்து(1)கணபதி.சி-8:4 - விடத்தை அமிழ்தமாக உண்ணும்
நாடகம்(1)கணபதி.சி-82:1 - நாட்டியம்
நிராமயம்(1)கணபதி.சி-91:2 - நோயின்மை
நிராதாரத்தின்(1)கணபதி.சி-27:3 - ஆதாரமாற்றது (கடவுள் தன்மை)
பஞ்சைபாதங்கள்(1)கணபதி.சி-18:1 - கொலை,பொய்,களவுகள் அருந்துதல்,குருநிந்தை

| | |
|---|---|
| வாரணம்(1)கணபதி.சி-14:1 | - கோழி |
| வாரணன்(1)கணபதி.சி-27:1 | - பிள்ளையார் |
| விரகம்(1)கணபதி.சி-26:1 | - காமம் |
| அட்டகசங்கள்(1)பீர்முகமது--62:1 | - எட்டுத்திக்கு யானைகள் |
| அண்ணினும்(1)பீர்முகமது--32:1 | - நெருங்கினாலும் |
| அத்தன்(1)பீர்முகமது--36:2 | - தந்தை |
| அறை(1)பீர்முகமது--1:2 | - இருள் அறை |
| அன்பத்தோர் அட்சரம்(1)பீர்முகமது--40:1 | - வடமொழியின் 51 எழுத்துக்கள் |
| ஆணியான்(1)பீர்முகமது--33:1 | - ஆதரவானவன் |
| இடைகலை(2)பீர்முகமது--56:1,56:2 | - இடமூக்கு |
| உற்பனம்(1)பீர்முகமது--41:2 | - பிறப்பு |
| உன்னால்(1)பீர்முகமது--50:2 | - நினைத்தல் |
| உன்னாமல்(1)பீர்முகமது--1:2 | - நினையாமல் |
| கதிர்மதி(1)பீர்முகமது--35:2 | - சூரியன்,சந்திரன் |
| கத்தன்(1)பீர்முகமது--36:1 | - தலைவன் |
| கலிமா(1)பீர்முகமது--30:1 | - குதிரை |
| தூர்(1)பீர்முகமது--13:1 | - வேர்களின் செறிவு |
| தேட்டம்(1)பீர்முகமது--45:2 | - கவலை |
| தோணிய(1)பீர்முகமது--34:2 | - தோன்றிய |
| நாட்டம்(1)பீர்முகமது--45:2 | - விருப்பம் |
| பிங்கலை(3)பீர்முகமது--55:2,56:1,56:2 | - வலமூச்சு வழியாக வரும் மூச்சு |
| அருபமுத்தி(1)உ.ரிசி-12:2 | - அரூபமுத்தியே |
| இரசவாதம்(1)உ.ரிசி-4:2 | - தாழ்ந்த உலோகத்தை உயர்ந்த உலோகம் ஆக்குதல் (தங்கம் ஆகுதல்) |
| இளப்பம்(1)உ.ரிசி-6:4 | - இளக்காரம் |
| குதிரைமட்டம்(1)உ.ரிசி-5:1 | - குதிரையாகிய மூச்சுப்பயிற்சி |
| கும்பித்தல்(1)உ.ரிசி-3:4 | - கும்பகம் செய்தல்,மூச்சை அடக்குதல் |
| குருபீடம்(1)உ.ரிசி-9:1 | - புருவமத்தி |
| கெட்டபுத்தி(1)உ.ரிசி-13:1 | - தீமையான புத்தி |
| சதாசிவனார்(2)உ.ரிசி-5:2,9:1 | - இது உடம்பில் உள்ள கடவுள் நிலையாகும் இதனை புருவமத்தயில் உணர்வர். |
| சந்திரகலை(1)உ.ரிசி-10:3 | - சந்திரநாடி |
| சந்திரகாந்தம்(1)உ.ரிசி-3:1 | - இடைகலைநாடி சந்திரசக்தியை ஈர்க்கும். |
| சரபீ(1)உ.ரிசி-8:1 | - அட்சரபீஜம் |
| சிரவணந்தான்(1)உ.ரிசி-12:2 | - நினைவு கூறும் பகுதி |
| சிவானாரை(1)உ.ரிசி-5:2 | - சாதசிவனை |
| சுடர்தான்(2)உ.ரிசி-3:2,12:1 | - சுழுமுனை நாடி |

சுவாசம்(1)உ.ரிசி-13:2 - மூச்சுகாற்று
செனனமெடுத்து(1)உ.ரிசி-6:3 - பிறவி எடுத்து
சொருபமுத்தி (2)உ.ரிசி-11:4,12:1 - முத்தி தரும் கடவுள் வடிவமாகுதல்
சோடசமாம்(1)உ.ரிசி-10:3 - சந்திரக்கலை
தியானம்(1)உ.ரிசி-5:2 - தியானம் செய்தல்
தூலதேகம்(1)உ.ரிசி-12:1 - தூலஉடம்பு
நடு(1)உ.ரிசி-3:2 - நடுஉச்சி
நாலும்(1)உ.ரிசி-10:2 - சந்திரநாடி
பரப்பிரமம்(1),ஞாலவட்டம்(1)1:4 உரோமரிசி-1:2- தலைக்குமேல் சுடராக விளங்கும் பகுதியே பரப்பிரமம்
பிடரி(1)உரோமரிசி-10:1 - பிடரி வழியாகத் தியானம் உண்டாக்கும்
பிரமரந்த்ரம்(1)உ.ரிசி-8:1 - தலையில் உள்ள சகஸ்ராரம் என்னும் பகுதி
பின்கலை(1)உ.ரிசி-3:1 - பிங்களா நாடி சூரிய சக்தியை ஈர்க்கும்
புரியாட்டம்(1)உ.ரிசி-4:4 - புரியாட்டகமான எட்டு ஆதார உறுப்புகள்
பூரங்கம்(1)உ.ரிசி-7:3 - மூச்சை வெளியேற்றுதல்
மாணா(1)உ.ரிசி-13:1 - மாணக்கேள்
மிலேச்சர்(1)உ.ரிசி-12:4 - நாகரிகமில்லாதவர்
மூலவட்டம் (2)உரோமரிசி-1:1, 8:3 - மூலாதரப்பகுதி
மெய்யேகாப்பு(1)உரோமரிசி-1:2 - வேதமுடிவுக்கு அப்பால் விளங்கும் மெய்பொருள் காக்க.
ரேசித்தல்(1)உ.ரிசி-4:1 - மூச்சை உள்வாங்குதல்
விண்ணாடி(1)உ.ரிசி-2:2 - வெளியை
வித்தை(1)உ.ரிசி-2:2 - அறிவு,திறம்,மந்திரம்
விருந்தம்(1)உ.ரிசி-3:2 - நரிவிருத்தம்
வெறுங்குடத்தில்(1)உ.ரிசி-12:4 - வெறும்குடம்
அடியோடு முடியும்(1)சூரியா.-9:1 - அடிமுடியாக இருப்பது
இருநூற்றைந்தில்(1)சூரியா.8:1 - இருநூற்றைந்து
இருபத்தைந்தில்(1)சூரியா.-8:1 - இருபத்தைந்து
ஆதிவுப்பே(1)சூரியா.-4:3 - ஆதிஉப்பே
உப்பே ஆதி(1)சூரியா.--2:1 - எல்லாவற்றுக்கும் மூலமான அந்த உப்புமிகுந்த காரம் உடையது
ஊசாரம்(1)சூரியா. 2:3 - சிறுநீர்
கருதையிலே(1)சூரியா-3:3 - கருதும்போது
காயசித்தி(2)சூரியா-9:1,10:1 - உடலை சித்தியாக்குதல்
கும்பகத்தை(2)சூரியா-13:2 - கும்பகம் அடக்கும் மூச்சு
குளிகைக்கு(1)சூரியா-13:4 - குளிகையால் அமிர்தம் உண்டாகுதல்
சகத்திரத்து(1)சூரியா-9:4 - சகஸ்ராரம் ஆகிய தலை உச்சியை நினைத்து
சகலசித்தும்(1)சூரியா--5:4 - எல்லாச் சித்தும்
சஷ்டிமுதல்பவுரணையும்(1)சூரியா-11:4 - சஷ்டி முதல் பவுர்ணமி வளர்பிறையில் நிகழும் நிகழ்வு.

